

# தமிழன் தொடுத்த போர்!

மா. இளஞ்செழியன் எம்.ஏ.,

முதல் இந்தி எதிர்ப்புப் போராட்ட வரலாறு

# தமிழன் தொடுத்த போர்!

முதல் இந்தி எதிர்ப்புப் போராட்ட வரலாறு

மா. இளஞ்செழியன்

@பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம்.ஏ.

## தமிழன் தொடுத்த போர்

சேரன் செங்குட்டுவன் பரம்பரை கனக — விசயர் பரம்பரையை வீழ்த்திய வீர காதை இது. 1937 முதல் 1940 வரை தமிழகத்தையே ஒரு குமுறும் உள்ளமாக, ஒரு கொந்தளிக்கும் கடலாக , சுழன்று சுழன்றடிக்கும் பெரியதோர் சூறாவளியாக மாற்றி அமைத்த இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் வரலாறு இது.

சண்டமாருதம் எனச் சீறி எழுந்து, நாடு நகரம் — பட்டி தொட்டி — சிற்றூர் பேரூர் எங்கணும் தன் இடி முழக்கத்தை எழுப்பித் தமிழ்நாட்டையே ஒரு குலுக்குக் குலுக்கிவிட்ட தமிழ்ப் போராட்டக் காட்சி இது.

தமிழ்நாடே !

நடராசனைப் பெற்றெடுத்த நன்னாடே ! தாளமுத்தை எமக்கு ஈந்த திருநாடே !

நடராசன்களும் தாளமுத்துக்களும் தோன்ற முதற்காரணமாயிருக்கும் தலைவர் பெரியாரையும் தளபதி பேரறிஞர் அண்ணாவையும் எமக்களித்த பொன்னாடே !

நீ வாழ்க!

உள்ளுறை

# இந்தி எதிர்ப்புப் போர் சர்வாதிகாரிகள்

(மொழிப் போரில் சென்னைப் பகுதிக்குத் தலைமை தாங்கி , இயக்கத்தை வெற்றிபெற நடத்தி, ஒருவர் பின் ஒருவராய்ச் சிறைப் பட்டவர்கள் இவர்கள்.)

| | | |
|---|---|---|
| முதல் சர்வாதிகாரி | | செ.தெ.நாயகம் |
| இரண்டாவது | | ஈழத்தடிகள் பி.ஏ. |
| மூன்றாவது | | கே. எம். பாலசுப்பிரமணியம் பி.ஏ., பி.எல். |
| நான்காவது | | ஜி. என். ராஜு |
| அய்ந்தாவது | | குடந்தை எஸ். கே. சாமி |
| ஆறாவது | | எம். எஸ். மொய்தீன் |
| ஏழாவது | | புவனகிரி நமசிவாயம் |
| எட்டாவது | | மாயவரம் சம்பந்தம் |
| ஒன்பதாவது | | காஞ்சி பரவஸ்து ஆச்சாரியார் |
| பத்தாவது | | பெரியகுளம் அரங்கசாமி |
| பதினொன்றாவது | | கந்தம் ரோசம்மாள் |
| பன்னிரண்டாவது | | என். மாரியம்மாள் |
| பதின்மூன்றாவது | | நெல்லை புலவர் இராமநாதர் |

# தமிழன் தொடுத்த போர் நாள் குறிப்பு

இந்தி புகுத்துவது பற்றி முதன் முதல் முதலமைச்சர் ஆச்சாரியார் குறிப்பிட்ட நாள் 10—8—87

இந்தி வேண்டாம் என்று இறுதி எச்சரிக்கை கொடுத்த சென்னை மாநிலத் தமிழர் மாநாடு திருச்சியில் கூடிய நாள் 26—12—37

அந்த எச்சரிக்கையை மீண்டும் வலியுறுத்திய சென்னை மாநில இந்தி எதிர்ப்பாளர் மாநாடு காஞ்சியில் கூடிய நாள் 27—2—38

இந்தி புகுத்தப்பட்ட நாள் 21—4—38

திருச்சிப் பாசறையில் இந்திப்போர் மந்திராலோசனைக் கூட்டம் கூடிய நாள் 28—5—38

இந்திப் போர் ஆரம்பம் 3—6—38

தமிழர் பெரும்படை புறப்பட்ட நாள் 1—8—38

தமிழ்நாடு தமிழருக்கே என்னும் முழக்கம் முதலில் எழுந்த நாள் 11—9—38

தளபதி அண்ணாதுரை சிறை சென்ற நாள் 26—9—38

மங்கைமார் முதலில் சிறை புகுந்த நாள் 14—11—38

போர்த் தலைவர் பெரியார் சிறை புகுந்த நாள் 5—12—38

தமிழ் வீரன் நடராசன் மாண்ட நாள் 14—1—39

தமிழ் வீரன் தாளமுத்து மாண்ட நாள் 12—3—39

தலைவர் பெரியார் விடுதலையான நாள் 22—5—39

இந்தி எதிர்ப்புத் தொண்டர்கள் திடீர் விடுதலை பெற்றது — முதல் முறை 7—6—39

இரண்டாம் முறை 15—11—39

காஞ்சியில் தமிழர் மீண்டும் போர் முரசு கொட்டிய நாள் 31—12—39

"இந்தி போகவில்லையேல் மீண்டும் போர்" என்று போர்த் தலைவர் பெரியார் இறுதி எச்சரிக்கை விடுத்த நாள் 19—2—40

கட்டாய இந்தி ஒழிந்த நாள் — தமிழன் வெற்றி பெற்ற நாள் 2 —2—40

# அணிந்துரை – தலைவர் பெரியாரிடமிருந்து!

என்னுடைய பல அவசர வேலைகளுக்கிடையே, தமிழன் தொடுத்த போர்' என்னும் இப் புத்தகத்திற்கு ஒரு முன்னுரை எழுதவேண்டிய பொறுப்பு ஏற்பட்டது. ஆகவே, இந்தப் புத்தகத்தில், ஆங்காங்கு சில பக்கங்களை, நுனிப்புல் மேய்வது போல புரட்டிப் பார்த்துக் கொண்டே போனேன். அப்படிப் பார்த்ததில், இதில், முன்பு தமிழ் நாட்டில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் நடைமுறைகளை வெகு கூர்மையாகத் துருவி ஆராய்ந்து, அதன் முக்கியப் பகுதிகளை நன்றாக விளக்கிப் போட்டிருப்ப தாகவே காணப்பட்டது.

இந்தப்புத்தகம், இதைப் படித்துப் பார்க்கிறவர்களுக்கு , இந்தி எதிர்ப்புப் போரைப் போல உடனே ஒரு போராட்டம் ஏற்படாதா , நமக்கும் அதில் ஒரு பங்கு கிடைக்காதா? என்கின்ற ஒரு ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் உண்டு பண்ணத் தக்கதாத இருக்கிறது.

உண்மையைச் சொல்ல வேண்டுமானால், இப் புத்தகத்தைக் கொஞ்சம் பார்த்த அளவிற்கே , எனக்கே , இந்தி எதிர்ப்புப் போன்றது தான் – ஏன் – அதைவிட முக்கியமான காரியங்களுக்கும் போராட வேண்டியது இன்றியமையாததாகக் காணப்படும் இக்காலத்தில் நாம் ஏன் சும்மா இருக்கிறோம் என்ற உணர்ச்சி ஏற்படுகிறது.

மேலும், இப்புத்தகத்தில், சிறிதுகூடப் பாரபட்ச உணர்ச்சி இல்லாமல் எல்லா விஷயங்களும் நடுநிலைமையில் இருந்தே தொகுக்கப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகம், நடந்தவைகளைத் தொகுத்திருக்கிறது என்பது மட்டுமல்லாமல், இனி யாராவது எதுபற்றியேனும் ஒரு போராட்டம் துவக்க வேண்டுமென்று கருதுபவர்களுக்கு ஒரு வழிகாட்டியாகவும் இருக்கிறது. மற்றும் இப் புத்தகத்திலிருந்து இப்போரின் தலைவர்களையும் தளபதிகளையும் வீரர்களையும் வீராங்கனைகளையும் தெரிந்து கொள்ளவும், அவர்களைப் பாராட்டவும், அவர்களுக்கு ஏற்பட்டது போன்ற வாய்ப்பை எதிர்பார்க்கவும்

திராவிட இளைஞர்களுக்கு ஒரு துடிதுடிப்பு ஏற்படும் என்றே கருதுகிறேன். இதை இயற்றிய ஆசிரியர் தோழர் இளஞ்செழியன்' அவர்களையும், இந்த வரலாற்றைத் தொகுத்த பகுத்தறிவுப் பாசறையினரையும், அவர்கள் எடுத்துக்கொண்ட இந்த நல்முயற்சியினையும், இதில் அவர்கள் பயன்படுத்தின நுண்ணறிவினையும் நான் மகிழ்ச்சியுடன் பாராட்டுவதோடு , தமிழ் மக்களின் சார்பாய், அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகம் ஒவ்வொரு தமிழர் இளைஞர் கையிலும் இருக்கவேண்டுமென்பது என் ஆசை.

— ஈ. வெ. ராமசாமி

## அணிந்துரை — அறிஞர் அண்ணாவிடமிருந்து !

தமிழகத்திலே காரிருள் ; தமிழ்த் தலைவர்களிடையே பூசல் ; தமிழ்ப் பெருங்குடி மக்களின் மனம் ஏறக்குறைய 'மரத்துப் போய்விட்ட நிலை; தமிழ்ப் பண்பு பற்றிய எண்ணம் கருகிக்கிடந்த வேளை. இந்தச் சமயமாகப் பார்த்து, தமிழையும் தொலைக்க , திட்டம் தீட்டினர் ஒரு சாரார் — துணிவுடன் மட்டுமல்ல — தாழ்ந்த தமிழகத்திலே, தங்கள் திட்டம் நிச்சயமாக வெற்றி பெற்றுவிடும் என்ற நம்பிக்கையுடன் ! "தமிழன், தனது உரிமைகள் பலவற்றை இழந்துவிட்டான் — இழந்தோமே என்று பதைக்கவும் காணோம் — இந்நிலையில் அவனுடைய மொழி இழி நிலைக்குத் தள்ளப்பட்டாலும் என்ன செய்வான் — செயலற்றுச் சிந்தனை யற்றுக் கிடக்கிறான் — செந்தமிழை அழிக்க ஓர் சூறாவளி யைக் கிளப்பி விட்டாலும் அவன் ஏதும் செய்யான் — ஏக்கம் கிளம்பினுங் கூட , என் செய்வது, இந்நாள் வரை தமிழுக்கு நன்னாள், இனி இல்லை போலும் என்று வாளா இருந்து விடுவான்" என்று எண்ணினர்; வேற்று மொழியை அரியா சனம் ஏற்றிட முனைந்தனர்.

இந்தியாவை ஒரு மொழியுடை நாடாக்கப்போகிறோம் என்று கூறினர்.

அம் மொழி இந்தி என்று இயம்பினர்.

அதனைத் தமிழர் , கட்டாயப் பாடமாகப் படித்தாக வேண்டும் என்று ஆணை பிறப்பித்தனர்.

அவர்கள், தமிழிருக்க , வேறு மொழியினுக்கு இவ்வகை ஏற்றம் தரத் துணிந்ததற்குக் காரணம், தமிழகம் சீர் குலைந்து, தமிழர்கள் மனம் உடைந்து போயிருந்ததுதான். இதற்கான ஆணைபிறப்பிக்கும் நிலையும் அதுபோது அவர் களுக்கு இருந்தது; ஆட்சியாளர்களாக அமர்ந்திருந்தனர். ஆச்சாரியார், அமைச்சர்.

தேர்தலிலே, வெற்றி மேல் வெற்றி கிடைத்தது — எதிர்த்து நிற்கொணாமல், பல்வேறு அரசியல் கட்சிகள் வீழ்ந்தன. எங்கு நோக்கினும், காங்கிரசுக்கே வெற்றி. எட்டு மாகாணங் களிலும் வெற்றி முரசு கொட்டினர். ஆச்சாரியார்,

சென்னைக்கு அமைச்சரானார். அவர் இட்டது தான் சட்டம், என்ற நிலை பிறந்தது. நாடு தங்களை இந்த அளவுக்கு ஆதரித்ததால், இனி எதுவும் செய்யலாம் — பலிக்கும் என்று எண்ணினர்; கட்டாய இந்தி என்ற திட்டத் தைப் புகுத்தினர்.

தூங்கிக் கிடந்த தமிழகத்தின், முதுகுக்கு அல்ல, தூய உள்ளத்துக்கு , இத் திட்டம் ஓர் சவுக்கடியாயிற்று. துள்ளி எழுந்தது தமிழகம், பிடரியைச் சிலிர்க்க விட்டபடி வெளி வரும் அரிமாபோல .

"எதுபோயினும் எமது மொழி ஒன்று இருப்பின் போதும் — தமிழ் , எமக்கு இனிமைதரும், உரிமை தரும், ஊக்கம் தரும், உலக மன்றத்திலே உயரிடம் பெற்றுத் தரும்" என்று கூறிவந்தவர்கள், திடுக்கிட்டுப் போயினர், தமிழ் நாட்டில், தமிழல்ல, தகுதியற்ற இந்தி கட்டாயப் பாடம் என்ற தாக்கீது பிறக்கக் கண்டு.

"தேர்தலிலே, காங்கிரசை ஆதரிக்கக் கடமைப் பட்டி ருக்கிறோம். ஏனெனில் அன்னிய ஆதிக்கத்தை ஒழிக்க அறப்போர் நடாத்தும் அஞ்சா நெஞ்சுடை வீரர் கோட்டமாகக் காங்கிரஸ் விளங்குகிறது; உரிமைக்காக உயிரைத் துரும்பென மதிக்கும் பண்புடைத் தமிழராம் எமக்கு இக் காங்கிரசே உற்ற தோழன்" என்று கூறினவர்கள்,

"ஏதேது, உரிமைகளிளெல்லாம் உயர்ந்த தாய் மொழி யினைப் போற்றும் உரிமையைப் பறிக்கவோ காங்கிரஸ் துணிகிறது; இதற்கோ நாம், இதனைக் கட்டிக் காத்துப் போற்றி வளர்த்தோம்; வளர்த்த கடா மார்பில் பாய்வது போலாயிற்றே! செந்தமிழைக் கெடுக்கும் இத் திட்டத் தைத் தமிழர் , தடுக்காது விடின், தமிழ் நிலைப்பதேது? தமிழ் இல்லையேல் தமிழரேது?" என்று எண்ணிக் கொதித்தனர்.

"காங்கிரசின் துணைகொண்டு, தமிழ்நாட்டுத் தருக் கரும் தன்னலக்காரரும், ஜாதி வெறியரும், வருணாசிரமி களும், தமது ஆதிக்கத்தைப் பல வழியாலும் பெருக்க முயல் வர் என்பதுண்மை — எந்நாட்டிலும், விடுதலைக்கெனப் பணிபுரியும் இயக்கத்தை இதுபோலத் தன்னலக்காரர் பயன் படுத்திக் கொள்ளவே எண்ணுவர்; சில சமயம் வெற்றியும் அடைவர் — இறுதிவரை அல்ல, துவக்கத்தில்; அது போன்றே இங்கும் நடைபெறும். ஆனால், தமிழரிட மிருந்து, சில உத்தியோகங்களை அவர்கள் பிடித்துத் தமதாக்கிக் கொள்ள

முடியுமேயன்றி, வேறு ஏதும் செய்ய முடியாது. தமிழரின் பண்பு , எந்தத் தன்னலக்காரரின் சூதினாலும் பாழ்படாது. இது உறுதி" என்று உளமார நம்பிக் கொண்டிருந்த பலருங்கூட , மொழிக்குக் குழிபறிக்கப் படுவது கண்டு , குமுறினர். அவர்கள் மனத்திலே , வெட்கமும் துக்கமும் கலந்து குடையலாயிற்று.

துறவு நிலையிலிருந்தவர்கள், தமிழன் தொன்மையை யும் அருமையையும் வெண்பாவிலும் அகவலிலும் கண்டு களித்துக் கிடந்தவர்கள், தமிழகத்திலே உரிமைத் தென்றல் வீசுகிறது என்று எண்ணிக்கிடந்தவர்கள் போன்ற பற்பல ருக்கும், கட்டாய இந்தித் திட்டம், புதியதோர் விழிப்பை உண்டாக்கிற்று.

ஒருவகை பதைப்பு — கொதிப்பு — ஆனால், என்ன செய் வது, எப்படித் தடுப்பது என்பதிலே தெளிவற்ற நிலை — திகைப்பு.

எதிர்பாராத தாக்குதல் — என்ன செய்வதென்று தெரிய முடியாத நிலை!

இந்தத் திகைப்புப் படலத்தைக் கிழித்தெறிந்து கொண்டு கிளம்பிற்று ஓர் சிரிப்பு — மகிழ்ச்சிச் சிரிப்பல்ல — கேலிச் சிரிப்பு. எல்லோரும் அந்தச் சத்தம் கிளம்பிய திக்கு நோக்கினர் , ஒரு கணம். கேட்டுக் கேட்டுப் பழக்கமான குரல் போலிருந்தது. மீண்டும் சிந்தனையிலாழ்ந்தனர்.

திகைப்பா? "இல்லையே!... சும்மா... யோசனை செய்கிறேன்"

குதிரை பறிபோன பிறகா? "யார் நீ கேலி பேசுகிறாய்?"

"என் பேச்சிலேதான் கேலி தெரிகிறது, ஏனப்பா , அதுதானே ! மற்றவரின் செயலிலே, நீ , காண்பது என்ன?

செயல்.. செயலா அது? செந்தமிழை ஒழிக்க ஒரு சூழ்ச்சித் திட்டம் அது."

"ஆமாம்! நீ , அதற்காக ஏன் ஆச்சரியப்படுகிறாய்? நடைபெறக் கூடாதது நடந்துவிட்டதாக , ஏன் எண்ணுகிறாய்? சேறு சந்தனமாக மணக்குமா? செங்காயிலே சுவை இருக்குமா? செந்தமிழ், ஆரிய ஆட்சியிலே தழைக் குமா? நீ தானே அந்த ஆட்சியை வரவேற்றாய்! உன் ஆதரவு பெற்றுத்தானே , அந்த ஆட்சி அரியாசனம் ஏறிற்று !"

"ஆமாம்! ஆனால் இதற்கா , நான் ஆதரித்தேன்?"

"இல்லை ! உன் தூய உள்ளத்திலே , வேறு ஏதோ , , நற்கருத்து இருந்தது தம்பி . ஆனால் உன் ஆதரவு கிடைத்தால், என்னென்ன செய்ய அந்த ஆட்சியாளர் முனைவர் என்று நான் முன்கூட்டியே சொன்னேனே ! கவனம் இல்லையா? ஆரிய ஆட்சி உதிக்கும்; தமிழரின் வாழ்வு மங்கும் ; உரிமை பறிபோகும் ; வடமொழிக்கே ஆக்கம் இருக்கும், என்றெல்லாம், சொன்னேன் .........."

"ஆமாம்..." "உதாசீனம் செய்தாய் ...." "உண்மைதான் ...."

தேசத் துரோகி என்று தூற்றினாய்...' "தூற்றினேன் ..."

"போனது போகட்டும், கண்களைத் துடைத்துக் கொள். தமிழைக் காப்பாற்ற வழி இருக்கிறது. அஞ்சாதே. இதோபார் இப்படி."

பார்த்தனர் ! வெண்ணிறத்தாடி காற்றில் அலைய , கைத்தடியுடன் நின்றார், தமிழர் தலைவர். கண்டனர் அவரை ! புயல் கிளம்பிவிட்டது. தமிழன் போர் தொடுத் தான். உலகிலே எங்கும் நடந்திராத போர் — மொழிப் போர் !

புதியதோர் அணிவகுப்பு ! காவி உடையினர், அவர் பக்கத்திலே காளைகள், பெண்கள், அவர்கள் இடுப்பிலே சிறு குழந்தைகள், பண்டிதர்கள், அவர்கள் பக்கத்திலே பள்ளி மாணவர்கள், காங்கிரசிலிருந்தோர், கட்சிகளுக்குப் புறம்பாக இருந்தோர், பலர் , பலவகையினர், சுருள் மீசையைத் தடவிக்கொடுத்துச் சூள் உரைத்த பாரதியார்', இனி மைக் குரலால், என் தமிழைக் காத்திடத் தவறேன் என்று பாட்டு மொழி பேசிய மறைமலை அடிகள்', முரட்டுக் கதர்ப் போர்வையும், முடுக்கு நிறைந்த பார்வையும் அணிசெய்ய, அறப்போரில் குதித்த ஈழத்தடிகள்', மருத்துவம் பிறகு , இப்போது தமிழ்ப் பாதுகாப்பு என்று கூறி, மாதர் படையினைத் திரட்டிக்கொண்டு வெளிவந்த டாக்டர் தர்மாம்பாள் அம்மை யார்', கவிதையைக் கருவியாக்கி இக்கயவரின் திட்டத்தைக் கருவறுப்பேன் என்று கூறிப் பணியாற்றிய புரட்சிக்கவிஞர்", பலர் , பலப்பலர், பல்வேறு துறையிலே இருந்தவர் , கூடினர் — எப்பக்கமிருந்தும் — மேலும் மேலும் ! படைவரிசை பலப் பட்டது — தமிழர் தலைவரின் பக்கம் நின்றது — தமிழ் வென்றது.

இந்த வரலாற்றினை, என் நண்பர் இளஞ்செழியன்', உணர்ச்சி ஊட்டக் கூடிய முறையில், இனிமையும் பயனும் உள்ள முறையில் இந் நூலில் தீட்டியுள்ளார்.

தமிழரின் இந் நாள் எழுச்சிக்கு இப்போரே முக்கியக் காரணமாக அமைந் தது. எனவே இந்த ஏடு , விழித்தெழு படலம்" தமிழரின் பெருங்காதையிலே ! இப் படலம் படிப்போர் உள்ளத்திலே உண்டாக்கும் ஆர்வம், அப் பெருங் காதையின் மற்றப் பகுதகளிலேயும் வெற்றி கிட்டும் வகையினைத் தமிழருக்குத் தரும் என்று நம்புகிறேன். இந்நூலின் மூலம், தமிழருக்கும், தமிழ் மொழிக்கும், நண்பர் இளஞ்செழியன் நற்றொண்டு ஆற்றியுள்ளார். என் பாராட்டுதல், தமிழரின் இல்லந் தோறும் இந் நூலிருந்து, உள்ளந்தோறும் உணர்ச்சியை ஊட்டி, இந்நாட்டின் மீது பூட்டப்பட்டுள்ள தளைகளை அறுத் தெறிதற்கான அறப்போர் புரியும் ஆற்றலைத் தருமாக. தரும் — நிச்சயம்! ஆம், இந்நூல் ஆசிரியர் , தமிழன் தொடுத்த போர் பற்றிய விளக்க உரை கூறியதோடு இல்லை , போர்வாள் தந்துவருகிறார். எனவே அவருடைய நற்றொண்டு நற்பயனைத் தரும், என்று கூறத்தேவையில்லை. தமிழகம் தழைக்க இந்த ஏடு பெரிதும் பயன்படும்.

தமிழ் வாழ்க !

— சி. என். அண்ணாதுரை

# 1. மற்றுமோர் சிலப்பதிகாரம் !

(இந்த முதற் பகுதியில், இந்தி எதிர்ப்பு ஊர்வலம் ஒன்றின் காட்சி தரப்படுகிறது. அதோடு இந்தி எதிர்ப்பு இயக்க வரலாறும் மின்னல் வேகத்தில் மிகச் சுருக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. விரிவு, 3 முதல் 10 முடிய உள்ள பகுதிகளில் .]

அதோ வெள்ளம் போல் திரண்ட தமிழர் கூட்டம்! வீரம் கொள் கூட்டம்! ஆயிரமாயிரம் இளங் காளைகளின் அணி வகுப்பு . செந்தமிழ் வீரர்களும் வீராங்கனைகளும் அணி அணியாய் நடந்துவரும் அழகு வரிசை , தமிழுக்கு மாற்றான் இழுக்குத் தேடினான் என்பதைக் கேட்டுப் பதைபதைக்கும் நெஞ்சமே அங்கு முழுதும். அவர்கள் உள்ளமெல்லாம் உணர்ச்சிக் களம்; முகமெல்லாம் புன்னகைப் பூந்தோட்டம்; சொல்லெல்லாம் தமிழ — அமுதத் தமிழ் ! அவர்கள் நினைப்பு முழுவதும் எந்த விலை கொடுத்தேனும் தமிழின் கொற்றத்தை நிலைநாட்டு வதில் தான்.

அவர்கள் ஊர்வலமாய் வருகிறார்கள். எங்கள் தாய்த் தமிழுக்கா ஆபத்து?"" என்று முழங்குகிறார்கள். மாற்றா னுக்கு — அவன் மொழிக்கு எங்கள் நாடு ஒப்பாது ஒப்பாது என்று ஒலிக்கிறார்கள். "இந்திக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கமாம் — நீங்கள் எல்லோரும் வாருங்கள் நாட்டினரே ; செந்தமிழ்க்குத் தீமை வந்த பின்னும், இந்தத் தேகம் இருந்தொரு லாபமுண்டோ ' என்று பசுந்தமிழில் பெரு வீரத்தைக் கலந்து பண் பாடுகிறார்கள். "தூரிகையும் எழுதுகோலும் தூய் தமிழர் நாவும் — மிகு தூய் தமிழர் நாவும், தொட்டு இயற்றும் அச்சுச் சாலை மற்றுமுள்ள யாவும், ஓரிடத்தும் தொடுவதுண்டோ இந்தியிலோர் எழுத்தை — அந்த இந்தியிலோர் எழுத்தை , என்று அழுத்தந் திருத்தமாய் உரைக்கிறார்கள். அங்கிருந்து கிளம்பும் "தமிழ் வாழ்க! இந்தி வீழ்க!" என்னும் ஒலி விண்ணைக் கிழித்துப் பெருந்தூரம் ஒலிக்கிறது; அதோ எதிரொலியும் கேட்கிறது.

இந்த ஊர்வலத்தை மீண்டும் பாருங்கள் . துடி துடிக்கும் உள்ளம் படைத்த இளஞ் சிங்கங்கள் — தமிழ் நாட்டின் தவப் புதல்வர்கள் தமிழுக்கு வெற்றி பெற்றே தீருவோம் என்று சூள் உரைக்கிறார்கள் ஒரு பால் . அழுங்குழந்தைக்கு 'இச்' என்று முத்தம் ஈந்து அதையடக்கித் தாய்மார்கள்

தமிழ் வெல்க' என்று ஒலிக்கிறார்கள் ஒருபால். அன்னைமார் முழக்கும் ஒலி கேட்டு அத்தமிழ்க் குழந்தை களும் மழலை மொழியால் தமிழை வாழ்த்தும் அரிய காட்சி ஒருபால். எங்களுக்கோ இந்தி கட்டாயம்? கொஞ்சமோ எங்கள் சுமை , குறையுண்டோ எங்கள் தமிழுக்கு" என்று ஆர்வமும் எழுச்சியும் கலந்த குரலில் கேட்கும் மாணவ மணிகள் ஒருபால். உயிர் எமக்கு வெல்லமல்ல, ஆனால் உணர்ச்சி எங்களுக்கு உயிர் என்று கூறிக்கொண்டு, தடியூன்றிக்கொண்டேனும் வருவோம் அன்றிச் செல்வோம் அல்லோம் என்று ஊர்வலத்துடன் வரும் முதியவர் கூட்டம் ஒருபால்.

இதோ இப் பக்கம் பாருங்கள், பாண்டியன் வளர்த்த தமிழ், சேரன்பால் செழித்த தமிழ் , சோழ வளநாட்டில் சிறந்து பொலிந்த தமிழ், எங்கள் தமிழ், இந்தத் தமிழுக்கா ஆபத்து என்று செந்தமிழால் கேட்கும் புலவர்கள் இம் மருங்கு. புலவர் கூட்டத்திற்கும் எமக்கும் பழம் பகை உண்டு, ஆனால் தமிழ் எனில் அது இருவர்க்கும் சொந்தம்' என்று புலவருடன் தோள் குலுக்கும் பகுத்தறிவாளர் கூட்டம் ஒரு மருங்கு. புலமையும் புதுமையும் கைகுலுக்கும் புதிய காட்சி கண்டு , தமிழ்ப்போரில் நமக்கும் பங்குண்டு என்று வரும் துறவிகள் ஒருமருங்கு. "மாங்குயில் கூவிடும் பூஞ் சோலை நமை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை என்ற பண் மிழற்றலே ஒவ்வொருவர் உள்ளத்திலும்.

மீண்டும் ஒருமுறை பாருங்கள்!* சேரன் வில்லும் சோழன் புலியும் பாண்டியன் மீனும் ஒன்றை ஒன்று தழுவ அங்குள்ளார் தோள்தோறும் பறக்கும் தமிழ்க் கொடியைக் காணுங்கள். அதை உயர்த்திப் பிடிப்பதிலே அவர்கட் குள்ள மகிழ்ச்சிப் பெருக்கைப் பாருங்கள். அவர்கள் முகத்திலே கூத்தாடும் களிப்பு, தமிழ் தந்த சிறப்பு என்பதை நினைத்துப் பாருங்கள்.

தலை நிமிர்ந்து பாருங்கள் ! பண்டிதரும் பாமரரும், சைவரும் வைணவரும், புத்துலகச் சிற்பிகளும் பழங்காலக் கருத்தினரும், முதியவரும் இளையரும், ஆடவரும் பெண்டிரும், முஸ்லிம்களும் கிறித்தவர்களும் அத்தனைத் தமிழரும் ஒருங்கே ஆரவாரித்துச் செல்லும் அழகிய காட்சியைக் காணுங்கள். மேலும் பாருங்கள். வேறுவேறு திறத்தவர், வேறுவேறு மதத்தவர் , வேறுவேறு கொள்கையினர் அத்தனைப் பேரும் புடை சூழ, தளபதிகள் தொடர்ந்துவர, சுற்றிலும் செந்தமிழர் வாழ்த்துக் கூற , அன்னைமார் ஒரு மருங்கு வீர ஒலி கிளத்திவர, ஏறு நடை நடந்து வருகிறார் அதோ ஒரு வெண் தாடி வேந்தர் .

ஓய்வு என்பதை அறியாது தமிழ்நாடு முழுவதும் சுற்றிச் சுழன்று வீர முழக்கம் புரிந்து வரும் அந்தக் கிழச்சிங்கம் — தூங்கிக் கிடந்த தமிழர் சமுதாயத்தைத் தட்டி எழுப்பிய அத் தன்னேரிலாத் தலைவர் — தமிழர் பெரு மதிப்பிற்குரிய பெற்றியர் — சொந்த வாழ்வை மறந்து தமிழர் வாழ்வையே தம் வாழ்வாகக் கொண்டுவிட்ட பெருந்தகை — ஆம் — தமிழ் நாட்டின் சிந்தனைச் சிற்பி பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்கள் தான் அந்த மாபெரும் ஊர்வலத்தை நடத்தி வருகின்றார்கள். அவரை வாழ்த்தும் ஒலி தமிழ் வாழ்த்துடன் பின்னிப் பரந்து பொலிகிறது. அவரை வாழ்த்தாத வாயும் நினைக்காத நெஞ்சும் அங்கில்லை. எப்படித்தான் இருக்க முடியும்? அவர் தீட்டிய திட்டம், வகுத்த வழி , துவக்கிய கிளர்ச்சி , தொடுத்த போர் , ஏற்றிய கொடி , இட்ட முழக்கம் — இவற்றின் தொகுப்புத்தானே அக் கண்கொள்ளாக் காட்சி! சென்ற முப்பதாண்டுகளாக அவர் பட்ட பாட்டின் பயன் தானே அத் தமிழர் எழுச்சி!

ஆம்! இந்தக் காட்சி இந்தி எதிர்ப்பு இயக்கக் காட்சி தான்! 1937 முதல் 1940 வரை தமிழகத்தையே ஒரு குமுறும் உள்ளமாக — ஒரு கொந்தளிக்கும் கடலாக — சுழன்று சுழன்றடிக்கும் பெரியதோர் சூறாவளியாக மாற்றி அமைத்ததே அந்தத் தமிழர் இயக்கக் காட்சிதான். சண்ட மாருதம் எனச் சீறி எழுந்து, நாடு நகரம் — பட்டி தொட்டி — சிற்றூர் பேரூர் எங்கணும் தன் இடி முழக்கத்தை எழுப்பி, தமிழ் நாட்டையே ஒரு குலுக்குக் குலுக்கிவிட்ட தமிழ்ப் போராட்டக் காட்சிதான். அந்தக் காட்சியை யார் மறக்க முடியும்?

"தமிழ்ப் பகைவன் தமிழைச் சாய்க்க எண்ணினான்; தமிழன் சீறி எழுந்தான்; சிங்கமெனப் போரிட்டான்; இடியேறென வல்லோசை கிளப்பினான்; தடைக் கற்கள் உண்டென்றாலும் தடம் தோள் உண்டு என வீரச் சிரிப்புச் சிரித்தான். தமிழுக்கா தீங்கிழைத்தார் பகைவர் என்று பற்களை நறநறவெனக் கடித்தான். அவ்வளவுதான் — தமிழ்ப் பகைவன் பொடிப் பொடியாய் உதிர்ந்து போனான்' என்னும் அந்த வீரகாதை தமிழர்க்கு மற்றுமோர் சிலப்பதிகாரம் அல்லவா? தமிழன் அதையா மறக்க முடியும்? ; அதை மறக்கவா முடியும்? அந்த வீர வரலாற்றைத் தமிழன் தன் இதயகீதமாக மாற்றிக் கொண்டான். அதை மறக்க மாட்டான். அது அவன் நெஞ்சிலே என்றும் நிழலாடிக் கொண்டுதான் இருக்கும். அவனுடைய எதிர்காலத்திற்கு அந்த வரலாறு ஒரு கலங்கரை விளக்கம்

என்பது தமிழனுக்குத் தெரியும். தெரிந்ததால் தான் இன்றைக்கும் இந்தி எதிர்ப்பு இயக்கம் என்றாலே தமிழனுடைய அகமும் முகமும் மலர்கின்றன.

ஒரே வார்த்தையில் சொல்வதானால் சேரன் செங்குட்டுவன் பரம்பரை, கனகவிசயர் பரம்பரையை வீழ்த்திய வீரகாதைதான் இந்தி எதிர்ப்புப் போராட்டம்! ஆம், அதுதான் உண்மை .

வீரகாதை ! முன்னை நாள் தமிழனின் பெருவீரத்தை நினைப்பூட்டும் வீரகாதை ! தமிழனின் அஞ்சாத நெஞ் சுரத்தை, அசையாத உறுதியை , மலை குலையினும் மனங்குலையாத அந்த மாவீரத்தை எடுத்துக்காட்டும் வீரகாதை! எம் அம்பு கடிவிடுதும், நும் அரண் சேர்மின்" என்று மாற்றார்க்கெல்லாம் முன்கூட்டியே எச்சரிக்கை தந்து தமிழன் சீறிப் போரிட்டானே சிங்கமென அந்த வீரகாதை வீரகாதை தான் அது! அட்டியென்ன அதற்கு? திண்தோள் மறவனல்லவா தமிழன்? அவன் தொடுத்த போர் வீரகாதையாய் அன்றி வேறென்னவாய் இருக்கமுடியும்?

1937! தமிழ்வானில் போர் மேகங்கள் சூழ்ந்த ன. தமிழ் நாட்டில் காங்கிரஸ் ஆட்சி அரசு கட்டில் ஏறிற்று. செந்தமிழ் மொழி அழிக்கச் செத்த வடமொழி இங்கு திணிக்கப்படும் — அதுவும் மாணவர் பால் — அதுவும் 10, 12 வயதுள்ள பச்சைப் பிள்ளைகள் பால் — அதுவும் இந்தி எனும் மாற்றுருவில் என்று கேள்விப் பட்டான் தமிழன். "இந்திதானே ! திணிக்கப்படட்டுமே, பட்டால் என்ன? எப்பக்கம் வந்து புகுந்துவிடும் — இந்தி எத்தனைப் பட்டாளம் கூட்டி வரும்" என்று வீராவேசத் துடன் கேட்டான். 'அற்பமென்பேன் அந்த இந்திதனை, அதன் ஆதிக்கந்தன்னைப் புதைத்திடுவேன்' என்று வீர ஒலி செய்தான். என் நாட்டார் இரண்டரை கோடி உண்டு எதற்கும் அஞ்சாத வீரர் அவர்' என்று விடை இறுத்தான்.. "என் உடல்மேல் உருள்கின்ற பகைக்குன்றை நான் ஒருவனே உதிர்ப்பேன்* என்னும் பண் முழக்கினான். 26 — 12 — 37—ல் திருச்சிப் பாசறையில் தமிழன் முழக் கினான், அந்த வீர முழக்கம் நாடு முழுவதும் கேட்டது!

1938 பிப்ரவரி ! கட்டாய இந்தி, தமிழர் உள்ளக் கொதிப்பை உணராத ஆச்சாரியார் ஆட்சியினரால் புகுத்தப்பட்டுவிட்டது. கண்டான் தமிழன் ; நெஞ்சங் குமுறினான் ; நிமிர்ந்து நின்றான் ; கொந்தளிக்கும் உள்ளமே கொஞ்சம்

துடுக்கடங்கிக் கிட' என்று ஆணையிட்டான் ; பீடுநடை நடந்தான். பின் என்ன? போர்முரசு கொட்டி விட்டான் காஞ்சீபுரத்தில், 27—2—38—ல்

1938 மே ! "சேனை ஒன்று தேவை, பெருஞ்சேனை ஒன்று தேவை, செந்தமிழைக் காப்பதற்குச் சேனை ஒன்று தேவை என்று தமிழன் ஒரு மொழி புகன்றான். அவ்வளவு தான். எங்கிருந்தெல்லாமோ போர்க் கோலம் பூண்ட படை மறவர் அணி அணியாய் வந்தனர். இனிய தமிழ் உணர்ச்சியால் உந்தப்பட்ட காளைகள் திரள் திரளாய் வந்தனர். நாட்டின் நானா பக்கங்களிலிருந்தும் தளபதிகள் வந்தனர். எங்கள் தமிழ் வெல்க என்று முழங்கிய வண்ணம் மங்கைமார் வந்தனர். புத்துலகப் பாதையில் தமிழகத்தைப் புகுத்தும் சுயமரியாதைச் சூறாவளிப் படையினர் வந்தனர். சொல் லெல்லாம் செந்தமிழாய்ச் செழுந் தமிழாய்ச் சலசலவெனப் பாய்ச்சிவிடும் பண்புடைய புலவர் தாமும் வந்தனர். இது காறும் பொது வாழ்வில் ஈடுபாடு கொள்ளாதார் பற்பலரும் ஓடோடி வந்தனர்.

தமிழன் இவ்வரிய காட்சியினைக் கண்டான் களித்தான் ; களிப்புடன் களிப்பாய்க் களம் அமைத்தான்.

1938 ஜூன் 3! தொடங்கிற்றுப் போர் ! சிறைச்சாலை செந்தமிமிரைக் கூவி அழைத்தது. புன்முறுவல் பூத்த முகத்துடனே தமிழர் சிறைக்கோட்டம் புகுந்தனர். அவர்கள் சிறிதும் அஞ்சவில்லை ; சற்றேனும் முகஞ் சுளிக்கவில்லை. வீரம் ஒன்றே விளங்கிற்று அவர்பால்.

ஜூலை ஆகஸ்ட் செப்டம்பர் அக்டோபர் நவம்பர் என்று மாதங்கள் பல உருண்டன. மொழிப்போர் — தமிழ் நாட்டையே ஒரு பெரும் போர் — அரங்கமாய் மாற்றி அமைத்து மறு கோலம் செய்துவிட்டது. எங்கெங்கும் ஊர்வலங்கள், பட்டி தொட்டியெல்லாம் பெருங்கூட்டம். கடற்கரை எல்லாம் தமிழன் பாடி வீடு / கல்லூரி எல்லாம் பாசறை ! தெருவெல்லாம் தமிழ் முழக்கம்! தமிழ் வீடெல்லாம் போர்ப் பாட்டு! தமிழர் நெஞ்செல்லாம் அஞ்சாமை ! அப்பப்பா ! சிறைச்சாலை செல்வோரும் போர் முழக்கம் புரிவோரும் தாக்கீது விடுப் போரும் நாட்டினர்க்கு உண்மை நிலை உரைப்போரும் அல்லவா எங்கும் நிறைந்து விட்டனர். எங்கு பார்த்தாலும் தமிழ் ! தமிழ்' என்னும் பெருமுழக்கம் அல்லவா கேட்கிறது! அடடாவோ அடடா ! தமிழரெலாம் தமிழ் வாழ்வே வாழத் தொடங்கிவிட்டார்!

டிசம்பர் 1938. நிலை கண்டார் ஆட்சியினர்; அஞ்சினார். இத்தனையும் போர்த் தலைவர் பெரியாரின் செயல் அன்றோ என்று எண்ணினார்; அவ் ஆண்டகையைச் சிறைபிடித்தால், நாட்டின் உணர்ச்சியெலாம் அடங்கி விடும் என்று பொய்க் கனவுங் கண்டார் ; அறுபது வயதுங்கடந்த அப்பெருந்தகையைச் சிறையும் பிடித்தார் ; மூன்றாண்டுக் கடுங் காவல் உமக்கு என்று நெஞ்சில் ஈரமில்லாது பொய்த் தீர்ப்பும் புகன்றுவிட்டார்.

1939! இதுகாறும் தலைவர் பெரியாரின் கட்டுக்கு அடங்கிக் கிடந்த தமிழர் இந்நாள் கட்டுமீறிய காளைகள் எனக் களம் நோக்கிச் சென்றனர் ; தம் பெரு வீரம் காட்டினர். இதுவரையில் அமைந்து கிடந்த தமிழர் கோபக் கனல், இதுபோது கனன்று எரிந்து பெருந் தீயாய்த் திக்கெட்டும் பரவி, எதிர்ப்பை எலாம் சிறிதும் மிச்சமின்றி சுட்டுப் பொசுக்கத் தொடங்கிவிட்டது. கொந்தளிக்கும் கடலாக இருந்த தமிழ்நாடு, பெரியாரின் சிறை வாசத்தால், பெருங் கோபம் கொண்டு சுழன்று சுழன்று அடிக்கும் சண்டமாருதமாய் மாறிவிட்டது. ஆம், தமிழ் நாடு ஒரு பெரிய கோபாவேசம் கொண்ட எரிமலையாய்த் தான் காணப்பட்டது. தமிழர் உணர்ச்சி வீறுகொண்டு அஞ்சி நடுங்கினர் ஆட்சியினர். பெரியாரைச் சிறை வைத் ருப்பது கமக்க போாபக்தை விளைவிக்கும் என்று உணர்ந் தனர். 22—5—39—ல் அச் சிந்தனைச் சிற்பியை விடுதலை செய்துவிட்டனர். ஆட்சியினரா விடுதலை செய்தனர் — இல்லை — தமிழர் உணர்ச்சிப் பெருக்கு அவரைத் தம்பால் மீட்டுக்கொண்டது. பிறகென்ன? பெரியாரின் விடுதலை நாள் ஆதிக்க ஆட்சியின் வீழ்ச்சி நாள் என்றாகிவிட்டது. அக்டோபரில் ஆட்சி கவிழ்ந்தது; நவம்பரில் சிறை சென்ற தோழரெலாம் விடுதலை ஆயினர்.

1940! வெற்றி முரசு கொட்டினான் தமிழன்! தமிழைச் சாய்க்க வந்த இந்தி வீழ்ந்தது. தன்னை அழிப்பாரை அழித்தது தமிழ். ஆரியம் தலை கவிழ்ந்தது. கவிழவே தான், தமிழன் அன்பும் ஆர்வமும் ததும்ப , வெற்றிக் களிப்பு அவன்பால் கூத்தாட , பீடுநடை நடந்து சென்றான். தமிழே நீ வாழ்க என்றான் 'தமிழென்று தோள் தட்டி ஆடு — நல்ல தமிழ் வெல்க வெல்க என்றே தினம் பாடு , என்று பண் இசைத்தான். பண் இசைத்துக் கொண்டே வெற்றிப் பாதையில் விரைந்து நடந்து போனான்............. ...... போகிறான் ......... அதோ

போய்க் கொண்டிருக்கிறான், அவனுடைய இலட்சிய பூமியை நோக்கி? புதிய தமிழகத்தை நோக்கி! இன்பத் திராவிடத்தை நோக்கி!

இப்போது நீங்களே சொல்லுங்கள், இந்த வீரகாதை தமிழனுக்கு மற்றுமோர் சிலப்பதிகாரமா அல்லவா?

தமிழன் பொறுத்துப் பொறுத்துதான் பார்ப்பான், ஆனால் பகைவர் செயல் பொறுமையின் எல்லையை மீறிவிட்டால், வேங்கைக் காட்டில் நரி ஆட்சியா என்று தமிழன் வீர முழக்கம் செய்யத் தொடங்கிவிட்டால், எலி எனத் தன்னை இகழ்ந்தவர் நடுங்க , புலி எனச் செயல் செய் அவன் புறப்பட்டுவிட்டால் பின்னர் அத்தனை எதிர்ப்பும் தவிடு பொடி என்பதை இவ்வரலாறு விளக்கிக் காட்டிவிட்டதா இல்லையா!

தமிழன் சாது தான். ஆனால் சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பதை இந்த அறப்போர் தெள்ளத் தெளிய உணர்த்திவிட்டதல்லவா?

பகைவர் கோட்டை எத்துணைப் பலம் பொருந்திய தாய்த்தான் இருக்கட்டுமே. அது அறமுறை பிழைத்தது என்று கண்டுவிட்டால், அதனை வெடி வைத்துத் தகர்த்தெறியத் தமிழன் ஒரு சிறிதும் தயங்கமாட்டான் என்பதை இந்த அரிய போர் , திட்டமாய்த் தெரிவிக்கிறது அல்லவா?

ஆம், இது வீர காதைதான்! இந்த வீர காதையை இனி , சற்று விளங்கக் காண்போம்.

# 2. குமுறும் எரிமலை

[ஆரியம் தமிழ் நாட்டில் நுழைந்த வகையும், தமிழர் கலை — மொழி — நாகரிகம் — வாழ்வியல் இவற்றை அது சிதைத்த வகையும், தமிழர் ஆட்சி ஆரிய ஆட்சியாக உருமாறிய விந்தையும், அவ்வக் காலத்தில் புரட்சி வீரர் பலர் ஆரியத்தின் ஆணவத்தை எதிர்த்தொழிக்க புரட்சிப் பொறி கிளப்பிய வரலாறும், பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து நடந்துவரும் அந்தப் பரந்துபட்ட ஆரிய திராவிட போராட்டத்தின் ஒரு பகுதியே இந்தி எதிர்ப்பு இயக்கம் என்பதும், இந்தி எதிர்ப்பு இயக்கமும் 1923 முதலே நடந்து வருவது என்பதும், அது இன எழுச்சியை அடிப் படையாகக் கொண்ட ஒரு சிறந்த கலாச்சார இயக்கமே தவிர சிலர் நினைப்பது போல வெறும் அரசியல் கிளர்ச்சி அல்லவென்பதும் பிறவும் இந்தப் பகுதியில் விளக்கப் படுகின்றன.)

"சமஸ்கிருத பாஷையில் பேசுவதும் சமஸ்கிருத வார்த்தைகளை உச்சரிப்பதும் ஒருவனைக் கலாச்சாரத்தில் உயரச் செய்யும் என்பது நிச்சயம். எனவே நீங்கள் சமஸ்கிருதம் கற்றுக் கொள்ள வேண்டும். ஆனால் இது மிகச் சிரமமான காரியம். உங்களுக்கு அவகாசம் கிடையாது. எனவே சமஸ்கிருதத்திலிருந்து பிறந்த ஹிந்துஸ்தானியைக் கற்றுக் கொள்ளுங்கள்."' (* தினமணி 2—2—46. பக்கம் — 3 பத்தி 5. ) என்று காந்தியடிகள் 1—2—1946—ல் சென்னை கோடம்பாக்கம் ஹரிஜன கைத்தொழில் பள்ளிக் கூடத்தில் பேசுகையில் அங்குள்ள ஆதித் திராவிட மாணவர்களுக்கு அறிவுறுத்தினார்.

"சமஸ்கிருதத்திலிருந்து பிறந்த ஹிந்துஸ்தானியைக் கற்றுக் கொள்ளுங்கள்!' — இந்த ஒரு வாக்கியத்தில் எவ்வளவோ புதை பொருள்கள் மறைந்து கிடக்கின்றன. பலநூறு இரகசியங்கள் உள்ளீடாய் அமைந்து கிடக்கின்றன. இந்தி எதிர்ப்பு இயக்கம் அவ்வளவு மும்முரமாய் மூண்டெழுந்த காரணம் என்ன என்பதற்குரிய கருத்து விளக்கம் இந்த வாக்கியத்திலிருக்கிறது. எத்தனையோ சமுதாய இழிவுகளைப் பொறுத்துக் கொண்டிருந்த தமிழன் இந்தக் கட்டாய இந்தியை மட்டும் ஏன் அவ்வளவு வீராவேசத்துடன் எதிர்த்து நின்று போரிட்டான் என்பதற்குரிய அடிப்படைக் காரணம் இதிலே இருக்கிறது.

"சமஸ்கிருதத்திலிருந்து பிறந்த ஹிந்துஸ்தானி" ஆம்! (இந்துஸ்தானி ) இந்தி சமஸ்கிருதத்திலிருந்து பிறந்தது! இந்தி சமஸ்கிருதத்தின் மாற்று வடிவம்!

மறுபதிப்பு ! இன்னொரு பெயர் ! சமஸ்கிருதம் மாண்டு மறைந்துவிட்டது — அதன் இன்றைய உருவம் இந்தி. சமஸ்கிருதம் தான் தமிழன் வாழ்வை வாட்டி வதைத்தது. அதன் மாற்றுருதான் இந்தி மொழி. பின் ஏன் தமிழன் இந்தியை எதிர்க்கமாட்டான்.

சமஸ்கிருதம் எனும் ஆரிய மொழி, அதனைத் தாய் மொழியாகக் கொண்ட ஆரியர், அந்த ஆரியர் போற்றி வளர்த்த வேத புராண இதிகாசக்கலை , அந்தக் கலையிற் பிறந்த ஆரிய வருணாசிரம நாகரிகம் — இவற்றின் கூட்டுத் தொகைதான் தமிழன் சீர்கேடு . இதை எந்தத் தமிழனும் — அவன் எந்த அரசியல் கட்சியில் இருந்தாலும் சரி — மறந்துவிட முடியாது. ஒருவேளை சூழ்நிலையின் காரணத்தால் மறக்க நேர்ந்தாலும் மறுக்க முடியாது. தவறி மறுப்பானாயின் அவன் தமிழனாய் இருக்க முடியாது. எதை வேண்டுமானாலும் தமிழன் பொறுத்துக் கொண்டிருப்பான். ஆனால் யாரேனும் தன் உயிர் நாடியை அழிக்கத் தொடங் கினால் — தன் தாய்மொழியை வளமிழக்கச் செய்தால் — தமிழுக்கு ஆபத்துச் சூழ்ந்தால் — அதை மட்டும் அவன் பொறுக்கமாட்டான். இது அவனுக்கு வரலாறு புகட்டிய பாடம்.

ஆரிய நாகரிகம் தமிழன் வாழ்வைச் சிதைக்கத் தொடங்கிய அந்தக் காலத்தில் முதன்முதல் ஆரியத்தின் நோக்கம் தமிழன் மொழி மீதுதான் பாய்ந்தது. தமிழன் தன் மொழியை இழந்தால் பிறகு தன் கலையை, வாழ்வை , நாகரிகத்தை , நாட்டை ஆகிய அத்த னையையும் இழந்துவிடுவான் என்பதை நன்குணர்ந்த அந்த நாள் ஆரியம் எடுத்த எடுப்பில் தமிழ் மொழியை வீழ்த்தத்தான் திட்டமிட்டது. ஆரியச் சூழ்ச்சியின் விளை வாகத் திருமுதுகுன்றங்கள் விருத்தாசலங்களாயின. மறைக்காடுகள் வேதாரண்யங்களாய் உருவெடுத்தன. திருக்கழுக்குன்றங்களும் திருவானைக்காக்களும், பக்ஷி தீர்த்தங்களாய் ஜம்புகேஸ்வரங்களாய் மாற்று வடிவம் அடைந்தன.

நெடுஞ்செழியன் என்றும், செங்குட்டுவன் என்றும், இளமுருகன் இளவழகன் இளஞ்செழியன் இளவெயினி இராவணன் (இரா வண்ணன் — கருப்பு நிறத்தான்) என்றும், கண்ணகி காவற்பெண்டு காக்கைபாடினியார் ஒக்கூர் மாசாத்தியார் வெண்ணிக் குயத்தியார் என்றும், கீரன் இளங்கீரன் நச்சினார்க்கினியன் மாறன் பொறையன் ஓரேருழவன் பிசிராந்தை என்றும், பாரி

ஓரி ஆய் அதியமான் கோச்செங்கணான் கோவூர் கிழான் கரிகாலன் என்றும், மாவளவன் மலையமான், மதியழகன் மணிமொழியன் மணக்குடவன் என்றெல்லாம் இனிய அழகிய தூய தண்தமிழ்ப் பெயர் வாய்ந்திருந்த தமிழர் , ஆரியருடைய மயக்குரையால் ஏமாந்து, அவர்தம் மொழிவழிச் சென்று, அவர் இசைத்ததை இசைத்துத் தம் பெயரைச் சடாக்ஷரரூபன் என்றும், சஹஸ்ர நாமம் என்றும், ஸ்வயம்புலிங்கம் என்றும், லக்ஷ்மிகாந்தன் என்றும், கோதண்டபாணி கோபாலகிருஷ்ணன் கோஸ்வாமி கிருபானந்தவாரி என்றும், ஆதிகேசவன் வெங்கடாசலம் தாமோதரம் ஸ்ரீனிவாசராகவன் ராஜாபாதர் ராமானுநுஜம் ராகவேந்திரன் என்றும், பக்தவத்ஸலம் பாலசுப்பிரமணியம் பாலதண்டாயுதம் என்றும், சிவஸ்வாமி இராமஸ்வாமி கோபாலஸ்வாமி முத்துக்குமாரஸ்வாமி முனுஸ்வாமி என்றெல்லாம் மாற்றிக்கொண்டனர். தனித் தமிழைக் காண்பதும் கேட்பதும் அரிதாய்விட்டன. தமிழ் வாழ்வு என்பதே தமிழுலகில் எங்கும் காணோம் என்றாய்விட்டது.

தமிழ்மொழியில் ஆரியக் கலப்பு நாளுக்கு நாள் பெரு கிற்று. அவ்வளவுக்கவ்வளவு தமிழ்வாழ்வு தலை கவிழ்ந்தது.

தொல்காப்பியத்தில் விரல் விட்டெண்ணக்கூடிய இரண்டொரு வடசொற்களே அருகி வழங்கின. கலித் தொகையில் குறுந்தொகையில் அகத்தில் புறத்தில் பிற சங்க நூற்களில் நூற்றுக்கு இரண்டு விழுக்காடும், பின்னே எழுந்த திருக்குறளில் மூன்று விழுக்காடும், இன்னும் பின்னே எழுந்த சிலப்பதிகார மணிமேகலைகளில் ஆறு விழுக்காடும், பத்து பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில் எழுந்த தேவார திருவாசகங்களில் 15 விழுக்காடும், வில்லிபாரதம் கம்பராமாயணம் கந்தபுராணம் இன்ன பிற நூல்களில் 20—25 விழுக்காடும், மிகப் பிற்காலத்தே எழுதப்பட்ட தலபுராணங்களில் 50 விழுக்காடும், இன்னும் பின்னே எழுந்த திருப்புகழ் முதலியவற்றிலும் இன்றைக்கு வெளிவரும் ஆனந்த விகடன் கல்கி முதலிய ஏடுகளில் 60, 70 விழுக்காடுமாகத் தமிழில் ஆரியக் கலப்பு நாளுக்குநாள் வளர்ந்துவிட்டது.

இன்றைக்குத் தமிழன் கற்கும் அறிவுக் கலை நூல்களெல்லாம் ஆரியக் கலை நூல்களாகவே உள்ளன. அறிவு நூல் படிப்பதில்லை தமிழன். விஞ்ஞானம் தான் படிக்கிறான். நிலநூல் பயில்வதில்லை அவன் — பூகோளம் தான்

பயில்கிறான். தமிழ்நாட்டு வரலாறு அவனுக்குத் தெரியாது. "இந்துதேச சரித்திரம்' தான் தெரியும்.

பூதத்துவ சாஸ்திரத்தைப் புரட்டிப் பார்ப்போம். (நில நூலை அல்ல!) அக்ஷ ரேகை, நிரக்ஷா ரேகை, தீர்க்க ரேகை , மத்தியான்ன ரேகை , அயன சந்தி, அக்ஷாம்சம், சமராத்திரகாலம், உத்தர கோளார்த்தம், தக்ஷண கோளார்த்தம் உத்தராயனம், தக்ஷணாயனம், மஹா சமுத்திரம், பூசந்தி, 'ஜலசந்தி, சீதோஷ்ணம், ஜனத்தொகை , கண்டம், உபகண்டம், தேசம், பிரதேசம், பீடபூமி ஆகிய இச் சொற்கள் தாம் காணப்படும். இவை தமிழா;

விஞ்ஞான சாஸ்திரத்தையும் பார்ப்போம். அதோ மஹாசிரை, ஊர்த்துவ மஹாசிரை , தராதர குருத்துவம், ஜல பரிமாணம், கன பரிமாணம், கந்தகி காமிலம், கந்தகிலோஜனி , தூகேது, கரியமில வாயு, ஹரிதகயுதி, சூரியன், சந்திரன், பிரபஞ்சம், பரமாணு, நக்ஷத்திரம், சலனஸக்தி, ஸ்தான ஸக்தி, திரவமானி , பாரமானி , உதஜனி , இப்படித்தான் இருக்கும். இச் சொற்களின் வடிவம் தமிழ் வடிவமா?

கணக்கு நூலைக் கொஞ்சம் 'ருசி" பார்ப்போம். அங்கும் இதே கதைதான். அக்ஷர கணிதம், பீஜ கணிதம், தசாம்சம், பின்னம், தசாம்ச பின்னம், தகு பின்னம் , தகாபின்னம், திரிகோணம் , சமபுஜ திரிகோணம், விஷம்புஜ திரிகோணம், சமத்விபுஜ திரிகோணம், அநுரூப திரிகோணம், சமாந்தர சதுர்புஜம், சதுரம், விஸ்தீரணம், சமசதுரம், சமசதுர விஸ்தீரணம், சாம்யம், விகித சாம்யம், ரணராசி — தனராசி இன்ன பிற , இன்ன பிற ! இவற்றின் உருவம் தமிழ் உருவமா, ஆரிய உருவமா

இசைக்கலை செங்கீத சாஸ்திரமாய் மாறிற்று! அய்யகோ! இங்கிருப்பது தமிழ்தானா? சங்கீதம், சாஹித்யம், கச்சேரி, காலக்ஷேபம், கீர்த்தனை, ஸ்ருதி, ஆரோகணம், அவரோகணம், ஆலாபனை, ஆஹாஹாரம், பிர்க்கா, அவாத்ய ஸாதகம், ராகம், ராகபாவம், கிருதி, ஸாரீர சௌகர்யம், சங்கதி , ஸாரீரகாத்திரம் , பைரவி, தன்யாசி, ஸரஸ்வதி, கானடா, சங்கராபரணம், ராகமாலிகை , ஷண்முகப்பிரியா, அடாணா, முகாரி, கௌளை , பூர்விகல்யாணி, ஸித்தரஞ்சனி , ஜகன் மோகினி — "இத்தியாதி இத்தியாதி " இப்படியும் ஒரு தமிழ் உண்டா ?

உற்சவம், மகோத்ஸவம், ரதோற்சவம், பிரம்மோத் சவம், ஸ்வாமி, தேவாலயம், கும்பாபிஷேகம், அபிஷேகம், நாமாவளி , சஹஸ்ரநாம அர்ச்சனை, மூர்த்தி , ஸ்தலம், யாத்திரை , லக்ஷதீபம், தீபாராதனை, சமாராதனை, மோக்ஷதீபம், துவஜஸ்தம்பம், துவஜா கடவுள் ரோஹணம், கர்ப்பக்ருகம், — அர்த்த ஸ்வாமியானார் மண்டபம், ப்ரகாரம், ஸமாதி , விமானம், தீர்த்தம், கோபுரம், ஸப்பரம் , பிரபை, பதி, பாரம், நடராஜ் மூர்த்தி, உபாசனாமூர்த்தி, ஜம்புகேஸ்வரர், மல்லிகேஸ்வரர், மகேஸ்வரர் . ருத்ரகோடீஸ்வரர் . கச்சாலேஸ்வரர், ஏகாம்பரேஸ்வரர், அர்த்தநாரீஸ்வரர், வையாபுரீஸ்வரர், வை தண்டநாதன், மோக்ஷம், நரகம், ரௌரவாதி நரகம், வைகுண்டம், கைலாசம், அதள சுதள பாதாளம், உத்தர கிரியை. விவாஹசுபமுகூர்த்தம். ருது சாந்தி, பாவம், புண்ணியம், ஜன்மாந்தர கர்மம் — இன்பத் தமிழ், இளமைத் தமிழ், தென்னாட்டுத் தேன்மொழித் தமிழ் இப்படியா இருக்கும்? ஸ்ரீ , ஸ்ரீமான் , ஸ்ரீமத் , ஸ்ரீயுத . மா — ஸ்ரீ , ஸ்வாமி ஸ்ரீ , ஜகத்குரு , காமகோடி பீடம் — இதன் பெயர் தானா தமிழ்?

பிறநாட்டார் பிடிப்பிலிருந்து நம்மை நாம் மீட்டுக் கொள்ள முனைந்திருக்கிறோமே, விடுதலைப்போர் விளைப்பதாகப் பெருமை பாராட்டிக்கொள்கிறோமே, நம் நாடு, நம் நிலை, நம் பொருள், நல் வாழ்வு என்றெல்லாம் சொல்லிக்கொள்கிறோமே — அந்த அரசியல் அரங்கில் தான் என்ன? அங்கு வழங்கும் சொற்கள் எல்லாம் வட சொற்கள் தாம். ஆரிய தேவியின் நடனம்தான் அங்கு முழுதும். சுய ஆட்சி , சுயராஜ்யம், பூரண சுயராஜ்யம், பரிபூரண சுயராஜ்யம், சுதேசி , விதேசி , காதி வஸ்திராலயம், அகில இந்தியா, அந்நிய ஆதிக்கம், இராஜாங்க சபை, இராஜப் பிரதிநிதி சபை , நிர்வாக சபை, ஜனப் பிரதிநிதி சபை , மந்திரிசபை, அக்கிராசனாதிபதி, உப அக்கிராசனாதி, ஜனாதிபதி, பிரதம மந்திரி , கல்வி மந்திரி, சுகாதார மந்திரி , விவசாய மந்திரி , மராமத்து மந்திரி , சர்வாதிகாரி, காரியதரிசி, உப காரியதரிசி, பொக்கிஷதார், உபந்யாசம், பிரசங்கம், சம்பாஷணை , வந்தனோபசாரம் , பேட்டி , உபசரணைப் பிரசங்கம், உபயகுசலோபரி, சமஸ்தானம், சுதேச சமஸ் தானம், சமஸ்தானாதிபதி, ஹரிஜனம், ஆலய ப்ரவேசம், சர்வஜனப் பிரதிநிதித்வம், இராணுவ அபிவிருத்தி, இராஜோபசாரம், சோடசோ சாரம், ராஜீயம் , ராஜீய வியவகாரம் , ராஜீய சமிக்ஞை , ராஜீய

முக்யத்வம், சிப்பந்தி, உத்தியோகம், பிரகடனம் , ஜாபிதா , விஜயம், விஷேச அதிகாரம், இலாகா , தாக்கீது, உத்தரவு, பிரயோகம், அபிப்பிராய பேதம், பிரதிதினம், ராஜீனாமா , அங்கீகாரம் , மஹாநாடு , பிரம்மாண்டம், நிபந்தனை ஸ்ரீமான் பொதுஜனம், பாரத தேவி, தினசரி , பத்திரிகை , வந்தேமாதரம், ஜேய் ஹிந்த், ஜெய கோஷம் , ஜெயபேரிகை , ஸ்வதந்திரபூமி, தேச பந்து, லோக குரு, மஹாத்மா, பாபுஜீ , நேதாஜீ , லோகமான்யா, சாந்த சொரூபன், தேசோத்தாரகர், தேச சேவகர் — இவை எல்லாம் என்ன செந்தமிழா?

இத்தகைய ஆரியக் கலப்பால் தமிழ் மொழி தன் வளர்ச்சி குன்றி , அழகிழந்து , தனக்கென்றே உரிய தனிப் பண்பு கெட்டு , வளஞ் சுருங்கி நின்றது.

தமிழ் மொழிச் சிதைவு தமிழ்நாட்டுச் சிதைவாயிற்று; தமிழ்க் கலையின் சிதைவாயிற்று; தமிழர் நாகரிக வாழ் வியலின் சிதைவாயிற்று. ஒரு நாட்டு மக்களின் உயிர் நிலை அவர்களின் மொழியே . அம்மொழி சீர்கேடுற்றால் அம் மக்களின் வாழ்வும் வளமும், நாகரிகமும் நிலையும், கொள்கையும் கோட்பாடும் சீர்கேடுறும். தமிழ்நாடு இவ் விதிக்கு விலக்கன்று — இங்கும் இதுதான் நேர்ந்தது.

ஆரிய மொழி — கலை — நாகரிகத்தால், தமிழ்மொழி பெற்ற வீழ்ச்சி பிறகு எல்லாத் துறைகளிலும் பரவிற்று. ஆரியர் வருகைக்கு முன் இந்தியா முழுதும் பரவி இருந்த தமிழ் ஆரியத்தின் சேர்க்கையால் தென்னாட்டளவில் நின்றுவிட்டது. தமிழ் நாட்டின் ஒரு பகுதியில் வழங்கிய தமிழுடன் ஆரியம் மிகக் கலந்தது. அத் தமிழ் தெலுங்காயிற்று. ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னே தெலுங்கு பிரிந்தது. மற்றொரு பகுதித் தமிழுடன் ஆரியம் கலந்து, கலந்ததன் விளைவாகக் கன்னடம் பிறந்தது. ஆயிரத்து அய்நூறு ஆண்டுகட்கு முன்னே தமிழினின்றும் கன்னடம் பிரிந்தது. எழுநூறு ஆண்டுகட்கு முன்னே மலைநாட்டுத் தமிழர் , ஆரிய மொழிக் கலப்பால் தனிமொழி கண்டார். அது மலையாளமாயிற்று. இங்ஙனம் மூன்று பெரு மொழிகள் பழந்தமிழ் அல்லது திராவிட மொழியினின்று பிரிந்தன. மூன்று பெரு மக்கள் பழந்தமிழர் அல்லது திராவிடக் குடும்பத்தினின்று பிரிந்தனர். எனவே , ஆரியக் கலப்பால் தமிழ் வழங்கும் நிலம் குறைந்தது; தமிழர் தொகை குறைந்தது; தமிழர் நாடு சுருங்கிற்று. இது ஆரியம் விளைத்த கேடு.

"மூல மென்றே சொல்லல் முத்தமிழாம் ;

புவி மூர்க்கம் தவிர்த்ததும் அப் புத்தமுதாம்;

ஞால மெல்லாம் தமிழ் தமி ழர்களே ,

புவி நாமெனவே குதித்தாடுவமே *

கவிஞர் பாரதிதாசன் — "இசையமுது

என்று புலவர்கள் பொன்னுரை புகல்வது போல இந்தியத் துணைக் கண்டம் முழுதும் ஒரு காலத்தில் வழங்கிய தமிழ் , பின்னே விந்தியத் தளவில் நின்று, இன்னும் பின்னே , "வடவேங்கடம், தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகம் (பனம்பாரனார் — தொல்காப்பியப் பாயிரம்) என்று நிலை சுருங்கி, இன்னும் பின்னே மற்றும் பல பகுதி களை இழந்து , தேய்ந்துவிட்டது. இது ஆரியம் தந்த கேடு.

ஆரியர் வருகைக்கு முன் தமிழ் நாட்டில் சாதி இல்லை . "எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓர் நிறை எல்லாரும் இந் நாட்டு மன்னர்' என்னும் பரந்த மனப்பான்மை தமிழ் நாட்டில் அரசோச்சிற்று. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதே அந்த நாள் தமிழர்க்குத் தாரக மந்திரம் " இட்டார் பெரியார் இடாதார் இழிகுலத்தார் என்பதன்றி அன்னார் வேறு சாதிப் பகுப்பை அறிந்தன ரில்லை. 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்றே அவர் மறை முழங்கிற்று. தமிழ் பெற்ற காளைகாள் சாதி இல்லை" என்று அந்த நாள் புலவர்கள் மக்கட்குக் கூறினர். அத்தகைய பெருவாழ்வு வாழ்ந்த தமிழரிடையேதான் — ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்னும் அழகுமொழி பேசிய தமிழரிடையேதான் — ஒரு கூட்டமக்களாய் , ஒன்று பட்ட உளத்தராய் , வேறுபாடு காணா நெஞ்சினராய் வாழ்ந்த தமிழரிடையேதான் , ஆரியம் புகுந்து ஆயிரமாயிரம் பொதுச் சாதி, அவற்றுள் பல உட்சாதி என்ற தத்துவத்தை நுழைத்தது. யாதும் ஊரே யாவரும் கேளிர் என்று எந்த நாட்டில் ஆரியர் புகுமுன், புலவர்கள் பொன் மொழி புகன்றனரோ, அதேநாட்டில் ஆரியர் புகுந்தபின், புலவர்கள் ஆயிரம் உண்டிங்கு சாதி என்று கவிபாட நேர்ந்தது. அன்பொன்றே வேண்டும் யார்க்கும் என்னும் மொழி பரவிய நாட்டில் தீண்டாமையும், பாராமையும், நெருங்காமையும், உடன் உண்ணாமையும் வந்து புகுந்துவிட்டன. சாதி குலம் சமயமெனும் சுழிப்பட்டுத் தடுமாறா உளத்தராய்ச் சிறந்து

பொலிந்த தமிழரிடையேதான் ஆரிய வருணாசிரமதர்மம் நுழைந்தது; பாலிடை நஞ்செனப் பெருங்கேடு விளைத்தது.

தமிழர் கலையும், ஆரியர் வருகையால், இனக்கொலை யில் முடிந்தது. இயற்கையை இளமையை இன்பத்தைப் பாடிய தமிழர் , பொய்யைப் புளுகைப் புராணத்தைப் பாடத் தொடங்கினர். காலைச் சுடரொளியை — மாலை மதியத்தை — மங்கைமார் காதலை — அன்பு நெஞ்சத்தை — அதிற் பிறந்த அஞ்சாமைச் செல்வத்தை — நீலச் சுடர்மணி வானத்தில் நிறைந்து பெருகிய நல்லழகை — தமிழின் திறத்தை தமிழ் வாழ்வின் வளத்தை — இன்ன பிற தன்மை களை முன்னே அழகோவியங்களாய்ச் சித்திரித்த தமிழன், பின்னே ஆறுமுக அண்ணலையும் ஆனைமுக ஆண்டவ னையும் நான்முகத் தேவனையும் ஈராறுகையனையும் மட் டுமே சித்திரிக்கத் தொடங்கினான். நற்றிணையை, நல்ல குறுந்தொகையை, அய்ங்குறு நூற்றை, ஒத்த பரிபாடலை, ஓங்கு கலித்தொகையை, அகநானூற்றை, புறநானூற்றை உலகிற்கு அளித்த தமிழன் , பின்னே இராமன் கதையையும் கிருஷ்ணன் லீலையையும் காலைத் தூக்கி நின்றாடும் நடராச தத்துவத்தையுமேதான் அளிக்க முடிந்தது. உள்ளத்தின் உள்ளே படிந்து கிடக்கும் அழ குணர்ச்சிகளை எல்லாம் அடுக்கடுக்காக எடுத்தெடுத்துப் பல பாடலாய்த் தொடுத்தளித்தான் சங்கப் புலவன். அறிவிற்கு ஒவ்வாத போலிப் புனைந்துரைகளையும் பொருந்தாப்புளுகுகளையும் ஒட்டவைத்துக் கவி பாடினான் புராணப் புலவன். வாழ்க்கையின் பல சிக்கல்களையும் சிறப்புகளையும் உள்ளது உள்ளவாறே செந்தமிழில் தீட்டிக் காட்டிய தமிழ்க் கலைஞன் பின்னே போலிக் கடவுளரின் ஆபாசத் திரு விளையாடல்களையே படப்பிடிப்புச் செய்தான். ஆற்றில், புனலின் ஊற்றில், கனியின் சாற்றில், தென்றல் காற்றில், நல்ல ஆற்றல் மறவர் செயலில், பெண்கள் அழகில், கற்பில், உயர்வைக்கண்ட தமிழன் பின்னர் காமதேனுவிடமும் கற்பக விருட்சத்திடமுமே உயர்வு கண்டான். திராவிடப் பழங்குடி மக்களை, அவர்களது முன்னோர்களை , ஆரியத்தை வெறுத்த அந்த நாள் திராவிடர் தலைவர்களைக் குரங்குகள் என்றும் அரக்கர்கள் என்றும் இரக்கமிலார் இழிதகவுடையார் என்றும் தாசர்கள் அடிமைகள் தஸ்யூக்கள் சூத்திரர்கள் என்றும் இழித்துரைக்கும் ஏடுகளை — வெட்கம் வெட்கம் — தமிழர்களே எழுதத் தொடங்கினர். திராவிடரை (தமிழரைத்

தாழ்த்தியும், ஆரியரை உயர்த்தியும், பொய்யும் புளுகும் புனைந்து கட்டியும், கண்ட இடத்தெல்லாம் காம வெறி விளப்பியும் செல்வதையே முழுநெறியாகக் கொண்ட கம்பராமாயணங்களும் ஆரியனுக்கொரு நீதியும் திராவிடனுக்கொரு நீதியும் ஆண்டவனே வகுத்ததாக அறிவுறுத்தும் பெரிய புராணங்களும் கூட செந்தமிழர் நாட்டிலே எழுந்தன நம்மை — நம் இனத்தை — இன மூதாதையரை — இழித்துப் பழிக்கும் இவற்றை வெறுத்துக் கொளுத்தித் தீய்ப்பதற்குப் பதிலாக இவற்றையே நமக்குரிய ஒழுக்க நூல்களாகவும் மார்க்க போதனைகளாகவும் மதச் சட்டங்களாகவும் வாழ்க்கை வழிகாட்டிகளாகவும் கொள்ளுகின்ற தவறிய தமிழர் நாளுக்கு நாள் நிறைந்து பெருகினர். ஆரியம் செந்தமி ழகத்திற் புகுந்து தமிழர் சிந்தையைச் சிதைத்ததால் விளைந்த கேடுகள் இவை எனில் இல்லை என்பார் யார்?

ரோமரோடும் கிரேக்கரோடும் வாணிபஞ்செய்து வளம் பெருக்கிய தமிழ்நாடு பின்னே ஆரிய சேர்க்கையால், இந்த உலகு மாயை என்று சொல்லி அந்த உலக வாழ்க்கை சிறப்புறவே திட்டம் தீட்டிற்று. திரைகடலோடியும் திரவியம் தேடு என்னும் பழமொழி மறைந்து பணம் என்னத் திற்காம், பணம் பிணத்திற்காம்' என்னும் மொழி பரவிற்று. உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன் என்னும் சொல் சிறப்புற்ற நாட்டில் காயமே இது பொய்யடா வெறும் காற்றடைத்த பையடா' என்னும் சொல் சிறப்புற்றது. ஆண் உயர்வென்பதும் பெண் உயர்வென்பதும் நீணிலத் தெங்கணும் இல்லை என்று கூறிய தமிழ் நாடு , பின்னே ஆரியர் கொள்கையை ஏற்று மங்கைமார் வாழ்விற்கு அடிமைத்தளை பூட்டிற்று. காதல், வீரம் என்னும் இரண்டுருளையால் நடப்பது வாழ்க்கை என்னும் அறிவுத் தெளிவு மாண்டு மறைந்தது. மதபக்தி, சமயக்கிறுக்கு என்னும் இவ்வளவில் வாழ்க்கை அடங்கிவிட்டது என்னும் தவறிய கருத்து எங்கும் பரவிற்று.

தமிழர் மணச்சடங்கு பிணச்சடங்கு பிறசடங்குகளில் ஆரிய மொழியும் பழக்க வழக்கமும் விதிமுறையும் புகுந்தன. பல ஆரிய சடங்குகள் தமிழ் நாட்டிற் குடி புகுந்தன. ஆரியக் கடவுளர்க்குத் தமிழ் நாட்டில் கோயில்கள் எடுக்கப்பட்டன. தமிழர் கட்டிய கோயில்களில் ஆரிய மதமும் ஆரிய வேள்வியும் ஆரிய சடங்கும் ஆரிய மொழியும் கொலுவீற்றிருக்கத் தலைப்பட்டன. ஆரியம் கலவாத தமிழ் மதிப்பிழந்தது; ஆரியஞ் சேராத சடங்கு ஒப்பப்படவில்லை ;

ஆரியம் நுழையாத கோயில் ஒதுக்கப் பட்டது. எங்கும் ஆரிய முழக்கம்! எங்கும் ஆரிய உயர்வு! எங்கும் ஆரியத்திற்கு வணக்கம், வாழ்த்து!

ஆரிய சூழ்ச்சி தமிழ் வீரத்தை வென்றது. தமிழ் வேந்தர் பற்பலரும் ஆரியர்க்கு ஏற்றம் கூறி, அவர் வாழத் தாம் வாழ்ந்து, அவர் உயரத் தாம் உயர்ந்தனர். தமிழ்க் கலைகளைப் போற்றி வளர்க்க அவர்கள் அஞ்சினர். ஆனால் ஆரியமத — உபாக்கியானங்களை நாடு முழுதும் பரப்பினர் மாவட்டந் தோறும் வேதபாராயண பாடசாலை எழும்பிற்று. ஊர் தோறும் சதுர்வேதி மங்கலங்கள் கிளர்ந்தெழுந்தன. நாடு நகரங்களை ஆளுதற்குரிய அய்ம்பெருங் குழுக்களும் எண்பேராயங்களும் ஆரிய ஆட்சி மண்டலங்களாயின. கிராமப் பஞ்சாயத்துகள் பார்ப்பனிய வளர்ப்புச் சாலை களாயின. *ஊர் ஆட்சி (Village Self Government) பார்ப்பனச் சேரியிடமே ஒப்படைக்கப்பட்டுவிட்டது. வரி தண்டுதல், வரி உயர்த்தல் — குறைத்தல், வழக்கு விசாரித்தல், நீதி வழங்குதல், குளம் வெட்டுதல், ஏரி நிலை காத்தல், ஊர்ப்பொது ஆட்சி , இத்தனையும் கிராம சபையார்க்கு உண்டு. அதில் அந்தணர் மட்டுமே (திருவள்ளுவர் சொன்ன அந்தணரல்ல! பிறவி அந்தணர்!) உறுப்பினராகலாம். ஏரி வாரியமும் (Tank Committee) பொன்வாரியமும், (Finance Committee) தோட்டவாரியமும் (Garden Committee) பிறவாரியங்களும் ஆரியவாரியங்களே ஆயின. (இதுபற்றிய விளக்கம் வேண்டுவோர் 10—12 நூற்றாண்டுகளில் அரசு ஓச்சிய பராந்தகன், இராசராசன். இராசேந்திரன் முதலிய சோழ மன்னர் கல்வெட்டுகளையும், க. அ. நீலகண்ட சாஸ்திரியார் எழுதி உள்ள சோழர்கள்" என்னும் புத்தகங்களையும் காண்க.)

சோழ வேந்தர்கள் பத்தாம் நூற்றாண்டிலேயே தேர்தல் முறையைக் கைக்கொண்டிருக்கிறார்களே கிராம சபைக்கு உறுப்பினர்களைத் தேர்தெடுக்க — அது அவர்களுடைய அறிவுத் திறனைக் காட்டுகிறது. கிராமசபை உறுப்பினர் ஆதற்குரிய தகுதியை அவர்கள் தீர்மானித்தது இருக்கிறதே அது, அவர்களுடைய அறிவு ஆரியத்திடம் அடகு வைக்கப்பட்டது என்பதை விளக்குகிறது. கிராம சபை உறுப்பினராக ஒருவன் 35 வயது நிரம்பி இருக்க வேண்டும் — சரி. 70 வயதுக்கள் இருக்க வேண்டும் — சரி. கால் வேலிக்குக் குறையாத நிலம் இருக்க வேண்டும் — அதுவும் சரி : இவை மட்டுமா? வேத

மந்திரங்களையும் உப நிஷத்துகளையும் தெரிந்திருக்கவேண்டும். அல்லது ஒரு வேதமும் ஒரு வேத பாஷ்யமும் தெரிந்திருக்க வேண்டும் (ஆர். சத்தியநாதய்யர் : இந்திய வரலாறு (A Politi cal and Cultural History of India))

பதினோராம் நூற்றாண்டில் சோழ அரசர்கள் தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த எண்ணாயிரத்தில் ஒரு பெரிய கல்விக்கழகம் கண்டனர். அங்கே 140 மாணவர்கள் கலை பயின்றனர். 14 ஆசிரியர்கள் அறிவு புகட்டினர். ஆசிரியர்கட்கும் மாணவர்கட்கும் தினந்தோறும் நெல் அளந்து தரப்பட்டது. உபகாரச் சம்பளம் வேறு தரப் பட்டது . 45 வேலி நிலம் அக் கல்லூரிக்கு அளிக்கப்பட்டது. வேதங்களும் சமஸ்கிருத இலக்கணமும், (ஆரியருடைய) மீமாம்ச வேதாந்த தத்துவங்களுமே அங்கு சொல்லித் தரப் பட்டன!.... பாண்டிச்சேரிக்கு அருகில் உள்ள திருபுவனத்திலும் சோழ அரசர்கள் ஒரு கல்லூரி ஏற்படுத்தினர். 72 வேலி நிலம் அதற்கு அளிக்கப்பட்டது 260 மாணவர்களும் 12 ஆசிரியர்களும் அங்கு இருந்தனர். இதிகாசங்களும் மனுதர்ம சாஸ்திரமும் அங்குக் கற்பிக்கப்பட்டன. பன்னிரண்டாம் நூற்றாண்டுச் சோழ அரசர்கள் திருவாவடுதுறையில் ஒரு கலைமன்றம் கண்டனர். அங்கு (வட மொழியில் உள்ள) சாரக சமிதை , அஷ்டாங்க இருதய சமிதை இரண்டும் பாடங்கள்! தமிழ் வேந்தர் ஆரியத் திற்கு அடிபணிந்ததற்கு இன்னும் என்ன சான்று தேவை? (உத்திரமேரூர் கல்வெட்டு : பராந்தக சோழன் ' தீட்டியது. மை புத்தகம் பக்கம் 454.)

வேறு என்ன குறை தமிழனுக்கு? தமிழ் மக்கட் பெயர் வடமொழியாயிற்று; தமிழர் ஊர்ப்பெயர் வடமொழி யாயிற்று; தமிழர் இல்லத்துப் பெயர் வடமொழியாயிற்று; தமிழ் நாட்டுக் கோயில்களின் பெயர்வடமொழி ஆயிற்று; தமிழ் நூற்களின் பெயர் வடமொழி ஆயிற்று; பல சொல்வானேன்? தமிழ்க் கழனி முழுவதும் ஆரியக் கள்ளி படர்ந்துவிட்டது

“இத்தனைக்கும் தமிழன் பொறுத்துக்கொண்டா இருந்தான்? அவன் நெஞ்சு கொதிக்கவில்லையா இது கண்டு? வீரம் விம்மிதமுடன் விளையாடும் அவனுடைய வெற்றித் தோள்கள் சும்மாவா இருந்தன? அவன் மனம் ஒப்பிற்றா இக் கேட்டை?" என்றுதானே கேட்கிறீர்கள்.

ஒப்பிற்று! ஒப்பவில்லை !

பெரும்பாலான தமிழர் ஆரிய சூழ்ச்சிக்கு இரையாயினர். எனவே ஒப்பினர் இக்கேட்டை. ஆரிய மக்கட்குத் தமிழ் அரசர் தந்த செல்வாக்கும், ஆரிய மதத்திற்குத் தமிழ்ப் புராணிகர்கள் பாடிய பாசுரமும், ஆரிய வாழ்விற்குத் தமிழ்க் "கம்பன்கள் " தந்த அணிந்துரையும் கண்டு ஏமாந்த தமிழ்ப் பொது மக்கள் ஆரியர்க்கு அன்பளிப்புத் தந்தனர்! ஆரிய சடங்கு ஏற்றனர் ! ஆரிய மதம் தழுவினர் ! ஆரியக் கலை பயின்றனர்! ஆரிய நாகரிகத்தைத் தம் நாகரிகமாய்க் கொண்டனர்

இதை ஒப்பவில்லை உண்மைத் தமிழ் வீரர் கூட்டம்! அவர்கள் புரட்சிப் பொறி கிளப்பினர் ! "ஆரியம் வீழ்க" என ஒலித்தனர் ! சிங்கத்தின் குகையில் சுண்டெலிக்கு என்ன வேலை? என்று முழங்கினர்! "இல்லை, முடியாது, ஆரியத்திற்கு இணங்கமாட்டோம்" என்று அழுத்தந்திருத்தமாய் உரைத்துவிட்டனர் — உரைக்கின்றனர் இன்றும்.

2500 ஆண்டுகட்கு முன்னர் அறங்கிடந்த நெஞ்சுடைய அரசிளங்குமரர் புத்தர் புரட்சிப் பாசுரம் இசைத்தார். யாகமா — கூடாது என்றார். உயிர்க் கொலை வேள்வியா — அது தீது என்று உரைத்தார். சாதி வேற்றுமையா — நான் ஒப்பவில்லை என முழக்கினார். பறையர் என்றொரு கூட்டமா — தகாது என நவின்றார். வேத புராண இதிகாசம் பயின்றால் தான் ஞானியா — அந்த ஞானியை நான் வேண்டேன் என்று கூறிவிட்டார். ஆரிய வஞ்சகம் புத்தர் புரட்சியைத் தந்திரத்தால் வென்றுவிட்டது.

'1800 ஆண்டுகட்கு முன்னே திருவள்ளுவர் தமிழ் பேசினார்! அஞ்சாத செஞ்சொல்லை வீசினார்! 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்று ஒரு புரட்சி மொழி புகன்றார். அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செசத்து உண்ணாமை நன்று — யாகம் தீது என உரைத்தார். ஆரியம் பல நூறு கடவுளர் உண்டு என்றது. திருவள்ளுவர் ஒரே சடவுளை ஒப்பினார். கடவுளுக்குப் பல உருவமும், உருவத்திற்குச் சிலையும், சிலைக்கு உற்சவமும், தேரும் திருவிழாவும் கற்பித்தது ஆரியம். உருவமும் பேரும் அற்ற ஆண்டவனை மட்டுமே வழிபடுக என்றார் வள்ளுவர்.

ஏறத்தாழ அதே காலத்தில் கபிலர் எனும் பெரும் புலவர் ஆரியக் கோட்டையில் அதிர்வேட்டு கிளப்பினார். இறந்த நம் மூதாதையர்க்குந் சாயும் கறியும் அனுப்புதிறார்களே" பாப்பனப் புரோகிதர்கள் அதன் பொய்ம்மையை

அருமையாக விளக்கிக் காட்டினார். **பார்ப்பன மாந்தர்காள்! பகர்வது கேண்மின். இறந்தவராயுமை* இவ்விடை (இந்த உலகில் ) இருத்திப் பாவனை மந்திரம் பல உரைத்தே, உமக்கவர் புத்திரர் ஊட்டினபேரது, அடுபசியாற் குலைந்து ஆங்கவர் மீண்டு , கையேத்தி நிற்பது கண்டதர் புகலீர்! அருந்திய உண்டியால் ஆர்பரி கழிந்தது? '** என்று சாடினார். திதி என்று சொல்லி , இறந்த எம்முடைய மூதாதையர்க்கு உணவென்று சொல்லி, எம்மிடம் அரிசி பருப்பு பெற்றீரே! அதை நீரே உண்டீரே! உண்டதால் யார் பசி தீர்ந்தது? உம் பசியா, எம் முன்னோர் பசியா, கூறுங்கள் என்று துருவித் துருவிக் கேட்டார் புரோகிதப் புரட்டர் கூட்டத்தை நாங்கள் தான் பிரமன் முகத்தில் பிறந்தவர்கள். வேதமோதும் உரிமை எங்கட்கே உண்டு, அறிவும் ஆராய்ச்சியும் எங்கள் சொத்து" என்று கொத்தரித்த ஆரியரைக் கொஞ்சம் துடுக்கடங்கிக் கிடங்கள் என்றார் கபிலர். "**ஒட்டியர் மிலேச்சர் ஊணர் சிங்களர், இட்டிடைச் சோனகர் யவனர் சீனத்தர் , பற்பலர் நாட்டிலும் பார்ப்பார் இலையால்** ." — அங்கெல்லாம் பார்ப்பனர் இல்லையே ஆனால் அறிவும் ஆராய்ச்சியும் இல்லையோ என்று கடாவினார் கபிலர் . "நால்வகைச் சாதி இந் நாட்டில் நீர் நாட்டினீர்" என்று ஆரியர்க்கு இடித்துரைத்தார். சிறப்புஞ் சீலமும் அல்லது பிறப்பு நலந் தருமோ பேதையீரே " என்று அறிவு கொளுத்தினார். மேல்வகை கீழ்வகை விளங்குவது ஒழுக்கால்" (ஒழுக்கத் தால்) சாதியால் அல்ல என்று உரைதெருட்டினார். கபிலர் அந்தக் காலத்துச் சுயமரியாதைக்காரர்!

1500 ஆண்டுகட்கு முன்னே திருமூலர் தோன்றினார். ஆயிரம் உண்டிங்கு சாதி என்றது பார்ப்பனீயம். "**ஒன்றே குலம்'** ' என்றார் திருமூலர். ஓராயிரம் கடவுளுண்டு என்றது பார்ப்பனீயம். **ஒருவனே தேவன்** என்றார் திருமூலர். உடல் அநித்யம்; உலகம் மாயை ; உடம்பை வளர்க்காதே" என்றது பார்ப்பனீயம். உடம்பார் அழியின் உயிரார் அழிவார் ; உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்றார் திருமூலர். பார்ப்பனர் மட்டுமே தேவ பூசை செய்யலாம் என்றது பார்ப்பனீயம். 'பேர் கொண்ட பார்ப்பான் பிரான் தன்னை அர்ச்சிக்கில், போர் கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம், பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமும் ஆம்" என்றே திருமூலர் தெரிந்துரைத்தார். எத்தனை எத்தனையோ செயல்களைக் கடவுள் செயல் என்றது பார்ப்பனீயம். அவை பெரிதும் மனிதர் செயலே என்று விளக்கினார் திருமூலர். (ஆண் குழந்தை வேண்டுமானால்

ஆண் குழந்தையும் பெண் குழந்தை வேண்டுமானால் பெண் குழந்தையும் கடவுள் துணையின்றி மக்களே பெற்றுக்கொள்ள முடியும் என்று கூட திருமூலர் குறிப்பிடுகிறார்.) கோயிலும் கோபுரமும் கொட்டு முழக்கமும் ஆண்டவனுக்குத் தேவை என்றது பார்ப்பனீயம். நடமாடுங்கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில் படமாடுங் கோயில் பரமற்கு அஃது ஆமே" என்றார் திருமூலர்.

500 ஆண்டுகட்கு முன்னே சித்தர்கள் வெளிப்படையாகவே பார்ப்பனீய மத தத்துவங்களைத் தாக்கினர். 'நட்ட கல்லைத் தெய்வமென்று நாலு புட்பம் சாத்தியே சுற்றி வந்து மொண மொண என்று — சொல்லு மந்திரம் ஏதடா' என்று அதட்டிக் கேட்டனர். **'நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள் (உள்ளத்தில்) இருக்கையில்** ' என்று வினவினர். **'நீரில் மூழ்கினால் மோட்சம் என்கிறீர். தவளைகள் நாளும் தலை முழுகுகின்றன. அவற்றிற்கு மோட்ச முண்டோ** ' என்று கேலி பேசினர். **தாழ்வாரம் தானுமில்லை ; குந்த ஓர் வீடுமில்லை ; தேவாரம் ஏதுக்கடி குதம்பாய் தேவாரம் ஏதுக்கடி** " என்று சொல் வீசினர். சாதி மதப் பேதங்களைச் சாய்த்தனர். ஆரிய மதக் கோட்பாடுகளைத் தவிடு பொடியாக்கினர்.

அண்மைக் காலத்திலே வடலூர் இராமலிங்கர் ஆரியத்திற்குச் சரியானதோர் சவுக்கடி கொடுத்தார். சாதியும் மதமும் சமயமும் தவிர்ந்தேன், சாத்திரக் குப்பையும் தணிந்தேன்" என்று உரை கூட்டினார். **"சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே, சாத்திரச் சந்தடி களில் கோத்திரச் சண்டையிலே , ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர் , அலைந்தலைந்து வீணே நீர் அழிதல் அழகல்லவே** " என்று அறிவுறுத்தினார். "வேதாகமங்கள் என்று வீண்வாதம் ஆடுகின்றீர் , வேதாக மத்தின் விளைவறியீர் சூதாகச் சொன்ன தலால், உண்மை வெளிதோன்ற உரைத்தல் நிலை , என்ன பயனோ இவை!" என்று மிக அழகாக எடுத்துக் காட்டினார். "நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலாம் நவின்ற கலைச் சரிதம் எல்லாம் பிள்ளை விளையாட்டேன் என்று இழித்துரைத்தார். **"கலை உரைத்த கற்பனையே நிலை எனக் கொண்டாடும் கண்மூடிப் பழக்கமெலாம் மண்மூடிப் போக** " என்று சற்றுக் கோபமாகவே பேசினார். அவரைக் கண்டு ஆரியம் சீறிற்று ; அவரை வீழ்த்திற்று. அவர் பாடலை அருட்பா அல்ல, அது மருட்பா " என்று கேலி பேசிற்று.

இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னே தமிழ் நாட்டில் சுயமரியாதைச் சூறாவளி தோன்றிற்று. சுயமரியாதை இயக்கம் ஆற்றிய பணியின் பயனாகத் தமிழ்நாடு புரட்சிப் பொறியாயிற்று; குமுறும் எரிமலையாயிற்று; கொந்தளிக்கும் கடலாயிற்று; சுழன்று சுழன்றடிக்கும் சண்ட மாருதமாயிற்று ; சீறிப் போரிடும் சிறுத்தையாயிற்று. சுய மரியாதைத் தீச்சுழல் நாடு முழுதும் பரவிற்று; பட்டி தொட்டியில் எல்லாம் தன் அறிவு முழக்கத்தை எழுப்பிற்று; எங்கெங்கும் ஆரிய எதிர்ப்புப் பண்பாடிற்று ; தமிழ் வாழ்விற் படிந்துவிட்ட ஆரியக் கலையை, பண்பை , நாகரிகத்தை அச்சம் தயை தாட்சணியமின்றி சுட்டுப் பொசுக்கிற்று. ஆரியர் உயர்வுக்கும் திராவிடர் தாழ்வுக்குமாக எழுதப்பட்ட கம்ப ராமாயணங்களையும் அதன் உடன் பிறந்த ஏடுகளையும் தீக்கிரையாக்கிற்று. "தமிழ்நாடு தமிழர்க்கு; தமிழர் நாட்டில் சனியாக வந்துள்ள ஆரியர்கள் நமர் அல்லர்; நம் பகைவர் அந்நாள் தொட்டே ; நம்மையே நாம் நம்பிடு வோம்' என்று பெருமுழக்கம் எழுப்பிற்று. பகுத்தறிவுப் பாசுரத்தை நாடு முழுதும் பரப்பிற்று. சீர்திருத்த ஆர்வத்தைத் தமிழர்க் கெல்லாம் ஊட்டிற்று. "வடக்கினில் தமிழர் வாழ்வை வதக்கிப் பின் தெற்கில் வந்தே இடக்கினைச் செய் நினைத்த எதிரியை அந்நாள் தொட்டே அடக்கடா என்றுரைத்த அறங்காக்கும் தமிழே நீ வாழ்க!" என்று தமிழர் இன்ப ஒலி கிளத்தினர். வடசொற் கலவாத தனித் தமழ் தேவை ! வடவர் ஆதிக்கமற்ற தமிழ் ஆட்சி தேவை! ஆரியம் அகன்ற தமிழிசை தேவை! பார்ப்பனீயச் சடங்கற்ற தமிழ் வாழ்வு தேவை ! என்று தமிழ் நாட்டில் சிறந்த தோர் மறுமலர்ச்சி இயக்கத்தை மூண்டெழச் செய்து விட்டது சுயமரியாதை இயக்கம். மூண்டெழச் செய்துவிட்டார் அதன் தலைவர் ஈ. வெ. ரா.

"ஆரியமே எம் வாழ்வை வதைத்தது. ஆகவே அதை இனி ஒப்போம் ஒப்போம்" என்று தமிழுலகம் ஒரே குரலில் முழக்கமிடத் தொடங்கிவிட்டது சென்ற இருபத்தைந்தாண்டுகளாக. தமிழர் தம்மை உணரத் தொடங்கிய இந்நிலையில் ஆரியமொழி (இந்தி) தமிழர் பால் திணிக்கப்பட்டால் அவர்கள் கொதித்தெழுந்து அது ஆகாது என்று ஆர்ப்பரித் தல் இயற்கை அல்லவா?

அந்த ஆர்ப்பரிப்புத்தான் இந்தி எதிர்ப்பு இயக்கம்!

இந்தி எதிர்ப்பு இயக்கம் ஒரு தனித்த துண்டான இயக்கமல்ல. 1937—ல் தோன்றி, 1938—ல் வளர்ந்து , 1939—ல் தமிழ் நாட்டையே அதிர்ந்தெழச்

செய்து, 1940—ல் வெற்றிக்கொடி பறக்கவிட்டு அத்துடன் அடங்கிப் போன ஒரு சின்னஞ்சிறு இயக்கமல்ல. முதலமைச்சர் ஆச்சாரியார் தொடுத்து விடுத்த தாக்கீதை' எதிர்க்கப் பிறந்து, அத் தாக்கீது தலை கவிழ்ந்ததும் நின்றுபோன ஒரு கிளர்ச்சி அல்ல. பலப்பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டின் பல்வேறு துறைகளிலும் தொடர்ந்து நடந்துவரும் பரந்து பட்ட — ஆரிய திராவிடப் போராட்டத்தின் ஒரு பகுதியே இந்தி எதிர்ப்பு இயக்கம்.

சிலர் எண்ணுவதைப்போல இந்தி எதிர்ப்பு இயக்கம் 1937—ல் திடீரெனத் தொடங்கியதல்ல. என்றைய தினம் தென்னாட்டில் இந்தியை நுழைக்க முயற்சி தொடங்கப் பட்டதோ அன்றைய தினமே இந்தி எதிர்ப்பும் தொடங்கியது.

பெரியார் இராமசாமி 1923—ல் திருப்பூரில் கூடிய தமிழ் மாகாண காங்கிரசில் இந்தியைப் பரப்புவது என்று கூறிக்கொண்டு இந்தியில் உள்ள துளசிதாஸ் இராமாயணத்தைப் பரப்புவதைக் கண்டித்துப் பேசினார்..

அதே ஆண்டு கயாவில் கூடிய அனைத்திந்திய காங்கிரஸ் மாநாடு முடிந்ததும், அம் மாநாட்டு நிகழ்ச்சியில் இந்தி மொழிக்குத் தரப்பட்ட முதன்மையை மிக உரமாகத் தாக்கி அறிக்கை வெளியிட்டார் காலஞ் சென்ற ஆந்திர ரத்தின கோபால கிருஷ்ணமய்யா. அவர் அப்போது இந்திய தேசீய காங்கிரசின் செயலாளர் . அவர் 1923—ல் கூறியது இது :

கயா காங்கிரசில் எல்லாரும் இந்தியில் தான் சொல்மாரி பொழிந்தார்கள். ஆனால் இந்திக்கு முதலிடம் அளிப்பது நமது அடிமைத்தனத்தை வேறொரு உருவத்தில் நிலை நாட்டுவதாகவே முடியும். நமக்கு ஒரு பொது மொழி வேண்டுமென்பதும், அது இந்தியாகவே இருக்கவேண்டு மென்பதும் அழகாகத்தான் இருக்கிறது. ஆனால் இன்று முதலே இந்திக்கு அடிமைப்பட்டு விடவேண்டுமென்றால் அது நம்மால் பொறுக்கமுடியாதது. ஆங்கிலத்தின் இடத்தை இந்தி பெற்றால் தென்னாட்டவராகிய நமக்குத் தான் மிகுந்த கேடு உண்டாகும். தாய் மொழியே மக்களின் உயிர் நிலை. வேற்று மொழி ஒன்றைப் படிக்கவும், அது வழியாக நம் கருத்துகளைத் தெரிவிக்கவும் நாம் கட்டாயப் படுத்தப்பட்டால், நமது உண்மையான முன்னேற்றத்திற்குத் தடை ஏற்படுவதுடன் நமது மன நிலையும் வளர்ச்சி அடை யாது தேய்ந்துவிடும். ஆகவே, இந்தியைப் பொது மொழி ஆக்குவது பற்றி மிகமிக விழிப்பாக

இருக்கவேண்டுமென்று நமது அரசியல்வாதிகளை எச்சரிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது!"

மறுபடியும் 1925—ல் பெல்காம் காங்கிரஸ் நடந்து முடிந்ததும் இந்தி முயற்சியைக் கண்டித்துக் கட்டுரை தீட்டினார் அவர்.

'வாணி ஒப்பாரி" என்பது அவருடைய அரிய பாட்டுத் தொகுதி. அதில் ஓரிடத்தில் இந்தியைப் புகுத்துவதன் மூலம் காந்திஜி என்னை வனவாசம் செய்ய அனுப்புகிறார் என்று ஆந்திரமொழி அன்னை மனமுருகி அழுவதாக அவர்

தீட்டியிருக்கின்றார். 1938—ல் ஆச்சாரியார் பிறப்பித்த இந்தி உத்திரவைக் கண்டுவிட்டு அல்ல! 1923—ல் ! ஆச்சாரியார் முதன் முதலாகப் பொது வாழ்க்கையில் இறங்கிய அந்தக் காலத்திலேயே!

தென்னாட்டில் இந்திப் பிரசாரம் வலுப்பெற்று வருவதையும் அது தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் ஏற்பட்ட இன்னொரு கெடுதியாய் வந்து முடிந்ததையும் கண்டு நெஞ்சம் கொதித்த தலைவர் ஈ. வெ. ரா. 1926 மார்ச் 14—ல் வெளியான "குடி அரசு' இதழில் சித்திர புத்திரன்' என்னும் புனைபெயரில் இந்தியால் வந்த வினையை விளக்கினார்.

"இதுவரை இந்திக்காகச் செல்வாயிருக்கும் பணத்தில் பெரும்பாகம் பிராமணரல்லாதாருடையது என்பதில் யாருக் கும் சந்தேகம் கிடையாது. இந்தி படித்தவர்களில் 100—க்கு 97 பேர் பிராமணர்களாகவே இருக்கிறார்கள் தமிழ்நாட்டின் மொத்தத் தொகையில் 100—க்கு 97 பேர் பிராமணரல்லா தாராய் இருந்தும் 100 — க்கு 3 வீதம் உள்ள பிராமணர்கள் தான் இந்தி படித்தவர்களில் 100—க்கு 97 பேர்களாய் இருக் கிறார்கள் பிராமணரல்லாதார் 100—க்கு 3 பேர்களாவது இந்தி படித்திருக்கிறார்களா என்பது சந்தேகம். இந்தப் படிப்பின் எண்ணிக்கை எப்படி இருந்தாலும், நமக்கு அதைப்பற்றி அதிகக் கவலை ஒன்றுமில்லை. ஆனால் இதில் 100—க்கு ஒரு பங்கு கவலை கூடத் தமிழ் மொழிக்கு எடுத்துக் கொள்வதில்லை என்பதையும், இந்தி படித்த பிராமணர்களால் நமக்கு ஏற்படும் கெடுதியையும் நினைக்கும் போது, இதைப்பற்றி வருந்தாமலும், இம்மாதிரிப் பலன் தரத்தக்க இந்திக்கு நாம்

பாடுபட்ட முட்டாள் தனத்திற்கும் நாம் பணம் கொடுத்த பைத்தியக்காரத்தனத்துக்கும் வெட்கப்படாமலும் இருக்க முடியவில்லை.

இனிக் கொஞ்ச காலத்திற்குள் இந்திப் பிரசாரத்தின் பலனை நாம் அனுபவிக்கப் போகிறோம். பிராமணரல்லா தார்க்கு ஏற்பட்ட பல ஆபத்துகளில் இந்தியும் ஒன்றாய் முடியும் போலிருக்கிறது. பொதுவாய் இந்தி என்பது வெளி மாகாணங்களில் பிராமண மதப்பிரசாரஞ் செய்யத் தர்ப்பித்து செய்யும் ஒரே வித்தையாகிவிட்டது. இந்த இரகசியத்தை நமது நாட்டுப் பாமர ஜனங்கள் அறிவதேயில்லை . இரண் டொருவர்களுக்கு அதன் இரகசியம் தெரிந்தாலும் பிராமணர்களுக்குப் பயந்துகொண்டு தாங்களும் ஒத்துப் பாடிவிடுகிறார்கள். யாராவது துணிந்து வெளியிற் சொன்னால் இவர் களைத் தேசத்துரோகியென்று சொல்லிவிடுகிறார்கள்."

சிறந்த தேசபக்தரும் அரிய கலைவாணரும் பன்மொழி வல்லுநரும் மாடர்ன் ரிவ்யூ" வின் அந்தக்கால ஆசிரியருமாகிய இராமாநந்த சாட்டர்ஜீ அவர்கள் மாடர்ன் ரிவ்யூ 1931மே' இதழில் ஆங்கிலத்துக்குப் பதிலாக இந்தியைப் புகுத்தச் செய்யப்படும் முயற்சி தீங்கானது என்பதை மிக விளக்கமாக எடுத்துச் சொல்லி இருந்தார். அதன் மொழிபெயர்ப்பை 25—5—31 நவசக்தி'யில் காண்க.

பழைய புராணக்கதைகளைச் சொல்வதைத் தவிர வேறு அறிவு வளர்ச்சிக்குப் பயன்படாத இந்தி , வடமொழி முதலிய மொழிகளை நமது மக்கள் படிக்கும்படி செய்வது பார்ப்பனீயத்துக்கு மறைமுகமாக ஆக்கந் தேடுவதாகுமென இம்மாநாடு கருதுவதோடு, தற்கால விஞ்ஞான அறிவை நமது மக்களிடைப் பரப்பவும் புத்தம் புதிய தொழில் முறைகளை நமது நாட்டில் ஏற்படுத்தவும், மற்ற நாடுகளில் எழுந்திருக்கும் சீர்திருத்த உணர்ச்சியை நமது மக்களிடையே தோற்றுவிக்கவும் உலக மொழியாக விளங்கும் ஆங்கிலத்தையே (தாய் மொழிக்கு அடுத்தபடியாக) நமது இளைஞர்கள் கற்க வேண்டும்"

— என்று 1931—ல் நன்னிலத்தில் கூடிய நன்னிலம் வட்டார சுயமரியாதை மாநாட்டில் தீர்மானம் நிறைவேறி இருக்கிறது. இதை முன்மொழிந்தவர் சாமி சிதம்பரனார். பின்மொழிந்தவர் எஸ். இராமதாதன் எம். ஏ . பி.எல்.,

10— 5 — 31—ல் பெரியார் இராமசாமி அவர்கள் இந்தித் திட்டம் ஆரியப் புரட்டு — அதைத் தக்க காலத்தில் தகர்த்தெறியுங்கள் என்று தமிழர்க்கு எச்சரிக்கை விடுத்தார் அன்று அவர் தீட்டிய குடிஅரசு" தலையங்கம் :

இந்தி என்பது பார்ப்பன ஆதிக்கத்திற்காக ஏற்படுத்தப்பட்ட புரட்டு என்பதைத் தவிர அதில் எவ்வித உண்மைத் தன்மையும் இல்லை என்பதை அறிவுள்ள எவரும் ஆட்சேபிக்கமாட்டார்கள் என்றே கருதுகின்றோம். கண்மூடித்தனமாய் எல்லோரையும் இந்தி கற்றுக்கொள்ள வேண்டுமென்று அரசியல் பேரால் நிர்ப்பந்திப்பது எப்படி ஒழுங்காகும் என்று கேட்கின்றோம். இந்தி என்பது அநேகமாக வடமொழியின் சார்போ அல்லது திரிபோ ஆகும். இந்த நாட்டில் ஆரியர்கள் உலக வாழ்க்கையில் ஒரு ஓடிந்துபோன குண்டூசிக்கும் பயன்படாத பாஷையாகிய வடமொழிக்கு எவ்வளவு பணம் செலவழியச் செய்து வருகின்றனர் என்பது தமிழ் மக்கள் வெகுநாளாகக் கவனித்து வரும் சங்கதியாகும். இப்போது மறைமுகமாய் வட மொழியை ஆதரிக்கவும் ஆரிய நாகரிகம் சமயக்கொள்கை ஆகியவைகளை நிலை நிறுத்தவும் இந்தியை அதிகமாக ஒவ்வொருவருக்குள்ளும் புகுத்தப் பார்ப்பது எவ்வளவு வஞ்சகமான காரியம் என்பதை நமது 'சோணகிரிகள்' அநேகர் இன்னும் உணரவே இல்லை. இன்றைய தினம் இந்திய மக்களுக்கு அவரவர்கள் சொந்த பாஷை தவிர வேறு பாஷை தெரியவேண்டுமானால் அது ஆங்கில பாஷை என்றே நாம் தைரியமாய்ச் சொல்லுவோம். நம் மக்கள் மீது அனாவசியமான ஒரு மொழி சூழ்ச்சித் திறத்தால் சுமத்தப்படுகின்றதே என்கின்ற அறிவும் கவலையும் நம் பண்டிதர்களுக்குச் சிறிதும் கிடையாது என்றே சொல்ல வேண்டி இருக்கின்றது. உலகமே தங்கள் கிராமந்தான் என்று எண்ணிக்கொண்டிருந்த காலம் மலையேறி இப்போது நிலப்பரப்பு நீர்ப்பரப்பு முழுதும் தெரிந்து 200 கோடி மக்களையும் சகோதரர்களாகப் பாவித்து வாழவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும்போது உலகச் செலாவணி பாஷை எதுவோ அதை மனிதன் அறியாமல் கபீர்தாஸ் இராமாயணத்தைப் படிக்க வேண்டிய இந்திபாஷை எதற்குப் படிக்க வேண்டும் என்று கேட்கின்றோம்."

இந்த எழுத்துக்கள் தமிழ் நாட்டில் தக்கதொரு கிளர்ச்சியை உண்டு பண்ணின . அதன்பின் தமிழ்நாட்டில் கூடிய பல சுயமரியாதை மாநாடுகளிலும் பொதுக் கூட்டங்களிலும் தமிழ் மன்றங்களிலும் இலக்கியக் கழகங்களிலும்,

இந்திப் பிரசார முயற்சி கண்டித்துப் பேசப்பட்டது; பல பத்திரிகைகளிலும் எழுதப்பட்டது.

1936—ல் வெளியான "செந்தமிழ்ச் செல்வி"யில் புதுவை சுத்தாநந்த பாரதியார் இந்தி பொதுமொழி வேண்டாம்" என்னும் தலைப்பீந்து தமிழ் வளர்ச்சிக்கு இந்தி ஊறுபயக்கும் என்பதை விளக்கிக் கட்டுரை ஒன்று வரைந்தார்!

"இந்தி மொழியை நாட்டின் முதன் மொழியாக்க சிலர் முயல்கின்றனர். அம் முயற்சி தமிழுக்குத் தமிழ் நாட்டில் நடைபெற வேண்டும். தமிழ் இப்போதிருக்கும் நிலையில் நமக்கு வேறு மொழிகளில் ஈடுபட நேரமில்லை . தமிழன் உயிரைக்காக்கும் பணி நமக்கு இப்போது வந்துள்ளது. பிறமொழிகளின் முன்னேற்றத்திற்குத் தக்கவாறு தமிழ் முன்னேறியாக வேண்டும். அதற்கு மாறாக நம் பள்ளிச் சிறார் தமிழைப் புறக்கணித்து வேறொரு மொழிக்கு ஆக்கந் தேடும்படியான எத்தகைய முயற்சியும் தமிழுக்கு ஆக்கந்தராது. முதலில் ஒவ்வொருவனும் தனது தாய்மொழியை நன்கு கற்கவேண்டும். பிறகு உலகுடன் பழகுவதற்கும் தொழில் நடத்துவதற்கும் பெரும் பான்மையோர் உலகெங்கும் நன்கு அறிந்த ஒரு மொழி யையும் கற்றறியவேண்டும். அத்தகைய மொழி இப்போது ஆங்கிலமே. மக்களுக்கு வேண்டுவன இரண்டு : அருள், பொருள். அருட்செல்வம் தமிழில் மலிந்து கிடக்கிறது; உலகிற்கெல்லாம் வழங்கலாம். பொருட் செல்வத்திற்கு ஆங்கிலத்தின் அறிவுந் துணையும் வேண்டும். இந்தி முதலிய அத்தனையும் கற்றால் நல்லதுதான். ஆனால் நேரம்? இந்தியை நாம் வெறுக்கவில்லை. கற்பவர் கற்கட்டும்; கட்டாயமாகக் கற்றே தீரவேண்டும் — இன்றேல் வாழமுடியாது என்று தடபுடல் செய்யவேண்டாம்."

1937—ல் பேரறிஞர் மறைமலை அடிகளார் "இந்தி பொது மொழியா' என்னும் அரிய நூல் ஒன்று வெளியிட்டார். இந்தி மிக அண்மைக் காலத்தே எழுந்த ஒரு கலவை மொழி என்பதும், வடமொழியின் வழிமொழியே இந்தி என்பதும், அது இலக்கண இலக்கிய வளம் சிறிதும் வாய்க்கப் பெறாதது என்பதும், அறிவு நூற் கலைகள் ஒரு சிலவேனும் தன்கண் அமைந்திராதது என்பதும், எவ்வாற்றானும் பொதுமொழி யாதற்குரிய தகுதி அற்றது என்பதும் வளர்ந்து பெருகும் இந்திப் பயிற்சி தமிழர்க்குக் கேடு பயப்பதுறுதி என்பதும் பிறவும் ஆராய்ச்சி வழியாக, அசைக்க முடியாத ஆதாரங் களுடன் அதில் நிலை

நாட்டப்பட்டுள்ளன. அந்நூல் இந்தி எதிர்ப்பு இயக்கத்திற்குத் தக்கதோர் கருவூலமாய் அமைந்தது.

இப்படியெல்லாம் தமிழ்நாடு, இங்கு ஒரு சாராரால் போற்றி வளர்க்கப்படும் இந்திப் பிரசாரம் தமிழுக்குத் தீங்கிழைப்பது கண்டு நீண்ட நாள்களாகவே குமுறிக் கொண்டிருந்தது. அக் குமுறல் சண்டமாருதமாய் மாறி விட்டது 1937 — 1940— ஆம் ஆண்டுகளில் இதுகாறும் குமுறும் எரிமலையாய் இருந்த தமிழ்நாடு அன்பர் ஆச்சாரியார் விடுத்த தாக்கீது என்னும் வெடிமருந்தால் பெருத்த ஆரவாரத்துடன் வீறி வெடித்து, அடங்காத கோபாவேசம் கொண்டு உள்ளிருக்கும் தீச்சுழலை வாரி வாரி வீசத் தொடங்கிவிட்டது.

குமுறும் எரிமலை வெடித்துவிட்டது. விளைவைச் சொல்லவா வேண்டும்?

## 3. செந்தமிழன் சூள் உரைக்கிறான் !

(முதலமைச்சர் ஆச்சாரியார் கட்டாய இந்தித் திட்டத்தைப் புகுத்தப்போவதாக அறிவித்ததும், தமிழர் யாவரும் திரண்டெழுந்து கூடாது" என்று மறுத்து, தம் எதிர்ப்பையும் மீறி இந்தித் திட்டம் திணிக்கப்படின் உயிர் கொடுத்தேனும் அத் திட்டத்தைத் தகர்த்தெறிவோம் என்று சூள் உரைத்ததும் பிறவும் இப் பகுதியில் விளக்கப் படுகின்றன.)

1937 ஜூலையில் தோழர் சி. இராசகோபாலாச்சாரியார் அவர்களை முதலமைச்சராகக் கொண்ட காங்கிரஸ் அமைச்சர் அவை சென்னை மாநிலத்தில் ஏற்பட்டது.* (*அமைச்சர் அவையினர் : — சி. இராசகோபாலாச்சாரியார், டி. பிரகாசம், பி. சுப்பராயன், டி. எஸ். எஸ். ராசன், எஸ். இராமநாதன், வி. அய். முனுசாமிப் பிள்ளை , பி. கோபால் ரெட்டி , வி. வி. கிரி , ராமன் மேனன், யாகூப் ஹாசன். )

பொதுமக்கள் எல்லோரும் காங்கிரஸ் ஆட்சிப்பீடத்தில் அமர்ந்ததன் பயனாகப் பல்வேறு தொழிற்சாலைகள் துவக்கமும் புதிய புதிய சீர்திருத்தச் சட்டங்களும் நிலவரிக் குறைப்பும் தீண்டாதார்க்குக் கோயில் நுழைவும் பாட்டாளிகள் நல உரிமைப் பாதுகாப்பும் தமிழர்மீது பல நூற்றாண்டுகளாகச் சுமத்தப்பட்டிருக்கும் இழிவு நீக்கமும் பிற நலங்களும் உடனடியாக ஏற்படும் என்று கனவு கண்டு கொண்டிருந்தனர்.

ஆனால், என்ன ஆச்சரியம்! ஆச்சாரியார் ஆட்சியினர் இத்தனையையும் விட்டுவிட்டு வடநாட்டு இந்தியைத் தென்னாட்டுத் தமிழர் மீது திணிப்பது தான் மிக முதன்மை யான பணி என்று தீர்மானித்துவிட்டனர்.

கட்டாய இந்தி, கரங்கிரஸ் தேர்தல் அறிக்கையில் கூறப்படாதது ; தமிழர் எவரும் விரும்பாதது; தமிழ்நாடு தலை நிமிர்ந்து வாழவேண்டுமானால் தமிழ் நாட்டிற்குள் அனுமதிக்கப்படக்கூடாதது.

பதவியேற்ற ஒரு திங்களுக்குள், முதலமைச்சர் ஆச்சாரியார், சென்னை மாநிலத்தில் உள்ள எல்லா உயர்நிலைப் பள்ளிகளிலும் எல்லா மாணவர்க்கும் இந்தி மொழியைக் கட்டாய பாடமாக அமைக்கப்போவதாகக் குறிப்பிட்டார்.

10—8—37—ல் சென்னை ராமகிருஷ்ணா மடத்தில் கூடிய பொதுக்கூட்டத்தில் பேசுகையில் தான் இப்படிச் சொல்லி வைத்தார்.

தமிழ்நாடு இதைப் பொறுக்கவில்லை. தமிழர் உள்ளம் இதை ஏற்கவில்லை. தமிழ்ப்புலவர் இதை ஒப்பவில்லை. ஆனால் ஆச்சாரியார் முடிந்த முடிபாகத் தீர்மானித்துவிட் டார் இந்தியை வைத்துத்தான் தீர்வதென்று.

தமிழ்நாடு கொதித்தது; கொந்தளித்தது; முடியாது முடியாது என முழங்கிற்று; இந்தி வேண்டாம் வேண்டாம் என்று ஒலி கிளப்பிற்று.

நாடு முழுதும் ஏராளமான பொதுக்கூட்டங்கள் ; பிரம் மாண்டமான ஊர்வலங்கள் ; அரிய பெரிய மாநாடுகள் ; அறிஞர் பலருடைய ஆராய்ச்சி உரைகள் ; தமிழ்க் கலைஞர் சொற்பொழிவுகள் ; அரசியல் அறிஞர் அறிவுரைகள் ; தலைசிறந்த கல்வியாளர் புத்திமதிகள் — இத்தனையும் இந்தியைத் தமிழர் விரும்பவில்லை என்று காட்டத்தான்.

தமிழர்தம் உள்ளக்கொதிப்பை ஆச்சாரியார் பொருட் படுத்தவில்லை. அவருக்குப் பிடித்தமான மொழியிலே சொல்வதானால் அவர் தம் கேளாக்காதைத் திருப்பினார்; இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி எழுந்த திக்கு நோக்கி!

10—8—37—ல் தான் ஆச்சாரியார் இந்திக் கட்டாயம் பற்றிப் பேசினார். 27—8—37—ல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் கட்டாய இந்தியின் கொடுமையை விளக்க மாபெருங் கூட்டம் ஒன்று நடைபெற்றது. தோழர் வேங்கடாசலம் பிள்ளை பி.ஏ., பி.எல்., கூட்டத் தலைவர். தமிழவேள். த.வே.உமா மகேசுவரனார், ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை பி.ஏ., பி.எல். சிவ . குப்புசாமிப் பிள்ளை , அரசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் கவியரசு ஆர். வேங்கடாசலனார் ஆகியோர் கட்டாய இந்தி தமிழுக்குத் தீங்கே தரும் என்பதை எடுத்துக் காட்டினர். கரந்தைத் தமிழ்ச் சங்கம், திருவையாற்று அரசர் கல்லூரி இவ்விரண்டின் மாணவர்கள் பலர் இந்தியால் தமிழ் கெடும் என்று பேசினர்.

29—8—37 : திருவையாற்றுச் செந்தமிழ்க் கழகத்தின் சார்பில் கூட்டம்! இந்தி எதிர்ப்பு ஊர்வலம்! அரசர் கல்லூரி மாணவர்களும் ஆசிரியர்களும் பொதுமக்களும் திரளாகக் கலந்து கொண்டனர். பேராசிரியர்கள்

வேங்கடாசலம் பிள்ளை , ச. கோவிந்தசாமிப் பிள்ளை , ஜி. சோமசுந்தர தேசிகர் ஆகியோர் இந்தி மொழி வீழ்க என முழங்கினர்.

5—9—37 : சென்னை சௌந்தர்ய மகாலில் தமிழர் கூட்டம், அண்ணாமலைப் பல்கலைக்கழக அந்நாள் தமிழ்ப் பேராசிரியர் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் எம். ஏ., பி.எல்., அவர்கள் தலைமையில் தோழர்கள் த . வே. உமாமகேசுவரனார் , சமரசம்' ஆசிரியர் சுல்தான் பாக்தாதி , கே. எம். பாலசுப்பிரமணியம் பி. ஏ , பி. எல். முன்னாள் "நவயுகம் " ஆசிரியர் சி. என். அண்ணாதுரை எம். ஏ. ஆகியோர் போர் முரசு கொட்டினர்.

4—10—37 : சென்னை கோகலே மண்டபத்தில் செந்தமிழ் முழக்கம், சென்ற இருபதாண்டுகளாகவே சொல்லாலும் எழுத்தாலும் ஆரியத்திற்குக் கசையடி கொடுத்து வரும் முதுபெரும் புலவர் மறைமலை அடிகளார் தலைமையில் பேராசிரியர் பாரதியார் இந்தி வேண்டாம் என்பதற்கான ஏராளமான காரணங்களை எடுத்து வீசினார். மறைமலை அடிகளார் தலைமையில் பாரதியார் பேசியது திருவள்ளுவர் தலைமையில் நக்கீரர் பேசினால் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது. தமிழ்த் தென்றலும் கோடை இடியும் ஒன்று கலந்து ஓரிடத்தில் கூடினாற்போல் இருந்தது. அடிகளார் தமிழ்ப் பேச்சும் பாரதியார் சொல்வீச்சும், சென்னை நகரத்தையே ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டன.

12—10—37 : பாண்டி நாட்டு நெல்வேலிச் சீமையில் கூட்டம் , "தென்னிலங்கை வேந்தன் இராவணன் ஆரியத்தை எதிர்த்து நின்று போராடிய அடலேறு ; தமிழ் நாட்டான் ; தனிவீரன் ; ஆரியரே ! என் எல்லையில் நுழையாதீர் ' என உரைத்த அஞ்சாத நெஞ்சன் என் பதை இருபதாண்டுகளுக்கு முன்னரே 'இராவணப் பெரியார் ' என்னும் ஆங்கில நூலொன்றெழுதி நிலை நாட்டிய அறிஞர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை பி.ஏ., எல்.டி., அன்று தலைவர். கட்டாய இந்தி தொலைக என்று மட்டும் அவர் பேசவில்லை. தமிழ் மொழியைக் கட்டாயப் பாடமாக்குக " என்று முழக்கினார். நாவலர் பாரதியாரும் அறிஞர் அண்ணாதுரையும் தமிழ்காக்க வாரீர் என இளஞ் சிங்கங்களைக் கூவி அழைத்தனர்.

மாவட்டந்தோறும் மாநாடுகள் :

7—11—37 : சேலம் மாவட்ட மூன்றாவது சுயமரியாதை மாநாடு. தெ. பொ. வேதாசலம் பி. ஏ., பி.எல். — திறப்பாளர் கி. ஆ. பெ. விசுவநாதம் — தலைவர்.

8—11—37 : இராசிபுரம் வட்டார மூன்றாவது சுயமரியாதை மாநாடு. தர்மபுரி ஜில்லா போர்டு துணைத் தலைவர் எம். என். நஞ்சையா — மாநாட்டுத் தலைவர்.

14—11—37 : வடார்க்காடு மாவட்ட இரண்டாவது சுயமரியாதை மாநாடு , ஆம்பூர். சென்னை மாநில முன்னாள் அமைச்சர் கான்பகதூர் கலிபல்லா சாகிப் எம். ஏ. பி.எல்., எம். எல். ஏ. — தலைவர். தர்மபுரி ஜில்லா போர்டு தலைவர் டி. கிருஷ்ண மூர்த்தி , என். சிவராஜ் பி.ஏ., பி.எல்., கே.எம். பாலசுப்பிரமணியம், தளபதி சி. என். ஏ . ஆகியோர் கலந்து கொண்டனர்.

12—12—37 : நாமக்கல் வட்டார சு.ம. மாநாடு . தளபதி சி. என். ஏ.— தலைவர். கே. எம். பாலசுப்பிரமணியம் — திறப் பாளர் . கி. ஆ. பெ. விசுவநாதம், அ. பொன்னம்பலனார், ஸ்ரீதர சுவாமிகள், ஈழத்தடிகள் வீர உரை. '

3—1—38: அருப்புக்கோட்டை தாழ்த்தப்பட்டோர் மாநாடு.

6—2—38 : ஓமலூர் வட்டார சு.ம. மாநாடு.

19, 20—2—38 : தஞ்சை மாவட்ட ஆறாவது சு. ம. மாநாடு. சேலம் சித்தையன் — கொடி ஏற்றுபவர் . அறிவுக் கொடி' ஆசிரியர் தோழியர் சிவகாமி சிதம்பரனார் — திறப்பாளர். ஊ.பு. அ. சௌந்தர பாண்டியன் — தலைவர் அஞ்சா நெஞ்சன் அழகிரிசாமி பேச்சு.

26—2—38: வடார்க்காடு மாவட்டத் தமிழர் மாநாடு. திருவத்திபுரத்தில் பேராசிரியர் பாரதியார் தலைமையில் நடைபெற்றது. ஆரியம் தமிழ்நாட்டில் நுழைந்த வகையை, சங்க காலத்திற்குப்பின் தமிழர் கலையும் வாழ்வும் நாகரிகமும் மொழி நலமும் கெட்ட வகையை , பொய்யும் வழுவும் வந்து புகுந்த வகையை இன்ன பிறவற்றை எடுத்து விளக்கி விட்டு, இன்றைய பிரச்சினை தமிழன் இருப்பதா இறப்பதா என்பதே என்று பாரதியார் வீர உரை நிகழ்த்தியபோது, அங்கிருந்தோர் அத்தனை பேரும் தமிழ் உணர்ச்சிகொண்டு

தகதகவென ஆடினார். தமிழுக்கு எம் உயிரை அர்ப்பணித்தோம் என ஒலித்தனர். 'வாழி தமிழ் , வாழி தமிழ்!" என வாழ்த்துக் கூறினர்.

13—3—38 : மதுரை மாவட்ட சு.ம . மாநாடு. நகர தூதன் ஆசிரியர் மணவை திருமலைசாமி மாநாட்டுக்குத் தலைமைபூண்டு , "குமுறிக் கொந்தளிக்கும் உள்ளத்தோடும் கொழுந்து விட்டெரியும் இருதயத்தோடும், ஓடோடி வந்தி ருக்கும் சுயமரியாதைத் தோழர்களே " என்று ஆரம்பித்து நிகழ்த்திய உரை இருக்கிறதே அது சுயமரியாதை உரை தான் ; தமிழ் உரைதான் ; வீர உரைதான்.

2.3—4—38: சாக்கோட்டை இரண்டாவது சு.ம. மாநாடு. திருச்சித் தளபதி வேதாசலம் — தலைவர். வழக் கறிஞர் சுயம்பிரகாசம் பி.ஏ, பி.எல்., — திறப்பாளர் . குடந்தை வீரர்கள் சின்னத்தம்பி , நீலமேகம் வீர முழக்கம்.

10—4—38 : கோவை மாவட்ட முஸ்லிம் லீக் மாநாடு. கான்பகதூர் கலிபுல்லா சாகிப் — தலைவர்.

8—5—38: மதுரை மாவட்ட இந்தி எதிர்ப்பு மாநாடு சோழவந்தானில் கூடிற்று. "மடை தளவாய் குடும்பம் என்னும் தமிழ் நாட்டுப் பழம்பெரும்குடி ஒன்றைச் சேர்ந்த மேடை தளவாய் குமாரசாமி முதலியார் அன்று தலைவர். அவர் பேச்சில் தமிழ் வீரம் ததும்பிற்று. இந்திமொழியா — இந்த நாட்டுக்கா — தேவையா? என்று அவர் கேட்ட போது தேவை என்று யார்தான் சொல்லியிருக்க முடியும்?

இங்குக் குறிப்பிட்ட எல்லா மாநாடுகளின் துவக்கத்திலும் இந்தி எதிர்ப்பு ஊர்வலங்கள் நடைபெற்றன. ஊர்வலந் தோறும் தமிழ் வாழ்க இந்தி வீழ்க " என்னும் வீர ஒலி கிளம்பிற்று. "எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே நீ முழங்கு" என்று இளங்காளைகள் தமிழ் முழங்கினர். கட்டாய இந்தி தமிழர்க்குக் கட்டாயம் கூடாது என்பதற்கான கருத்து விளக்கங்களைத் தலைவர் கள் தமிழர்க்குத் தந்தனர். ஒவ்வொரு மாநாடும் ஒரு உணர்ச்சிக் களமாய் , ஒரு தமிழ்த் தென்றலாய் , ஒரு இறுதி எச்சரிக்கையாய் விளங்கிற்று. இந்தி வேண்டாம் என்று எல்லா மாநாடுகளிலும் தீர்மானங்கள் ஒரு மனதாய் நிறைவேறின.

அத்தனை மாநாடுகளிலும் பெரியார் இராமசாமி அவர்கள் கலந்துகொண்டு அறிவும் ஆராய்ச்சியும், அனுபவமும் நகைச்சுவையும் நிறைந்த — அவர்க்கென்றே உரிய — அழகிய தமிழ்ப்பேச்சை நிகழ்த்தினார். அவர் உரை கேட்டவர், இன்பமா துன்பமா வீரமா , எல்லா உணர்ச்சியும் துய்த்தனர். தமிழனுடைய அந்த நாள் வாழ்வை அவர் எடுத்துக் காட்டியபோது தமிழர் இன்புற்றனர். இந்த நாள் இழி நிலையை அவர் விளக்கும் போதோ துன்புற்றனர். வீழ்ச்சியுற்ற தமிழகத்தில் எழுச்சி முரசம் கொட்ட வாருங்கள் என்று அவர் அழைத்தபோது வீர உணர்ச்சி கொண்டனர்.

இங்ஙனம் நாட்டின் பல பகுதிகளிலும் மூலை முடுக்கு களிலும் பொதுக்கூட்டங்களும், மாநாடுகளும், நடந்து கொண்டிருக்கையில் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் குறிப் பிடத்தக்க மூன்று நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

**1. திருச்சிப் பாசறையில் தமிழன்!**

ஊர்தோறும் நடைபெற்ற கூட்டங்கள், வட்டாரந் தோறும் நடைபெற்ற ஊர்வலங்கள், மாவட்டந்தோறும் நடைபெற்ற மாநாடுகள் இத்தனையையும் மீறி இந்தி புகுத் தப்படும் என்றறிந்த தமிழர் 26—12—37—ல் திருச்சிப் பாசறை யில் கூடினர். இந்தி வந்தால் தமிழ்நாடு அதை ஏற்காது . என்று திட்டவட்டமாய்த் தெரிவித்துவிட்டனர்.

அன்று திருச்சியில் சென்னை மாநிலத் தமிழர் மாநாடு நடைபெற்றது. திராவிட நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் ஓடோடி வந்து குழுமி இருந்தனர். வடஇந்தியா விலிருந்தும் பர்மா சிங்கப்பூர் பினாங்கு இலங்கை முதலிய பிறநாட்டுப் பத்திகளிலிருந்துங்கூட தமிழ் மக்கள் பாசறைக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். ஆமாம், அது தமிழர் வாழ் வின் எதிர்காலத்தைச் சித்திரிக்கும் மாநாடு அல்லவா , அதில் தமிழர்க்கு அவ்வளவு ஆர்வம் இருப்பது இயற்கைதானே!

காலையில் மணிக்கூண்டிலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. பத்த பிரம் மக்கள் பைந்தமிழ் வாழ்க எனச் சொல்லிய வண்ணம் அதிற் சேர்ந்து நடந்து சென்றனர். தமிழ்க்கொடிகள் தமிழர்காள் வருக வருக ' என அசைந் தசைந்து ஆடின . அய்நூறு தொண்டர்கள் அஞ்சாத இளங்காளைகள் என முன் சென்றனர். நான்கு யானைகள் முன்னோடும் பிள்ளை " களாய் அமைந்தன.

ஊர்வலத்திற்குப் பிறகு, மாநாடு ! மாநாட்டில் புலவர் கா.சுப்பிரமணியபிள்ளை எம்.ஏ., எம்.எல்., அவர்களின் திறப்புரையும், தமிழவேள் : த.வே.உமாமகேசுவரனாரின் வரவேற்புரையும் பேராசிரியர் பாரதியாரின் தலைமையுரையும் பெரியார் அவர்களின் வீர உரையும் ஒன்றன்பின் ஒன்றாய் நிகழ்ந்தன.

பின்னர், இந்தியைக் கட்டாய பாடமாக்குவதை இம் மாநாடு வன்மையாகக் கண்டிப்பதோடு அதனால் தமிழ்க் கலை அழிந்துவிடும் என்று கருதுகிறது ; தமிழ் மாகாணம் ஒன்று தனியாகப் பிரிக்கப்படவேண்டும் என்று அதுபற்றிய அதிகாரிகளை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது ; தமிழ் வளர்ச்சிக்காகத் தனியாக ஒரு தமிழ்ப் பல்கலைக்கழகம் ஏற் படுத்த வேண்டும் என அரசியலாரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது; இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவதால் தமிழர்கட்கு ஏற்படும் தொல்லைகளைக் கவர்னரிடம் நேரில் எடுத்துரைக்க பாரதியார், பெரியார், உமாமகேசுரனார் முதலியோரைக் கொண்ட குழு ஒன்றை இம் மாநாடு அமைக்கிறது என்னும் நான்கு தீர்மானங்கள் மாநாட்டில் நிறைவேறின.

இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவதைத் தமது தனி உரிமையைக் கொண்டு தடுத்து இம் மாநில மக்களுடைய மொழி — கலை — நாகரிகத்தைக் காவாததால் சென்னை கவர்னர் மீது தமிழர் நம்பிக்கை இழந்து விட்டனர் என்று பெரியார் அவர்கள் கொண்டுவந்த தீர்மானம், தலைவர் பாரதியார் விருப்பத்திற்கிணங்கப் பின்வாங்கிக்கொள்ளப் பட்டது.

திருவாளர்கள் பன்னீர்செல்வம், கி. ஆ. பெ. விசுவ நாதம், முன்னாள் அமைச்சர் எஸ். முத்தையா, கரூர் ஏ. ஆர். சிவாநந்தம், டாக்டர் சோமசுந்தரம், வை. சு. சண்முகம், ச. ம. சி. பரமசிவம், செ.தெ.நாயகம், நாகை மணி , அ . பொன்னம்பலனார் , தெ. பொ. வேதாசலம், சாமி சிதம்பரனார் , கே. வி. அழகிரிசாமி, சேலம் சித்தையன் , போளுக்குறிச்சி ஜி. பி சோமசுந்தரம் ஆகியோர் மேற்படி தீர்மானங்களை முன் மொழிந்தும் பின் மொழிந்தும் பேசினர்.

**2. காஞ்சியில் போர் முழக்கம்!**

திருச்சிப் பாசறையில் அன்று தமிழர் விடுத்த எச்சரிக் கையைப் பொட்படுத்தாது, ஆதிக்க ஆட்சியினர் இந்தித் திட்டம் பற்றி ஒரே பிடிவாதமாய் இருக்கக் கண்ட தமிழர் 27—2—38—ல் காஞ்சியில் மீண்டும் கூடினர்.

காஞ்சியில் தமிழர் கூடினர் ! தமிழர் ஆட்சி தலை நிமிர்ந்து வாழ்ந்த காலத்தில் தக்கதோர் தலைநகராய்ப் பொலிந்த அதே காஞ்சியில் மீண்டும் தமிழர் கூடினர். பல்லவர் ஆளுகையில் அதிகார பீடமாய் இருந்த காஞ்சி — சிலப்பதிகார மணிமேகலைக் காலத்திலேயே தமிழ்க்கலை மன்றங்கள் பலப்பல திகழ்ந்த காஞ்சி — பெரியார் ஈ. வெ. ரா. காங்கிரசை விட்டு விலகித் தன்மான இயக்கங்காண முதலிட மாய் இருந்த காஞ்சி — வீரத் தளபதி அண்ணாதுரையைத் திராவிட நாட்டிற்குத் தந்த காஞ்சி — அந்தக் காஞ்சியில் தான் தமிழர் கூடினர், போர் முழக்கம் செய்தனர். (* 1925 காஞ்சிபுரத்தில் தோழர் திரு.வி.க. தலைமையில் நடைபெற்ற தமிழ் மாநிலக்காங்கிரஸ் மாநாட்டில் தான் தலைவர் ஈ. வெ.ரா. காங்கிரசைவிட்டு, வெளியேறினார்.)

காலையில், மாநாட்டுத் திறப்பாளர், தலைவர், கொடி ஏற்றுபவர் , எஸ். முத்தையா நால்வருக்கும் காஞ்சி நகராட்சியினர் வரவேற்பிதழ் வாசித்தளித்தனர். பிறகு அரியதோர் ஊர்வலம்! விண்ணைப் பிளக்கும் வாழ்த்தொலி!

கண்ணன் கொட்டகையில், மாநாடு . இசைச்செல்வன் நமசிவாயத்தின் தமிழிசை. கான்பகதார் கலிபுல்லாவின் தமிழ்க் கொடியேற்றம். காஞ்சிப் பிரமுகர் பி. எஸ். கந்தசாமி சாவின் வரவேற்புரை. சர் . எம். கிருஷ்ணன் நாயர் திறப்பு விழாப் பேச்சு. இத்தனையும் ஆனபின் முன்னாள் கவர்னர் சர். கே. வி. ரெட்டி நாயுடு மாநாட்டிற்குத் தலைமை பூண்டு, கட்டாய இந்தி கேடானது என்பதை நன்கு விளக்கிவிட்டு , நேர்மையான — சட்டப்படியான எல்லா வழிகளிலும் உழைத்துப் பார்த்து நீதி கிடைக்காவிட்டால் இந்தியை ஒழிப்பதற்காகத் தாம் போர் புரியவும் அதன் பொருட்டு சிறைக்கோட்டம் செல்லவும் தயார் என முழங்கினார். அவருடைய தலைமையுரையின் சில பகுதிகள் :

சர் கே. வி. ரெட்டி நாயுடு தலைமையுரை

இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவது ஒரு மகத்தான பிரச்சினை மட்டுமல்லாமல் நமது கலை மொழி நாகரிகம் ஆகியவற்றைப் பாதிப்பதாக இருப்பதை உணர்ந்ததால் தான் இத் தலைமைப் பொறுப்பை நான் உடனே ஏற்றுக்கொண்டேன். மேலும் என்னை இம் மாநாட்டிற்குத் தலைமை தாங்கச் செய்வதன் மூலம், இந்தப் பிரச்சினை, தமிழர்களை மட்டுமன்று இந்த மாகாணத்தில் உள்ள நான்கு மொழியினரையும் பாதிக்கக் கூடியது என்பதை அரசாள்வோர்க்கு உணர்த்துகிறீர்கள் என நம்புகிறேன். அது முற்றிலும் உண்மையாகும். இந்திப் போராட்டத்தில் உங்களுடன் ஒத்த கருத்துடைய ஆந்திரர் பலர் இருக்கின்றார்கள் என உறுதி கூறுகின்றேன். தமிழன் மட்டுமல்ல, திராவிட ரத்தம் ஓடும் எவனும், இந்த வேண்டாத இந்தி மொழி , முன்னரே தூக்க முடியாத சுமையைச் சுமக்கின்ற நமது சிறுவர்களிடமும், சாந்தத்தோடு இருக்கும் நம் வீட்டினுள்ளும் புகுத்தப்படுவதைப் பொறுத்துக் கொண்டிருக்கவே மாட்டான். இந்தத் திட்டம் நிறைவேற்றப்படுமானால் நம் குடியாட்சி உரிமை பாதிக்கப்படுவதோடு, தமிழன் தனிப்பெருமை குன்றும் — திராவிட நாகரிகம் சிதையும் என்பது உறுதி.

"கட்டாயம்" வேண்டாம்

முதலிலேயே ஒன்று கூறிவிடுவோம். பிள்ளைகளும் பெற்றோரும் விரும்பினால் இந்தியைப் படிக்கலாம். அதை நாம் கண்டிக்கப் போவதில்லை. கிரேக்க மொழியானாலும் சரி , அன்றி சீன மொழியானாலும் சரி, யார் வேண்டுமானாலும் தமக்கு விருப்பமான மொழியைப் படிக்க உரிமை இருக்கிறது. கட்டாயப் படுத்தி இந்தியைத் திணிக்கும் செயலையே நாம் வெறுக்கிறோம், கண்டிக்கிறோம், எதிர்க்கிறோம்.

தமிழெங்கே, இந்தி எங்கே ?

நான் இந்தியைக் கற்றறிந்தேனில்லை. எனினும் எனக்குத் தெரிந்தவரை, 13 ஆவது நூற்றாண்டின் துவக்கத்தில் தான், இந்தி மொழியின் ஆதிகவி எனப்படும் "சண்ட்பார்டி" என்பவர் இருந்தார் என அறிகிறேன். அவர் "பிருதிவிராஜ ராஸ்யூ ' என்ற நூலை எழுதினார், அந்த மொழியிலே அதற்கு முன்னால் வேறெந்தக் கலையும் இருந்ததாக நாம் அறியோம். ஆனால் தமிழ் இந்தியாவின் ஆதிகால மொழி, தமிழ் இலக்கணமாம் தொல்காப்பியம்"

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இயற்றப்பட்டது. தமிழெங்கே, இந்தி எங்கே? இரண்டிற்குமா ஒப்பிட்டுப் பார்ப்பது !

தொல்காப்பியம் என்பது ஓர் இலக்கண நூல். ஒரு மொழி நல்ல திட்டமான வளர்ச்சி அடைந்த பிறகுதான் அதற்கு இலக்கண நூல் தேவையாக இருக்கும். ஆகவே இரண்டாயிர ஆண்டுகட்கும் முன்னாலேயே தமிழ் மொழி மிகச் சிறந்த வளர்ச்சியைப் பெற்றிருந்தது என்பது தெளிவு. தமிழ் மொழி பண்டைக்கால மொழி என்பதோடு கவர்ச்சியும் வனப்பும் நிரம்பிய மொழி. தொல்காப்பியத்தின் ஒரு சில அடிகளை நெருங்கவும் இந்தியினால் முடியாது.

இத்தகைய ஆதிமொழி என இந்தியைக் கூற முடி யுமா? குறள் போன்ற எந்த அரிய நூலேனும் இந்தியில் காட்டமுடியுமா? ஒழியட்டும், இந்தி மிக நன்றாக வளர்ச்சி அடைந்த மொழி என்றுகூட வைத்துக்கொள்வோம். அதற்காக இந்தியை நம் நாட்டில், கட்டாயப்படுத்திப் புகுத்த வேண்டுமா — என்ன?

இந்தி ஏன்?

வேறு எந்தக் காரணத்திற்காக இந்தியைக் கற்பிக்க வேண்டும் ? அதனால் என்ன பயன் விளையும்? மூன்று ஆண்டுகளுக்குக் கட்டாயப்படுத்துவதால், இந்தியைப் படிக்கும் மாணவர்களுக்கு அந்த மொழி அறிவு என்றென்றும் அப்படியே இருக்குமென்றா எதிர்பார்க்கப் படுகிறது? சிறுவயதில் இந்தியைப் படிப்பதால் இவர்கள் பெரியவர்களாகி வேலை தேடிக்கொண்டு வட நாட்டிற்குச் செல்லும்போது இந்தி மொழியறிவு துணை செய்யும் என்பது வெறும் கோமாளிக் கூத்தாகும். முதல் மூன்று பாரங்களில் இந்தியைக் கற்றுக் கொண்டதற்காக மதராசிகளை வடநாட்டு மாகாணங்கள் எளிதில் வேலைக்கு அமர்த்திக் கொள்ளவா போகின்றன? ஏன் , வடநாட்டிலே படித்தவர்களிடை வேலையில்லாத் திண்டாட்டம் இல்லையா? தலைமுறை தலைமுறையாக நம்மவர் சிலர் யாத்திரை , வாணிபம் முதலியவற்றின் பொருட்டு வடநாடு சென்று வருகிறார்கள். இந்தியைக் கட்டாய பாடமாக்கிக் கற்க வேண்டுமென்ற அவசியம் அவர்கட்கு என்றும் ஏற்பட்டதே இல்லை.

பொது மொழி தேவையா?

உண்மையிலேயே , இந்தியைக் கட்டாய பாடமாக்கு வதற்கு ஏதாவதொரு காரணத்தைக் கூறவேண்டுமானால், இந்தியக் கூட்டாட்சி (சமஷ்டி) ஏற்பட்டு ,

மாகாணங்களும், சுதேச சமஸ்தானங்களும் ஒன்றாக ஒரு ஆட்சியின் கீழ் அமைந்தால், யாவரும் ஒரே நாட்டு மக்கள் என்ற உணர்ச்சி வளர ஒரு பொதுமொழி தேவை என்பதைத்தான் கூறமுடியும். இந்த ஒரு காரணந்தான் ஏதோ பார்வைக் காவது காரணம்போல் தோன்றக்கூடும்.

ஆனால் அத்தகைய கூட்டாட்சி ஏற்பட்டால் கூட நாட்டுப்பற்று வளரவோ நாட்டு ஒற்றுமை பலப்படவோ ஒரு பொது மொழி இருந்து தான் தீரவேண்டுமா? வரலாறு, வேண்டாம் என்றே தீர்ப்பளிக்கிறது.

வரலாறு புகட்டும் பாடம்

கனடாவைப் பார்ப்போம். அங்கு சமஷ்டி அரசியல் இருக்கிறது. அங்கு இப்போதும் பிரஞ்சு, ஆங்கிலம் இரு மொழிகளும் பேசப்பட்டு வருகின்றன. அந்நாட்டுச் சட்ட மன்றத்தில் கூட , பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய இருமொழிகளும் கையாளப்படுகின்றன.

தென் ஆப்பிரிக்காவை எடுத்துக் கொள்வோம். அங்கு இரு சாதியினர் இருக்கின்றனர் ; இருமொழிகளும் இருக்கின்றன. ஆங்கிலேயருக்கு ஆங்கிலமும் , போயர் எனப்படும் டச்சுக்காரருக்கு டச்சுமொழியும் இன்றும் இருந்து வருகின்றன. இரு மொழிகளும் அரசியல் மொழிகளாக இருக்கவேண்டுமென்றும், இரண்டிற்கும் சம உரிமை, சம அந்தஸ்து, சமசந்தர்ப்பம் வழங்க வேண்டுமென்றும், சட்டசபை நிகழ்ச்சிகள், குறிப்புகள்யாவும் இரண்டு மொழிகளிலும் எழுதப்பட வேண்டுமென்றும் 1909 ஆம் ஆண்டு தென்னாப்பிரிக்கச் சட்டம் கூறுகிறது.

சுவிட்சர்லாந்து தேசத்தில் மூன்று வகை சாதியினர் உள்ளனர். மூன்றுவகை மொழிகளும் பேசப்படுகின்றன. ஆனால் நாடு ஒன்றுதான். நாட்டு ஒற்றுமையும் உள்ளது. 1874—ல் நிறைவேற்றப்பட்ட சமஷ்டி சட்டத்தின்படி, ஜெர்மன், இத்தாலி , பிரெஞ்சு ஆகிய மூன்று மொழிகளும் தேசிய மொழிகளாக ஏற்படுத்தப்பட்டன. அங்கு 100—க்கு பேர் ஜெர்மன் மொழியும், 23 பேர் பிரெஞ்சு மொழியும், 5 அல்லது 6 பேரே இத்தாலிய மொழியும் பேசுபவர்கள் என்ற போதிலும் கூட மூன்று மொழிகளும் தேசிய மொழிகளாக ஏற்படுத்தப்பட்டன.

1919—ல் நிகழ்ந்த புரட்சிக்குப் பிற்பாடு அமைக்கப் பட்ட ஜெர்மானிய அரசியல் அமைப்பக் திட்டத்திலும் ஜெர்மன் கூட்டாட்சியைச் சேர்ந்த பல திறப்பட்டவரின்

மொழி உரிமையில் சட்டப்படியோ நடைமுறை வழியாகவோ , அரசியலார் கைவைக்கக் கூடாதென்று திட்டவட்டமாக வரையறுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

"இவைகளை எல்லாம் கவனிக்கும் போது, இந்தியாவிற்கு ஒரு பொதுமொழி தேவையே இல்லை என்பது நன்கு விளங்கும். பல நூற்றுக்கணக்கான மொழிகள் பரவி உள்ள மாகாணங்களிலும் தனி அரசுகளிலும் (சமஸ்தானங்கள் ) ஒரு புது மொழியைத் திணித்துப் பொதுமொழியாக்குவது என்பது நடக்கக்கூடிய செயல் அன்று. நிலையான ஓர் எல்லா இந்தியப் பொதுமொழி கனவுலகில் தான் இருக்க முடியும்

திராவிட மொழிகள் வாழ்க

கலைஞான உரிமை நமது உயரிய இலட்சியம். அதை இந்தி அரக்கன் தன் இரும்புக்காலின்கீழ்ப் போட்டுத் துவைப்பதை நாம் சகியோம். நமது பள்ளிக் கூடப் பிள்ளைகளுக்கு இப்போது இருக்கும் சுமையே அதிகம். இந்த இந்தியைப் படிக்க சக்தியையோ , நேரத்தையோ அவர்களால் செலவிட முடியாது.

கட்டாய இந்தித் திட்டத்தினால் மக்களிடை மனக் கொதிப்பு நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. பார்க்கக் கண்களும் கேட்கச் செவிகளும் படைத்தவர்களாக நமது மந்திரிமார்கள் இருப்பின் அந்த எதிர்ப்பு எவ்வளவு பிரும் மாண்டமான உருவுடன் உள்ளதென்பதை அறிவர். அவர்கள் விவேகிகளாக இருந்தால் நாம் எச்சரிக்கை செய்வதை ஏற்று நடப்பர்.

தாய்மொழியைப் பாராட்டாதவன் தாய்மொழியைக் காட்டிக் கொடுத்த துரோகியும் கோழையும் ஆவான், ஏசுநாதரைக் கொஞ்சப் பணத்துக்காகக் காட்டிக் கொடுத்த ஜூடாஸ் என்று தாய்மொழியைக் காட்டிக் கொடுப்பவனை நாம் கூறுவோமாக. ஜூடாஸ் செய்த சதி காரணமாக ஏசுநாதர் கொல்லப்பட்டார். ஆனால் கிறித்து மார்க்கம் நிலைத்து நிற்கிறது. அதுபோன்றே திராவிட மொழிகளும் இன்றைய ஜூடாஸ்களுக்குத் தப்பி நிலைத்து நிற்குமாக".

பிற்பகல், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் படத்தைத் தலைவர் பெரியார் அவர்கள் திறந்து வைத்தார். அது முடிந்ததும் பின்கண்ட தீர்மானங்கள்

நிறைவேறின :

(1) தேர்தல் காலத்தில் காங்கிரஸ்காரர் கூறாததும் தேர்தல் அறிக்கையில் காணப்படாததுமான இந்தியைக் கட்டாய பாடமாக்கும் போக்கை இம் மாநாடு அழுத்தமாகக் கண்டிக்கிறது.

முன் மொழிந்தவர் : மேடை தளவாய் குமாரசாமி முதலியார்

பின் மொழிந்தவர் : கி. ஆ. பெ. விசுவநாதம் என். எம். நஞ்சையா

(2) முதல் மூன்று பாரங்களில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவது சிறுவர் கல்விக்குக் கேடு விளைவிப்பது என்பதை இம்மாநாடு அரசினர்க்கு அறிவுறுத்துகிறது.

முன் மொழிந்தவர் : பேராசிரியர் சோமசுந்தர பாரதியார்

பின் மொழிந்தவர் : சர் பி.டி. இராசன்

(3) பொதுமக்கள் பணத்தைக் கொண்டு சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தில் தேவையற்ற இந்திக்குப் பணம் செலவழிக்கக் கூடாதென இம்மாநாடு எச்சரிக்கிறது.

முன் மொழிந்தவர் : தளபதி அண்ணாதுரை

பின் மொழிந்தவர் : த.வெ. உமாமகேசுவரனார்

(4) பொதுமக்களின் கொதிப்பைப் பொருட்படுத் தாமல் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கினால் சமூக அமை திக்குக் கேடு விளையுமென்று கவர்னருக்கும் வைசிராய்க்கும் இம் மாகாண மாநாடு எச்சரிக்கிறது.

முன் மொழிந்தவர் : கே. எம். பாலசுப்பிரமணியம்

பின் மொழிந்தவர் : கே. வி. அழகிரிசாமி , அ. பொன்னம்பலனார், ஈழத்தடிகள்

### 3. இந்திப்போர் — திருச்சி திட்டம் தீட்டுகிறது!

தமிழர் எதிர்ப்பு கண்டு சளைக்காது ஆச்சாரியார் அவர் கள் 21—4—38—ல் இந்தி கட்டாயப் பாட உத்திரவைப் பிறப் பித்துவிட்டார். எனவே தமிழ்ப் பெருமக்களும் மொழிப் போருக்கான நடைமுறைத் திட்டங்கள் தீட்ட மந்திரா , லோசனைக் கூட்டம் கூட்டினர் திருச்சியில் 28— 5—38—ல் .

திருச்சிப்பாசறை : 28— 5—38: நாட்டின் தமிழ் இரு தய பீடமாயிருக்கும் திருச்சி நகரில் இந்திப் போருக்கான கொடி மரம் இன்று நாட்டப்பட்டுவிட்டது.

பல இடங்களிலும் நிறுவப்பட்டிருந்த பல்வேறு இந்தி எதிர்ப்பு வாரியங்களின் மந்திராலோசனைக் கூட்டம் இன்று காலை திருச்சி தென் னூர் பழனிச்சாமிபிள்ளை அவர்கள் பங்களாவில் பேராசிரியர் பாரதியார் தலைமையில் கூடியது. இதற்காகத் தமிழ் நாட் டின் நானா பக்கங்களிலிருந்தும் பல சேனைத் தலைவர்களும் , தளபதிகளும், போர்வீரர்களும், வீராங்கனைகளும் நேற்று இரவு முதல் இன்று காலை 8— மணிவரை ஒவ்வொரு இரயிலில் இருந்தும் இறங்கி வந்தவண்ணமாயிருந்தனர்.

திரண்டு குழுமி இருந்த வீரர்களை எதற்கும் தயாராய் இருக்கக்கூடிய துள்ளுகாளைகள் என்று சொன்னாலும் தகும். இந்தியை நுழைப்பதில்லை — அதற்குப் பதிலாக நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் உடம்பிலிருந்து ஒருபடி இரத்தம் எடுத்துத்தர வேண்டுமென்று கேட்டிருந்தால் அதை முகஞ்சுளிக்காகல் செய்து கொடுக்கத்தக்க வீர உள்ளங் கொண்டவர்களே வந்திருந்த அத்தனைப்பேரும்.

கூட்ட நடவடிக்கைகளின் போது உண்ணாவிரத வீரர் *ஸ்டாலின் ஜெகதீசனைப் (இவர் இந்தி ஒழியும்வரை உண்ணேன் என்று 1938 மே திங்கள் முழுதும் உண்ணாநோன்பிருந்து பின்னர் விட்டுவிட்டார்) பற்றிப் பிரஸ்தாபித்த சமயம் சகலர் முகமும் வேற்றுருப்பட்டுத் தெரிந்தனவென்றே சொல்லவேண்டும்.

"சத்தியாக்கிரகம் — அதில் வெற்றி கிடைக்காவிடில் சட்டமறுப்புத் தொடங்க வேண்டியதுதான் என்று தலைவர் பாரதியார் போர்முறைத் தீர்மானம் செய்ததும் சகலரும் ஆனந்தப் பெருவெள்ளத்தில் மூழ்கினர் என்று சொன்னால் மிகையாகாது. மொத்தத்தில் இன்று செய்யப்பட்ட மந்திராலோசனைத் தீர்மானம் ஒவ்வொன்றும் உயிருள்ளது என்றால் அது மிக மிகப் பொருந்தும். இன்று நிறைவேறிய தீர்மானங்கள் இவை :

1. சென்னை மாநிலம் முழுதும் இந்தியைக் கட்டாய பாடமாக்க முயலும் அரசியலார் கொடுஞ்செயலை வீரத் துடன் எதிர்த்து உயிர் கொடுக்கவும் துணிந்து இன்றுவரை போராடி வருகின்ற தமிழ்மக்கள் அனைவரையும் இக் கூட்டம் பெரிதும் பாராட்டுகிறது.

2. இந்தியைக் கட்டாய பாடமாக வைக்கப் பெறும் பள்ளிக்கூடங்கள் உள்ள ஊர்களுக்குச் சென்று பிரச்சாரஞ் செய்யவும், அந்தந்த ஊர்களில் இந்தி எதிர்ப்பு வாரியம் (Committee) அமைக்கவும், எல்லா ஊர்களிலும் பணந் திரட்டவும் செலவு செய்யவும், பொதுவாக இயக்கத்தை நடத்திச் செல்லவும் பின் கண்டவர்கள் அடங்கிய சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியத்தை (The Anti – Hindi High – Command) இக்கூட்டம் அமைக்கிறது : – வாரியத் தலைவர் : பேராசிரியர் பாரதியார். உறுப்பினர்கள் : பெரியார் . ஈ. வெ. ரா., த.வே. உமாமகேசுரனார், ஊ.பு. அ. சௌந்தர பாண்டியன், கே. எம். பாலசுப்பிரமணியம், கி. ஆ. பெ. விசுவநாதம் (செயலாளர்)

3. சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியமானது ஆங்காங்கு துணை வாரியங்களை (Sub – Committees) நிறுவி அடியிற்கண்ட வேலைத் திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென இக்கூட்டம் முடிவு செய்கிறது.

போர்முறைத் திட்டம்

அ. ஒரு வழிப்படை திரட்டிப் பல ஊர்களிலும் சென்று தமிழ் மக்களிடையே உணர்ச்சியை வளர்த்தல்.

ஆ. இந்தி கட்டாய பாடப் பள்ளிக்கூடங்களில் முதல் மூன்று பாரங்களுக்கு மாணாக்கர்களை அனுப்பாமல் வேறு பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பும்படி பெற்றோர்களையும் புரப்பவர்களையும் கேட்டுக்கொள்ளுதல் .

இ. இந்தி கட்டாயப் பாடத்தைத் தங்கள் பள்ளிகளில் வைத்து நடத்த வேண்டாமெனப் பள்ளிக்கூட முதல்வர் களைக் கேட்டுக்கொள்ளுதல்.

ஈ. மாணவர்களை இந்தி உள்ள பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிக்காமல் மறியல் செய்து தடைப்படுத்தல்.

உ . இந்தி ஆசிரியர்களை எல்லா வகையிலும் பகிஷ் , காரஞ் செய்ய சமாதான முறையில் தக்க ஏற்பாடுகளைச் செய்தல்.

ஊ. குறிப்பிடுகின்ற ஒரு நாளை இந்தி ஒழிப்பு நாளாக சென்னை மாநிலம் முழுதும் கொண்டாடிவர ஏற்பாடு செய்தல் .

எ . வாய்த்த போதெல்லாம் அமைச்சர்களுக்குக் கறுப் புக்கொடி பிடித்தல் முதலிய செயல்களால் கட்டாய இந்தி மீதுள்ள வெறுப்பைக் காட்டுதல்.

ஏ. மேற்கண்ட வேலைத்திட்டங்கள் வெற்றியைத் தராத வரையில் சட்டமறுப்புச் செய்தாவது இந்திக் கட்டா யத்தை ஒழித்தல்.

4. சென்னையில் இந்தி எதிர்ப்புப் போரை நடத்தவும், நடத்தும் முறைகளை வகுக்கவும், அப்போதைக்கப்போது ஆவன செய்யவும், தோழர் செ.தெ.நாயகம் அவர்களை முதல் சர்வாதிகாரியாக நியமிக்கிறது.

5. இந்திப் பயிற்சியை நமது மாநிலத்தில் பதவி களுக்கு இன்றியமையாத தகுதியாக்குவது அமைச்சர்களின் நோக்கமென நன்கு புலப்படுவதால் இந்தி விருப்பப் பாட மாக வருவதையும் ஒழிக்க வேண்டுமென இக்கூட்டம் முடிவு செய்கிறது. (நகர தூதன் )

கட்டாய இந்தியை யாருமே ஆதரிக்கவில்லை. ஜஸ்டிஸ் கட்சி, சுயமரியாதை இயக்கம், முஸ்லிம் லீக் , தாழ்த்தப்பட்டோர் மன்றம் இத்தனையும் அதை வெறுத்தன.

1. காங்கிரஸ் கட்சியிலும் அது கட்டாயப் பாடமாக்கப் படவேண்டுமென இதுவரை எத்தகைய தீர்மானமும் நிறை வேற்றப்படவில்லை. மாறாக 1938 அக்டோபர் திங்களில் அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டியில் (A.I.C.C.) அத் தகைய ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டபோது அது தோற்கடிக்கப்பட்டுவிட்டது. டாக்டர் வரதராசலு நாயுடு, ஜார்ஜ் ஜோசப் , பேராசிரியர் பாரதியார் , கருமுத்து தியாக ராச செட்டியார், என். வி. நடராசன், வ. சு. தேவ சுந்தரம்(இவர் அப்போது சென்னை மாவட்ட காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்.), ம. பாலசுப்பிரமணியம் பி.ஏ., பி.எல்.( இவர் அப்போது பெத்துநாயக்கன்பேட்டை காங்கிரஸ் கழகப் பொருளாளர் . இந்தியை எதிர்ப்பதன் பொருட்டு இருவரும் காங்கிரசை விட்டு 1938—ல் விலகினர்) கோபால ரத்தினம், பி. கே. விநாயக முதலியார் முதலிய பல காங் கிரஸ்காரர்களும், சென்னை "நம்நாடு' போன்ற காங்கிரஸ் இதழ்களும் இந்தித் திட்டத்தை முழுமனதுடன் வெறுத்தனர்.

2. கல்வியாளர்கள் : கல்கத்தா பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் சுனிதகுமார் சாட்டர்ஜி , கொச்சி கிராம அபிவிருத்தி அமைச்சர் அம்பட்ராம மேனன், சேலம் முனிசிபல் கல்லூரித் தலைவர் இராமசாமிக் கவுண்டர் எம். ஏ., எல்.டி., பேராசிரியர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை பி.ஏ., எல்.டி., சென்னை

பெடரல் சர்வீஸ் கமிஷனின் முன்னாள் உறுப்பினரும் அண்ணாமலைப் பல்கலைக் கழக இன்றைய தலைவருமாகிய பேராசிரியர் இரத்தினசாமி எம். ஏ., திருச்சி தேசியக் கல்லூரித் தலைவர் சாரநாத் அய்யங்கார் பி. ஏ , எல்.டி., கரந்தைத் தமிழ்ச்ச ங்கத் தலைவர் த. வே. உமாமகேசுரனார், கல்கத்தா பேராசிரியர் முகர்ஜி , "மாடர்ன் ரிவ்யூ" முன்னாள் ஆசிரியர் இராமா நந்த சாட்டர்ஜி , தியாசாபிகல் சங்கத் தலைவர் டாக்டர் அருண்டேல் (டாக்டர் அருண்டேல் கூறியது: இப்போதே மாணவர்கள் படிக்க வேண்டிய பாட புத்தகங்களின் எண்ணிக்கைக்குக் குறைவில்லை. அவர்கள் சுமந்து செல்ல வேண்டிய நோட்டுப் புத்தகங்களுக்கும் கணக்கில்லை. இவ்வளவும் போதாதென்று பள்ளிக்கூடப் பாடத்திட்டத்தில் கட்டாய இந்தியையும் சேர்ப்பது எவ்வாறு பொருந்தும்? எப்படிச் சிறுவர்களால் கற்க முடியும்? கட்டாய இந்தி சிறிதும் தேவையில்லாதது; சிறுவர்களால் தாங்க முடியாதது) இத்தனை பேர்க்கும் கட்டாய இந்தி உடன் பாடில்லை

9—4—39—ல் வங்காளத்தில் நடைபெற்ற வங்கமொழி மாநாட்டில் தலைமை பூண்ட டாக்டர் சுனிதகுமார சாட்டர்ஜி தம் தலைமை உரையில் குறிப்பிட்டது : ஆங்கிலத்தைத் தவிர வேறு எந்த மொழியை இந்தியத் தேசியமொழி ஆக்கினாலும் இந்தியரின் அறிவுக்கும் கலைகளுக்கும் ஆபத்து உண்டாவது உறுதி. மக்கள் வேண்டாத ஒரு மொழியை அவர்கள் தலைமீது வலுக்கட்டாயமாகச் சுமத்துவது பெருங் கொடுமையாகும். ஆகவே இப்பொழுது எழுந்திருக்கும் இந்த இந்திமொழி ஏகாதிபத்திய வெறியை எதிர்க்க — ஒவ்வொருவரும் கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு வரவேண்டியது மிகமிக இன்றியமையாதது. இந்தி அறியாத மக்கள் அதனைக் கட்டாயம் படிக்க வேண்டும் என்று ஏற்பட்டால் இந்தி பேசுவோர் வேறு ஏதேனும் ஒரு மொழியைக் கட்டாயம் படிக்கவேண்டும். இல்லையேல் இந்தி பேசுவோர் பிறர் மீது ஆதிக்கம் செலுத்தும் நிலை ஏற்பட்டு வீடும்"

3. பொதுவுடைமையாளர்கள் : எம். சிங்காரவேலு பி. ஏ. பி. எல். போன்றவர்கள். இவர்கட்கும் இந்தி உடன் பாடில்லை .

4. கிறித்தவர்கள் : சர் . பன்னீர்செல்வம், க.ப. மகிழ்நன் பி. ஏ . எல்.டி., ரெவரண்ட் அருள் தங்கையா, அனைத்து இந்தியக் கிறித்தவப் பெருமன்றத்

தலைவர் எம். இரத்தினசாமி முதலியோர் — இவர்களெல்லோகும் இந்தி வேண்டாம் என்றனர்.

5. தாழ்த்தப்பட்டோர் : இராவ்சாகிப் என். சிவராஜ், மீனாம்பாள் சிவராஜ் , திவான்பகதூர் இரட்டைமலை சீனி வாசன், திவான் பகதூர் எம். சி. ராஜா , இன்னபிறர் — இவர் கட்கும் இந்தி பிடிப்பில்லை.

6. முஸ்லீம்கள் : முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் ஜின்னா (காங்கிரஸ்காரர்கள் பள்ளிக்கூடங்களில் இந்தியைக் கட்டாய பாடமாகப் புகுத்துவதன் இரகசிய மெல்லாம் முஸ்லிம் ஆண் பெண் குழந்தைகள் உள்ளத்தில் ஆரிய மத தத்துவத்தைக் கட்டாயமாகப் புகுத்துவதே ஆகும் என்று இவர் அப்போது அறிக்கை விடுத்தார்.), கான்பகதூர் கலி புல்லா எம்.ஏ., பி.எல்., எம்.எல்.ஏ., திருச்சி சுல்தான் பாக்தாதி, அப்துல் அமீத்கான், அல்ஹாஜ் பா. தாவுத்ஷா பி . ஏ . கான் சாகிப் கஜாமியான் ராவுத்தர் , சென்னை மாநில முஸ்லிம் லீக் தலைவர் ஜமால் மகமது, காலஞ்சென்ற கொடைவள்ளல் நவாப் அப்துல் அகீம், இந்திய அரசின் வர்த்தக உறுப்பினர் சர் மகமது யாகூப் இத்தனைப் பேரும் இந்தி தேவையில்லை என்கின்றனர்.

(*சர் மகமது யாகூப் 22—7—38—ல் கூறியது: இந்தியாவுக்கு இந்தி ஒரு நாளும் பொதுமொழி ஆகாது. ஒரு மொழி பேசப்படும் மாகாணத்தில் மற்றொரு மொழி கட்டாய பாடமானால் எதிர்ப்பு கட்டாயம் இருக்கும். என் மாகாணத்தில் தமிழோ , தெலுங்கோ கட்டாய பாடமானால் இந்தி எதிர்ப்பாளர் கருதுவதுபோல்தான் நானும் கருதுவேன், நானும் எதிர்ப்பேன்.)

7. ஆந்திரர்கள் : ஆந்திர ரத்தின கோபால கிருஷ்ணமய்யா, முன்னாள் சென்னை கவர்னர் சர்.கே. வி. ரெட்டி நாயுடு போன்ற பலர் . இவர்கள் உள்ளமும் இந்தி தேவையில்லை என்றே சொல்லிற்று.

8. மலையாளிகள் : முன்னாள் சட்ட அமைச்சர் சர் எம். கிருஷ்ண நாயர் முதலியோர். இவர்களெல்லோரும் இந்தி எதற்கு என்றே கேட்கின்றனர்.

9. தமிழ்ப் புலவர்கள் : பேரறிஞர் மறைமலை அடிகளார், பேராசிரியர் பாரதியார், தாகூர் சட்ட விரிவுரை யாளர் கா. சுப்பிரமணியப் பிள்ளை எம். ஏ. எம். எல். வித்துவான் மறை திருநாவுக்கரசு , காமக்கூர் வித்துவான் சுந்தர முதலியார், திருவத்திபுரம் வித்துவான் கோவிந்தன், கரந்தைத் தமிழ்ச் சங்கம்

சிவ. குப்புசாமிப்பிள்ளை , திருவையாற்று அரசர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் கவியரசு வெங்கடாசலம் பின்ளை , மேற்படி கல்லூரிப் பேராசிரியர்கள் இ. கோவிந்தசாமிப் பிள்ளை , ஜி. சோமசுந்தர தேசிகர் , தமிழாசிரியர் மயிலை முத்துக் குமாரசாமி முதலியார், புலவர் செல்வராஜ் இன்ன பிறர். இந்தியால் தமிழ் — கெடுமா கெடாதா என்பதைப் பற்றித் தீர்ப்பளிக்க வேண்டிய இவர்கள் அத்தனைப் பேரும் ஒரு முகமாகச் சொல்லிவிட்டனர் இந்தியால் தமிழ் கெடும் என்று .

10. துறவிகள் : ஈழத்தடிகள் பி. ஏ., சாமி விபுலா னந்தர் பி. எஸ். சி. (லண்ட ன்), சாமி விமலானந்தர், சாமி அற்புதாநந்தர் , சாமி சண்முகாநந்தர், வள்ளல் சிவஞான தேசிகர், வண்ணாரப்பேட்டை சாது நாராயண் தேசிகர் மடாலயம் — சாமி அருணகிரிநாதர், ஸ்ரீதரசுவாமி கள், சாமி கைவல்யம், இன்னும் பலர் : இவர்களும் இந்தி மொழியை வாழ்த்தவில்லை!

11. வியாபாரிகள் : காஞ்சி அ. க . தங்கவேலர் . பி. எஸ்.கந்தசாமி சா , திருச்சி விசுவநாதம் , குடந்தை நீலமேகம் முதலிய பலர் . இவர்களுக்கும் இந்தி வேம்பு.

12. பெண்கள் : தமிழறிஞர் நீலாம்பிகை அம்மையார், டாக்டர் தருமாம்பாள் அம்மையார் பண்டிதை அ. நாராயணி அம்மையார் , சென்னை ஆர். நாராயணி அம்மையார். ஞானம் அம்மையார் (வித்துவான் மறை திருநாவுக்கரசின் துணைவியார்), சரோசினி அம்மையார் (மறைமாணிக்க வாசகத்தின் துணைவியார்), வ பா . தாமரைக்கண்ணி அம்மையார்; மற்றும் பலர் — இவர்கட்கெல்லாம் கட்டாய இந்தி தொலைய வேண்டும் என்பதே ஆசை.

13. ஜஸ்டிஸ் கட்சி : இந்தியை எதிர்த்துத் தீர்மா னம் நிறைவேற்றிற்று. கட்சித் தலைவர் பொப்பிலி அரசர் , துணைத்தலைவர்கள் சர் பி. டி. இராசன், சர். செல்வம், சர் பாத்ரோ, குமாரராஜா சர் முத்தையா செட்டியார், இராவ்பகதூர் என். ஆர் . சாமியப்பா , இராவ் சாகிப் வி. வி. ராமசாமி , மேடைதளவாய் குமாரசாமி முதலியார், திவான் பகதூர் அப்பாதுரை எம். எல். ஏ . — இந்தி வேண்டாம் என்பதே இவர்கள் உரை.

14. ஜன நாயகக் கட்சி : எஸ். முத்தையா முதலியார், கே. எம். பாலசுப்பிரமணியம் இன்னும் பலர் . இவர்கள் கருத்தும் அதுவே. |

15. சுயமரியாதைக்காரர்கள் : இந்திப்போர் வெற்றி பெற்றதற்குக் காரணமே இவர்கள் தாம்.

16. பார்ப்பனர்கள் : மகாகனம் சீனிவாச சாத்திரி யார், முன்னாள் உயர் நீதி மன்ற நீதிபதி சி. வி. விசுவநாத சாத்திரி, மகா மகோபாத்யாய டாக்டர். உ. வே. சாமி நாதையர், காஞ்சி பரவஸ்து இராசகோபாலாச்சாரியார், பம்பாய் இந்தியன் சோஷியல் ரிபார்மர்' ஆசிரியர் கே. நடராசன், முன்னாள் அட்வகேட் ஜெனரல் — அனைத்து இந்திய மிதவாதிகள் மன்றத் தலைவர் — டி. ஆர். வெங்கட் ராம சாத்திரியார். (டி. ஆர். வெங்கட்ராம சாத்திரியார்11—11—37—ல் எழுதியது : இந்தியைக் கட்டாய பாடமாக்குவது ஒரு தவறான ஏற்பாடு. ஓர் அந்நிய மொழியை விருப்பப் பாடமாக்காமல் கட்டாய பாடமாக்குவது ராக்ஷசத்தன மாகும். தென்னாட்டு மக்களில் பெரும்பாலோருக்கு இந்தி தேவையே இல்லை. ) சென்னை பிரஜா உரிமைச் சங்கத் தலைவர் கே. பாஷ்யம் பி. ஏ. பி. எல்., எம்.எல்.ஏ., ஹரிஜன் சேவா சங்கத் தலைவர் திவான்பகதூர் பாஷ்யம் அய்யங்கார், வி. வி. சீனிவாச அய்யங்கார், சாரநாத அய்யங்கார் பி. ஏ. எல்.டி., இன்னும் பலர் — இவர்களுக்கும் கூட இந்தி கசப்பு. கட்டாய இந்தியை இவர்களும் பல முறை கண்டித்தனர்.

யார் கண்டித்தாலென்ன? யார் எதிர்த்தாலென்ன? தமிழ்நாடே திரண்டெழுந்து இந்தி வேண்டாம் என்று சொல்லித்தான் என்ன? கட்டாய இந்தித் தாக்கீது பிறந்து விட்டது.

கண்டான் தமிழன் ! சூள் உரைத்துவிட்டான் ! "எங்கள் உடல் பொருள் ஆவி எல்லாம் எங்கள் இன்பத் தமிழ் மொழிக்கே தருவோம் — பங்கம் விளைத்திடில் தாய் மொழிக்கே உடன் பச்சை இரத்தம் பரிமாறிடுவோம்" என்று தமிழன் பேசிவிட்டான். தன்னைத்தான் தயார் செய்து கொண்டு புறப்பட்டுவிட்டான் மொழிப் போராட்டத்திற்கு. "புறப்படு" என்று போர்த்தலைவர் பெரியாரும் ஆணை யிட்டுவிட்டார்.

8—3—38, 15—5—38, 22—5—38 29—5—38 ஆகிய நான்கு வார குடி அரசு' இதழ்களில் ,

"ஹிந்தி வந்துவிட்டது, இனி என்ன? ஒரு கை பார்க்கவேண்டியது தான்"

நெருக்கடி — என்றுமில்லா நெருக்கடி '"

"தொண்டர்களே சென்னை செல்க "

போர் மூண்டு விட்டது — தமிழர் ஒன்று சேர்க'

என்னும் தலைப்புகளில் தலைவர் பெரியார் அவர்கள் நான்கு தலையங்கங்களைத் தீட்டினார். அந்த எழுத்துக்கள் தமிழ் நாட்டில் பெருத்த பரபரப்பையும் ஆவேசத்தையும் மூட்டிவிட்டதோடு, கொஞ்சம் அப்படியும் இப்படியுமாய் இருந்த தமிழர்களைக்கூட கையைப்பிடித்து இழுத்து வந்து போர்க்களத்தில் நிறுத்திவிட்டன.

போர்த் தலைவர்கள் தம் படைவீரர்களிடையே மட்டு மல்ல — பொது மக்களிடையே கூட எத்தகைய எளிய வார்த்தைகளால் எப்பேர்ப்பட்ட அரிய உணர்ச்சிகளை எழுப்ப முடியும் என்பதற்குரிய அழகிய இலக்கியங்கள் என அந்தத் தலையங்கங்கள் விளக்குவதை நீங்களே படித்துப் பாருங்கள் : —

அத் தலையங்கங்களின் சில பகுதிகள் :

"தமிழ் நாட்டில் தமிழ் மக்களுக்கு இந்தி மொழியைக் கட்டாய பாடமாகக் கற்பிக்க வேண்டுமென்று முதல் அமைச் சர் தோழர் இராசகோபாலாச்சாரியார் பிடிவாதமாக முடிவு செய்துவிட்டார்."

சூழ்ச்சி , சுயநலம், விஷமம் , வர்ணாச்சிரமம் ஆகிய விஷங் கலந்த இத் திட்டத்தைத் தமிழர் உண்டு மாள்வரோ என நாம் பயந்தோம். அக்கிரகார மந்திரி சபையின் அக்கி ரமப் போக்கால், தமிழர் சமூகம் நசிக்காதிருக்க வேண்டுமே எனக் கவலைகொண்டோம். இத்திட்டம் அர்த்தமற்ற அவசியமற்ற மோசமான மனு ஆட்சித் திட்டமென்றோம். நம்மைப் போன்றே தமிழர் உலகும் கருதிற்று. தமிழர்கள் சீறி எழுந்தனர். எங்கும் ஒரு கொதிப்பு ஏற்பட்டது. தமிழ் நாடு கொந்தளித்தது. பலமான கிளர்ச்சி ஆரம்பித்தது. ஆயிரக் கணக்கான மக்கள் அடங்கிய கூட்டங்கள் கூட்டப் பட்டு பிரதி தினமும் இந்திக் கண்டனத் தீர்மானங்கள் நிறை வேறப் பெற்றன. 'தாய்மொழி அழிக்கப்படுவதைக் கண்டும் கேட்டும் நாங்கள் உயிரோடு இரோம் " என்ற முழக் கம் மூலை முடுக்குகளிலும் எழும்பிற்று. தமிழர் கழகங்க ளென்ன, பாதுகாப்புச் சங்கங்களென்ன, இந்தி எதிர்ப்புச் சபைகள் எத்தனை , இவ்வளவும் தமிழ்நாட்டில் தோன்றின. பண்டிதர்கள் பதறினார்கள். மாஜி கவர்னர்களும், மாஜி மந்திரிகளும், காங்கிரஸ்மீது காதல் கொண்டோரும், பிரபலஸ்தர்களும்,

வாலிபர்களும், பொது மக்களிடை நிரந் தரமான தொடர்பைக் கொண்டுள்ள சுயமரியாதை இயக்கத் தலைவர்களும் தோழர்களும் இத்திட்டத்தைக் கண்டித்துப் பலத்த பிரசாரத்தைத் தென்னாடு பூராவும் நடத்தினார்கள். இக்கிளர்ச்சியின் பயனாகவே பல பிரத்யேகமான மாநாடுகள் நடைபெற்றன.

"இப்படியெல்லாம் தமிழ் மக்கள் எவ்வளவோ தூரம் முயன்றும், எத்தனையோ கூட்டங்கள் மூலம் தங்களுடைய அதிருப்தியையும் ஆத்திரத்தையும் காட்டியும் கனம் ஆச்சாரியார் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. உண்மையில் தமிழ் மக்களுக்கு இந்தி நஞ்சு என்பதை எடுத்துக்காட்ட தமிழ்மக்கள் எடுத்துக்கொண்ட முயற்சி கொஞ்சநஞ்சமல்ல. இன்று கனம் ஆச்சாரியார் மாத்திரமல்லாமல், மற்ற அமைச் சர்களும் அவர்களது காரியதரிசிகளும் தமிழ்நாட்டில் பொதுக் கூட்டங்களில் தலைகாட்ட முடியாத நிலை ஏற்பட்டிருப் பதற்குக் காரணம் இந்த இந்தியைக் கட்டாயமாக நுழைக்க முயற்சித்தது தான் என்பதை மனப்பூர்த்தியாக ஆச்சாரியார் உணர்ந்தும், அறைக்குள்ளாகவே இருந்து கொண்டாவது இந்தியைப் புகுத்தி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பது என்கின்ற விரதம் பூண்டு விட்டார். எனவே இனி கெஞ்சிக் கொள்ளுவதாலோ , சமாதானமான முறையில் வேறு ஏதா வது முயற்சி செய்வதாலோ எவ்விதப் பயனும் ஏற்படப் போவதில்லை என்கின்ற நிலைமை காணப்படுகிறது." —

இனி தமிழ் மக்கள் செய்யவேண்டியது என்ன என்பது தான் இப்போது முக்கியப் பிரச்சினையாய் இருக்கிறது ......"

"தமிழ் மக்களின் பழம் பெருமைகளும் பாட்டிக் கதை களும் எவ்வளவு மேன்மையாக இருந்தபோதிலும், தமிழ் மக்களின் இன்றைய நிலைமை பூர்வ பெருமைக்கேற்றதாக இல்லை என்பதோடு தமிழ்மக்கள் ஆரியக் கொடுமையி லிருந்து அதி இலேசாகத் தப்புவதற்குத் தகுதியான நிலை யிலும் இல்லை ."

இதனால் எந்தத் தமிழ் மகனும் பயந்துவிட வேண்டியதில்லை; அவநம்பிக்கை கொண்டுவிட வேண்டிய தில்லை. அதற்குப் பதிலாக இந்தியைத் தடுப்பதற்கு ஆக நாம் செய்யப்போகும் காரியங்களைத் திட்டப்படுத்துவதற்கு முன் நம் நிலையை நன்றாக உணர்ந்து, நம் வலியையும் மாற்றான் வலியையும் அளவுகண்டு மேலால் சிந்திக்க வேண்டும் என்பதை வலியுறுத்தவே இவற்றைக் குறிப் பிட்டோம் ......'

‘‘உண்மைத் தமிழ்ரத்தம் அதாவது சிறிதும் கலப்பற்ற சுத்த தமிழ் ரத்தம் ஓடும் வீரவாலிபர்களே இந்தி எதிர்ப்பு இயக்கத்துக்கு வேண்டும்."

"எப்படிப்பட்ட ஆரிய சூழ்ச்சிக்கும் தந்திரத்திற்கும் இணங்க முடியாத பெரியவர்களே நமக்கு வேண்டும்."

"பார்ப்பனத் தயவு இல்லாது வாழமுடியாது என்கின்ற தமிழ் மக்கள், முடிபுனைந்த மன்னனாய் இருந்தாலும் அவனுடைய நிழலும் இம் முயற்சியில் பட நாம் இடம் கொடுக்கக் கூடாது."

இரண்டிலொன்று அதாவது இந்தி பலாத்காரத்தை ஒழித்தாலொழிய தமது சொந்த வாழ்வைக் கவனிப்ப தில்லை என்கின்ற முடிவுக்காரர்கள் மாத்திரமே எதிர்ப்பு முயற்சி நிர்வாகத்தில் அங்கத்தினராய் இருக்கவேண்டும்."

"பொருளாதார விஷயத்தில் போதுமான பொருள் கிடைக்கலாம் என்றாலும், ஒரு சமயம் கிடைக்காமல் போய் விட்டாலும், கிடைத்ததைக் கொண்டு, கிடைக்காவிட்டால் பிச்சை எடுத்தாவது பசியை ஆற்றிக்கொண்டு உழைப்ப தற்கு உறுதி செய்து கொண்டவர்களே செயலில் கலந்து கொள்ள வேண்டும்."

ஏற்படுத்திக்கொள்ளும் திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு ஒழுங்காகவும் ஒழுக்கமாகவும் நடந்து வருவதாக ஒவ்வொரு இளைஞனும் உறுதி செய்துகொள்ள வேண்டும்."

கோடை விடுமுறை முடிந்த உடன் இந்திக் கட்டாய பாடமுறை அமுலுக்கு வரப்போகிறது. ஆகையால் அதிக சாவகாசம் இல்லை என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும். சகல பொறுப்புகளும் மானமுள்ள பரிசுத்த இளைஞர் கையில் இருக்கிறது என்பதை யாவரும் உணர வேண்டும். தோழர்கள் சோமசுந்தர பாரதியார், உமா மகேசுவரம் பிள்ளை , கி. ஆ. பெ. விசுநாதம் போன்றவர்கள் கீழிறங்கி வந்து வினைஞர்களாகி மற்ற வாலிபர்களுக்கு வழி காட்டிகளாகச் செல்லவேண்டும்."

தாங்கள் முடிக்க எண்ணும் கருமத்திற்குச் சிறை செல்வது என்பது மிக மிக சாதாரண காரியமாகும். அதுவே கடைசிக் காரியம் என்று யாரும் கருதிவிடக்கூடாது. ஆச் சாரியார் அதைச் சுலபத்தில் கையாளச் சம்மதிக்கமாட்டார் . ஆதலால் சிறை செல்லத் தயாராய் இருந்தால் போதாதா

என்று எண்ணிவிடக் கூடாது. சிறை செல்வது ஓர் அற்பக் காரியமே ஆகும். அதை மூன்றாந்தா ஆள்களுக்கு விட்டு விட வேண்டும். பிரமுகர்களும் பொறுப்பாளிகளும் அடி படவும் உயிர்விடவும் தயாராய் இருக்க வேண்டும்." —

ஏனெனில் நாம் போராடக் கருதுவது எவ்வித நெஞ்சி ரக்கமுமற்ற மறத்தன்மை கொண்ட மக்களோடு என்பதை ஒவ்வொரு வினைஞரும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். அதிலும் நாம் போராடக் கருதுவது எவ்வித இழிவான காரியத்தையும் செய்யத் துணிபவர்களும் சூழ்ச்சியில் திறமை உடையவர்களுமான மகாகொடியவர்களுடன் என் பதையும் ஒவ்வொரு எதிர்ப்பாளனும் மனத்தில் இருத்த வேண்டும்"

தமிழ் இளைஞர்களே, இதுவரை உங்களில் பலர் இந்தி எதிர்ப்புப் போருக்கு நான் தயார், நான் தயார். நானும் என் மனைவியும் தயார், உண்ணாவிரதத்திற்குத் தயார் என்பதாகத் தெரிவித்துக் கொண்டிருக்கிறீர்கள். அவரவர்கள் கஷ்ட ஜீவனம் நடத்தவும், அடிபடவும், இராப்பட்டினி பகல் பட்டினி கிடக்கவும், தொலைவழி நடக்கவும் தயார் செய்து கொள்ளுங்கள். போர்முனைச் சிப்பாய் போல் ஆக்கினைக்கு அடிபணியவும் தயார் செய்து கொள்ளுங்கள்."

பெரியோர்களே , முன்மாதிரி காட்ட வாருங்கள். உங்களுடைய உள்ளங்களுக்குப் புதிய அங்கியை மாட்டிக் கொள்ளுங்கள். தனியுரிமை வாழ்க்கைக்குக் கருதப்படும் மானம் அபிமானம் வேறு, பொதுவுரிமை வாழ்க்கைக்குக் கருதப்படும் மானம் அபிமானம் வேறு என்பதை மனதி லிருத்தி அதற்குத் தகுந்தபடி , உங்களுடைய மானம் அபிமானம் ஆகியவற்றை மாற்றி அமைத்து, அவைகளை உயிராய்க் கருதுங்கள். உங்கள் மார்பைப் பார்க்காதீர்கள், அடிச்சுவட்டைப் பாருங்கள். வீர இளைஞருக்கு நீங்கள் வழிகாட்டுகிறவர்கள் என்பதை ஒவ்வொரு அடி வைக்கும் போதும் ஞாபகத்தில் வையுங்கள்.

தமிழ்ச் செல்வர்களே, உங்களுக்கு ஒரு விண்ணப்பம். உங்கள் பழைய நடத்தைகளை மறந்து விடுகிறோம். இப்போது தமிழர் இருப்பதா இறப்பதா என்கின்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்நிலைக்கு நீங்களும் பங்காளிகள் என்று நாம் சொல்லுவதால் நீங்கள் முனிவு கொள்ளாதீர்கள். நடந்தது நடந்துவிட்டது. அதைப் பரிகரிக்க நீங்கள் மானத்திலும் உயிரிலும் பெரிதாய்

மதிக்கும் உங்கள் செல்வத்தைத் தாராளமாக இக்கருமத்திற்கு உதவி , பெரிய வீரராகுங்கள் .

"தமிழ்ப் பொதுமக்களுக்கு ஒரு மாபெரும் விண்ணப்பம். தமிழ்த் தோழர்களே, இந்த 50 வருட காலத்தில் தமிழ் மக்களுக்கு இப்படிப்பட்ட ஒரு நெருக்கடி ஏற்பட்டதில்லை. இன்று நடப்பது பிரிட்டிஷ் ஆட்சி அல்ல; வருணாச்சிரமப் புரோகித ஆட்சியாகும். அதன் ஒவ்வொரு மூச்சும் தமிழ் மக்களை விலங்குகள் ஆக்குவதற்காக விடப்படும் மூச்சாகும். விலங்குகளாக வாழ்வதைவிட உயிர் விடுவது மேலான காரியமாகும்."

ஏதோ விலக்க முடியாத பல காரணங்களால் தமிழ் மக்களில் பலர் புரோகித் ஆட்சிக்கு அடிமைப்பட்டுக் கிடந்தாலும் அதைப்பற்றிக் கவலைப்படாமல் அவர்களும் நாமும் நம் பின் சந்ததியும் மனிதர்களாக வாழ முயற்சிக்க வேண்டியது நமது கடமை என்பதை உணருங்கள்."

உங்கள் சௌகரியத்திற்கு அடங்கின சகல பரி சுத்தமான ஆதரவுகளையும் அளியுங்கள். உங்கள் வாலிப இளைஞர்களைப் போருக்குக் கச்சைகட்டி விரட்டி அடியுங்கள்."

தமிழ் மடாதிபதிகள் என்பவர்களே, நீங்கள் இது வரை நடந்து கொண்டதையும் மறந்துவிடுகிறோம். இந்தச் சமயத்தில் தைரியமாய் முன்வந்து உங்களாலான காசு உதவுவதோடு உங்களிடம் பக்தி விசுவாசம் காட்டுபவர் களை எங்களிடம் விரட்டி விடுங்கள்."

"தமிழ் மக்களுக்கு இந்திப்போர் ஒரு கிடைத்தற் கரிய பாக்கியம் என்றே ஒவ்வொரு தமிழ் மகனும் கருதவேண்டும் என்று ஆசைப்படுகிறோம். இது போன்ற ஒரு பயன் அளிக்கத்தக்க போராட்டம் இனி சுலபத்தில் ஏற்படும் என்று எந்தத் தமிழ் மகனும் லேசில் கருதமுடியாது என்பதோடு இது அவ்வளவு சுலபமானதும் அவ்வளவு பெரிய பயனை அளிக்கக் கூடியதுமான ஒரு அரும்பெரும் போராட்டமாகும். அதிக காலம் நீடிக்காது, அதிக தொல்லையும் துன்பமும் இருக்காது, அதிக பண நட் டமும் கூட இருக்காது என்று சொல்லத்தகுந்த ஒரு போர் என்றே சொல்லுவோம்."

"தமிழ் நாட்டில் மானமுள்ள சுத்தத் தமிழ்மக்கள் எத்தனைப்பேர் இருக்கிறார்கள் என்பதை உலகம் உணர இதைவிட வேறு தக்க சமயம் இனி

சுலபத்தில் கிடைக்காது கிடைக்காது.'

"ஆககே பொதுமக்களே இளைஞர்களே தயாராகுங்கள், முன் வாருங்கள், ஒரு கை பாருங்கள்."

ஆரிய சூழ்ச்சிக்கும் திராவிட வீரத்துக்கும் போர் மூண்டுவிட்டது ! போர் நெருங்கி விட்டது! தயார் ! தயார் !! வெற்றி நிச்சயம்!!!

# 4. சிறைச்சாலை அழைக்கிறது !

[இந்திப் போரில் செந்தமிழர் சிறைசென்ற வரலாறும், அடக்குமுறை மேன்மேலும் வலுத்த வகையும், "விடுதலையை ," "குடி அரசை" நிறுத்திவிட ஆட்சியினர் துடிதுடித்த விதமும், தளபதி அண்ணா சிறைபிடிக்கப் பட்ட தன்மையும் பிறவும் இந்தப் பகுதியில் விளக்கப் படுகின்றன]

புரட்சிப்புயல் வீசிற்று

தமிழ்த்தாய் மீது ஆச்சாரியார் வீசிய இந்திக் கத்தி வீச்சு தமிழர் உள்ளத்திலெல்லாம் பெருங்கோபத்தை மூட்டி விட்டது. தமிழர் சமுதாயம் முழுவதும் இக்கொடுஞ் செயல் கண்டு அடங்காத பேரெழுச்சிகொண்டு குமுறிக் கொந்தளித்தது. தமிழ் நாட்டில் புரட்சிப் புயல் விசிற்று. இத்தகைய உள்ளக் கிளர்ச்சி அண்மைக்காலத்தில் தமிழ் நாட்டில் எழுந்ததே இல்லை.

ஆச்சாரியார் பட்டத்திற்கு வந்த பத்து நாள்களுக்குள் தமிழ்நாடு முழுதும் மட்டுமன்றி இந்தியா முழுதுமே சமஸ் கிருதம் படிக்கவேண்டும் என்றார்.

'இந்தி ஏன்' என்பதற்கு ஆச்சாரியார் சொன்ன விந்தைக் காரணங்கள் பலவற்றுள் ஒன்று இந்தியைப் படித்தால் சமஸ்கிருதம் படிக்க எளிதாகும் என்பது. (குடிஅரசு 30—7—39

ஆச்சாரியார் ஆட்சிக்குப் பக்கமேளம் கொட்டிக் கொண்டிருந்த ஆனந்த விகடன் 17—10—37 இதழில் முதல் மூன்று பாரங்களில் மட்டுமே இந்திக் கட்டாயம் இருப்பதால் அதற்குமேல் உள்ள வகுப்புகளுக்குச் சமஸ்கிருதத்தை விருப்பப் பாடமாகவேனும் வைக்கலாம் என்று எழுதிற்று.

அதே சமயத்தில் சத்தியமூர்த்தி சாஸ்திரியார் சற்றும் அஞ்சாமல் வெளிப்படையாகவே சொன்னார் , சமஸ்கிருதத்தைக் கட்டாய பாடமாக்க வேண்டுமென்று.

என் கைக்கு அதிகாரம் வந்தால் — நான் சர்வாதிகாரியானால் — இந்தியர்களை இந்தியுடன் சமஸ்கிருதத்தையும் கட்டாய பாடமாகப் படிக்கச் செய்வேன். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அத்தனைப் பேரும் கட்டாயம் சமஸ்கிருதம் படித்திருக்க வேண்டும் என்கின்ற நிபந்தனையும் உடனே ஏற்படுத்தி விடுவேன். ஏனெனில் காந்தியார் உயிருடன் இருக்கும் போதே

இராமராஜ்யம் ஏற்பட்டுவிடவேண்டும் என்பது என் ஆசை. இராமராஜ்யமென்பது வருணாசிரம தருமத்தை — அவரவர் தம் தம் சாதி முறைப்படியே தொழில் செய்ய வேண்டும் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. ஒரு திராவிடக் கவியாகிய கம்பரே இதை ஒப்புக்கொண்டும் இருக்கிறார். இது பற்றிய வடமொழி இலக்கியத்தைத் தமிழில் மொழிபெயர்த்தும் இருக்கிறார். இராமராஜ்யம் ஏற்பட வேண்டுமானால் எல்லோரும் சமஸ் கிருதம் படித்தே தீரவேண்டும்" — இது தோழர் சத்தியமூர்த்தியார் பேச்சு.

நல்ல வேளை! அவர் சர்வாதிகாரியாகாமற் போனார்! தமிழருக்கும் சமஸ்கிருத கட்டாய பாடம் ஏற்படாமல் போயிற்று!

தமிழ் நாட்டில் இந்தி மொழியைப் புகுத்துவதன் இரகசியமெல்லாம் செத்த வடமொழியைச் செந்தமிழ் நாட் டார்பால் திணிக்கத்தான் — தமிழுணர்ச்சி அற்றவராய் அவர் தம்மை ஆக்கத்தான் என்று தமிழரெல்லாம் கொண்டிருந்த அய்யம் இந்தப் பேச்சுகளாலும் எழுத்துகளாலும் உறுதிப் பட்டுவிட்டது.

வடமொழிக் கலப்பு துளியுமின்றி தனித்தமிழ் இன்று இயங்க முடியும் — இந்தத் தனி வீறு தன்னை அழிக்கத்தான் இந்தி நுழைவு என்று தமிழர் எண்ணினர். அது பொய்யல்ல மெய் என்று மெய்ப்பித்துவிட்டனர் ஆச்சாரியாரும் மூர்த்தி யாரும் விகடனாரும்.

இச் சொற்கள் வெந்த புண்ணில் வேலிடுவதுபோல் தமிழர் நெஞ்சத்திற் பாய்ந்தன ; முன்னமே கொதித்திருந்த அன்னார் உள்ளத்தை மேலும் கொதிப்பேறச் செய்தன.

சிறை சென்ற முதல் தமிழன்

3—6—38: சென்னை கோடம்பாக்கத்தில் இந்தி ஒழிப்பு மாநாடு ! மறைமலை அடிகளார் மாநாட்டுத் தலைவர் . அன்றைக்கு அடிகளார் பேச்சு தேன் தமிழ் ! தீஞ்சுவை! தெவிட்டாத தெள்ளமுதம்! மக்களெல்லாம் அதைச் சுவைத்த வண்ணம் வீற்றிருந்தனர். இடையே சேதி ஒன்று கேட்டனர். செந்தமிழைச் சிறை மீட்க தமிழ்க்காளை ஒன்று சிறை புகுந்தது என்று அறிந்தனர். தியாகராயநகர் முதலமைச்சர் இல்லத்தின் முன் இந்தி ஒழியவேண்டும் இல்லையேல் நான் ஒழிய வேண்டும்" என்று சென்ற இரு நாளாய் உண்ணாநோன்பிருந்து வந்த தமிழ் வீரர் பல்லடம் பொன்னுசாமி சிறைப்பட்டார் என்றுணர்ந்தனர். உடனே

மாநாடு ஊர்வலமாயிற்று. அமர்ந்திருந்தோர் எழுந்து நடந்தனர் ! தியாகராய நகருக்குச் சென்றனர். வழிநெடுகத் தமிழ் வாழ்க ! இந்தி வீழ்க!" என்னும் பேரொலி. இரவு 9—மணிக்கு முதலமைச்சர் ஆச்சாரியார் இல்லத்தின் முன் பெருங்கூட்டம்! மூன்று மணி நேரம் தமிழ் முழக்கம்! செ.தெ. நாயகம், காஞ்சி மணி மொழியார் , சாமி சண்முகாநந்தம் மூவர் பேச்சு!

மாலை 6—மணிக்குப் பல்லடம் பொன்னுசாமி கைது ஆனார். இரவு 12 — மணிக்கு — கூட்டம் முடிந்ததும் — சென்னை இந்திப்போர் முதல் சர்வாதிகாரி நாயகமும் சண்முகாநந்த அடிகளும் சிறைபிடிக்கப்பட்டனர். பல்லடம் பொன்னுசாமிக்கு 6 வாரம் கடுங்காவல் — சண்முகாநந்த அடிகளுக்கு 4 மாதம் கடுங்காவல் . நாயகத்திற்கு ஒரு திங்கள் வெறுங் காவலும் 200 ரூபா அபராதமும் ! தமிழ்காத்த கொடும் பாவத்திற்குப் பரிசு இது!

3—6—38—ல் மூவர் சிறைப்பட்டனர். மூவருடன் முடிந்து விடவில்லை தமிழர் தொகை ! மேலும் மேலும் தமிழர் வந்து கொண்டே இருந்தனர். சிறைக் கதவைத் தட்டிக்கொண்டே இருந்தனர் ; நாள்தோறும் பத்துப்பேர் இருபது பேர் என்று ஆச்சாரியார் இல்லத்தின் முன் மறியல் செய்து கொண்டே இருந்தனர் ; சிறைவாசம் தொடங்கிக் கொண்டே இருந்தனர்.

3—6—38—ல் ஆச்சாரியார் சிறைக் கதவுகளைத் திறந்து விட்டார்; "சிலைச்சாலை அழைக்கிறது! தமிழர்காள்! வருக ! வருக " என்று அழைப்பு விடுத்தார். மெத்தச் சரி இதோ வந்தோம் என்று தமிழரெல்லாம் ஓடோடி வந்தனர் ; சிறைவாழ்வு தொடங்கினர்.

3—6—38—ல் திறந்த சிறைக்கதவை ஆச்சாரியார் மூடவில்லை, மூட முடியவில்லை. கட்டாய இந்தி தலை கவிழ்ந்து போகும் வரை முடியவில்லை.

3—6—38—ல் தொடங்கிய சிறைவாழ்வு 21—2—40—ல் தான் முற்றுப்புள்ளி பெற்றது ; இந்தி போனபின் தான் முற்றுப் புள்ளி பெற்றது ; ஆண்களும் பெண்களும் குழந்தை குட்டி களுமாக 1271— தமிழர் சிறைவாழ்வைச் சுவைத்த பின் தான் முற்றுப்புள்ளி பெற்றது.

துறவிகள் தமிழ்ப் பேச்சு

3—6—38—ல் கைதான தோழர் பல்லடம் பொன்னுசாமியின் உண்ணா நோன்பு 1—6.38—ல் தான் தொடங்கப் பட்டது. 1—8—38—ல் இந்திப் போர்வீரர்கள்

தங்குவதற்காகச் சென்னை தியாகராய நகரில் அமைக்கப்பட்டிருந்த இந்தி எதிர்ப்புத் தலைமை நிலையக் கொட்டகையிலிருந்து தோழர் ஈழத்தடிகள் தலைமையில் பெருத்த ஊர்வலம் புறப் பட்டு இந்தி எதிர்ப்பு வீர ஒலிகள் கிளத்தியவண்ணம் முதல் அமைச்சர் இல்லத்தின் முன் வந்து சேர்ந்தது. சேர்ந்ததும் அருணகிரி அடிகள், சண்முகாநந்த அடிகள், ஈழத்தடிகள், விமலாநந்த அடிகள் ஆகிய நான்கு துறவிகள் தமிழ்ப் பேச்சுப் பேசினார்.

பொன்னுசாமி உண்ணாநோன்பு

எல்லார் முன்னிலையிலும் தோழர் பல்லடம் பொன்னுசாமி தம் உண்ணாநோன்பைத் துவக்கினார். அவர் அமர கயிற்றுக்கட்டில் ஒன்று அங்கு இடப்பட்டது. குடமொன்றில் தண்ணீர் வைக்கப்பட்டது. அது ஒன்றே அவர்க்கு உணவு. அவர் உண்ணாநோன்பிருந்து வந்த இரண்டு நாளும் கடும் மழை! சுழன்றடிக்கும் காற்று திடீர் வெயில்! மன்னன் அசைந்தானில்லை. படம்விட்டுப் பெயர்ந்தானில்லை. இரவும் பகலும் அங்கேயே கிடந்தான், உறங்கினான், பேசினான், தமிழ் வாழ்க என முழக்கினான். பல சி.அய்.டி.களும் போலீஸ்காரர்களும் உடன் இருந்தனர். மேடை தளவாய் குமாரசாமி முதலியார், இராவ் சாகிப் என். சிவராஜ் முதலிய தலைவர்களும், ஏராளமான தோழர்களும், விளம்பர அமைச்சர் தோழர் இராமநாதன் உட்படப் பல காங்கிரஸ்காரர்களும் தோழர் பொன்னுசாமியை வந்து பார்த்துச் சென்றனர். சில தமிழ்ப் பகைவரும் அங்கு வந்தனர். பாம்பு ஒன்றை அங்கு விட்டனர் தமிழ் வீரர் பொன்னுசாமி சாகட்டுமென்று. என்ன வன்னெஞ்சம்! அன்று அந்த நச்சரவு நசுக்கப்பட்டது தமிழர்களால் . அப்படித்தான் ஆரிய நச்சரவும் நசுக்கப்படும் — இன்றில்லாவிட்டால் நாளையேனும்!

தோழர் பொன்னுசாமி சிறை வாழ்வு தொடங்கியபோது தான் ஓர் காங்கிரஸ்காரன் என்றும் தமிழன்னையைக் காப்பது தமிழ் மகனாம் தன் கடன் என்றும் வாக்குமூலத்தில் குறிப்பிட்டார்.

கடலோரத்தில் தமிழ்ப் பாசறை

சென்னைக் கடற்கரை இந்திப் போராட்டத்தில் ஒரு பாசறை ! திருவல்லிக்கேணி , உயர் நீதிமன்றம், இராயபுரம், மயிலாப்பூர் ஆகிய நான்கு கடற்கரைகளில் அந்தக் காலத்தில் இந்திப்போர் முழக்கம் கேட்டுக் கொண்டே

இருந்தது. ஒலியும் எதிரொலியும் அங்கெல்லாம் ஒலித்துக் கொண்டே இருந்தன. கடலோசையுடன் கலந்து கலந்து தமிழோசை எழும்பிக்கொண்டே இருந்தது. கடலருகே தமிழ்க் கடல் தன் அலைகளை வீசிய அழகிய காட்சி இருக்கிறதே அது தமிழ்ப் பாவலர்க்கும் நாவலர்க்கும் ஓவியர்க்கும் நல்லதோர் விருந்து!

5—6—38—ல் உயர் நீதிமன்றக் கடற்கரையில் கூடிய கூட்டத்தில் தலைவர் ஈ. வெ. ரா. பேசிய பேச்சு , வீரத்திற்கு விளக்கவுரை ; மாற்றார்க்குச் சவுக்கடி ; தமிழர்க்குத் தேன்.

26—6—38: திருவல்லிக்கேணி கடற்கரையில் 50,000 தமிழர் . கான்பகதூர் கலிபுல்லா எம். ஏ.பி.எல்., எம்.எல்.ஏ. கூட்டத் தலைவர். பெரியார் ஈ. வெ. ரா., தளபதி அண்ணாதுரை, திருச்சி விசுவநாதம், கே. எம். பாலசுப்பிர மணியம் ஆகிய நால்வர் பேச்சு.

31—7—38: மீண்டும் அதே இடத்தில் போர் முழக்கம். சர். பி.டி. இராசன் தலைமையில் தோழர்கள் தேவசுந்தரம், என். வி. நடராசன், டாக்டர் தருமாம்பாள், வித்துவான் மறை திருநாவுகரசு , வ . பா . தாமரைக்கண்ணி அம்மையார், ஆர். நாராயணி அம்மையார் முதலியோர் பேசினர். சர்.பாத்ரோ, திருவொற்றியூர் சண்முகம், டாக்டர் மே. மாசிலாமணி, முன்னாள் அமைச்சர் எஸ். முத்தையா முதலியோர் கூட்டத்தில் கலந்துகொண்டனர். கூட்டத்தில் அய்நூறு கதருடையாளர், ஆயிரம் பெண்கள், ஏராளமான வாலிபர்கள். கூட்டத்தின் தொகை 60,000. மெரினா நெடுஞ்சாலையில் மூன்று அமைச்சர்கள் தங்கள் கார்களில் அமர்ந்தவண்ணம் தமிழன் போர் முழக்கத்தைக் கண்டனர், கேட்டனர்.

மூன்று கூட்டங்களும் மாலை 6 மணிக்குத் தொடங்கி இரவு 11 மணிக்குத்தான் முடிந்தன.

சென்னை முதல் சர்வாதிகாரி நாயகம் கைது ஆனதால், சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியத்தினர் ஈழத்தடிகள் பி. ஏ . அவர்களை இரண்டாம் சர்வாதிகாரியாக்கினர். ஈழத் தடிகள் 3—6—38—ல் பதவி ஏற்றார். 28—7—38—ல் கைதானார். ஒன்பது திங்கள் கடுங்காவல், அவர் பெற்ற நன்கொடை.

ஜூலை 8—ல் சென்னை வண்ணாரப்பேட்டை சாது நாராயண தேசிகர் மடாலயம் — அருணகிரி அடிகளுக்கு சிறைச்சாலை அழைப்பு விடுத்தது. வெறும் அழைப்பு அல்ல. ஈராண்டு கடுங்காவலுடன் கூடிய அழைப்பு!

ஆகஸ்டு 6—ல் மூன்றாம் சர்வாதிகாரி தோழர் கே.எம். பாலசுப்ரமணியம் பி.ஏ.பி.எல்., அவர்களும், மூன்று நாள் பொறுத்து வித்துவான் மறை திருநாவுக்கரசும் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டனர் என்பதன் பொருள், ஆளுக்கு ஆறு மாதம், வெறுங்காவல் என்பது தான்.

தளபதியும் சிறை புகுந்தார் !

செப்டம்பர் 26—ல் தளபதி அண்ணாதுரை எம்.ஏ., அவர்களுக்கு 4 மாதம் வெறுங்காவலும் 'பி' வகுப்பும் தரப் பட்டன. சிறை செல்ல அவருக்குத் துளியும் வருத்த மில்லை. அவருக்கிருந்த ஒரே ஒரு கவலை சிறையில் வெற்றிலை பாக்கு கிடைக்குமோ கிடைக்காதோ என்பது தான்! வெற்றிலை பாக்குக்கும் தளபதிக்கும் அவ்வளவு நெருங்கிய தொடர்பு! சிறை வாழ்வு அவருக்கு ஓய்வு. அதைவிட முக்கியமாக அவருடைய குரலுக்கு ஓய்வு. நாள்தோறும் ஓயாமல் பேசிப்பேசித் தமிழர்களைத் தட்டி எழுப்பிய அந்த குரலுக்கு ஒரு ஓய்வு வேண்டாமா ! சிறை புகுந்த அன்று காலை கூட தமிழறிஞர் . கா . நமசிவாயர் படத்தை அவர் திறந்து வைத்தார். பேச்சுமேடை அவரை விடவில்லை, அவர் அதைவிட்டாலும்.

நவம்பர் 28—ல் திருவாரூர் பாவலர் பாலசுந்தரத்திற்கு 3 ஆண்டுக் கடுங்காவல் தந்தது ஆச்சாரியார் ஆட்சி. அவர் செய்த குற்றம் தமிழ் வாழ்க என்று கூறியது ! "ஓடி வந்த இந்திப் பெண்ணே கேள் , நீ தேடிவந்த கோழை யுள்ள நாடு இதல்லவே " என்று இந்தி எதிர்ப்பு மேடையிலிருந்து இசை முழக்கம் கேட்கும். பாவலர், பாவலர் என்று எல்லோரும் உடனே சொல்லத் தொடங்கிவிடுவார்கள். பாவலரை ஒரு வேளை மறந்துவிட்டாலும் பாவலர் பாடிய அந்தப் பாட்டைத் தமிழனால் மறக்க முடியாது.

சென்னையில் போர் அரங்கம்

ஜூன் முதல் வாரம் பல்லடம் பொன்னுசாமி கைதானதிலிருந்து முதலமைச்சர் வீட்டெதிரில் நாள்தோறும் மறியல் . ஜூன் மூன்றாம் வாரத்திலிருந்து சென்னை சௌகார் பேட்டை இந்து தியலாஜிகல் பள்ளி எதிரிலும் மறியல். இந்தி

எதிர்ப்புக்குப் போர் அரங்கமாக அந்தப்பள்ளி தெரிந்தெடுக்கப்பட்டதன் காரணம் சென்னையில் இந்தி புகுத்தப்பட்ட பள்ளிகளில் அது ஒன்று என்பது மட்டுமல்ல. அது ஒரு இந்துமதக் கோட்டை என்பதும் ஆகும். வடநாட்டுப் பனியாக்களும் தென்னாட்டு ஆரியர்களும் கை கோத்துக் கொண்டு தமிழ் வாழ்வைச் சிதைக்கின்றனர் என்பதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு சௌகார்பேட்டை. சமர் விளைவிக்க அதனினும் சிறந்த இடம் ஏது?

செப்டம்பர் 16—ல் போர்த் தலைவர் பெரியார் தனி மனிதர் வீட்டின் முன் மறியல் செய்தல் தேவை இல்லை என்றும் பொது இடத்தில் செய்தலே சிறந்தது என்றும் சொல்லி விடுத்த தாக்கீதுக்கடங்கி தமிழர் அது முதல் ஆச்சாரியார் வீட்டு முன் செய்து வந்த மறியலை நிறுத்திக் கொண்டனர்.

சிட்டுக்குருவி மீது பிரங்கிப் பிரயோகம் !

இச் சமயத்தில் ஜஸ்டிஸ் கட்சியின் அந்நாள் தலைவரும் சென்னை மாநில முன்னாள் முதலமைச்சருமாகிய பொப்பிலி அரசர் தம்முடைய மேனாட்டுச் சுற்றுப்பயணத்திலிருந்து தமிழ்நாடு திரும்பி வந்தார். தென்னாட்டில் இந்திக் கிளர்ச்சி பெரும் போராய் நடக்கக் கண்டார். அதை அடக்கச் சற்றேனும் பொருந்தாத அடக்குமுறை கையாளப் படுவதுங்கண்டார் அப்போது அவர் விடுத்த அறிக்கையில் இந்தியாவிற்குப் பொதுமொழி தேவை இல்லை என்றும், ஒரே மொழி இருந்தால் தான் ஒரு நாட்டில் தேசீய உணர்ச்சி வலுப்பெறும் என்பது உண்மைக்கு மாறானது என்றும், அய்ரோப்பாவில் பல நாடுகள் பல மொழிகள் கொண்டனவாய் உள்ளன என்றும், ஒருவேளை இந்தியாவிற்குப் பொதுமொழி தேவை என்பதை ஒப்புக் கொண்டாலும் அதற்கு இந்தி தான் ஏற்றது என்பது பொருந்தாது என்றும், இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி மிக நேர்மையானதும் இயற்கையானதுமாகும் என்றும், அதை வீழ்த்த மிகக் கொடிய அடக்குமுறை கையாளப்படுகிறது என்றும், மிகச் சிறு கிளர்ச்சி என்று இதனை இழித்துரைக் கும் அமைச்சர் அவை இத்தனைக் கொடிய அடக்கு முறையை இதன் மீது வீசுதல் சிட்டுக்குருவி மீது பீரங்கிப் பிரயோகம் செய்வது போன்றதே என்றும் குறிப்பிட்டிருந்தார்கள்.

விடுதலை மீது பாணம்

5—10—38—ல் ஈரோடு 'விடுதலை' நாளிதழ் அலுவலகத்தைப் போலீசார் சோதனை இட்டனர். பல கணக்குப் புத்தகங்களையும் ஏராளமான 'விடுதலை' இதழ்களையும் கைபற்றிச் சென்றனர். 7—10—38—ல் 'விடுதலை' பதிப்பாளரும் பெரியாரின் முன்னவருமாகிய வைத்திய வள்ளல் ஈ. வெ. கிருஷ்ணசாமியை அவர் வெங்கடப்ப நாயகர் தர்ம வைத்திய சாலையில் வைத்தியம் பார்த்துக் கொண்டு இருக்கையில் ஈரோடு சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கைது செய்தார்.

ஈ. வெ. கி. சிறை நோக்கி...

தோழர் ஈ. வெ. கி. யும் மலர்ந்த முகத்துடன் உடனே புறப்பட்டார் 'விடுதலை' நிலையத்தில் அதன் ஆசிரியர் கிழவனார் முத்துசாமி அன்றைய தலையங்கத்தைத் தீட்டிக்கொண்டு இருந்தார். இன்ஸ்பெக்டர் அழைப்புத் தாளைத் தந்ததும் எழுதிக் கொண்டு இருந்த தலையங்கத்தையும் இடை நடுவே விட்டு விட்டு உடன் போக எழுந்தார். அரச வெறுப்பு, வகுப்பு வெறுப்பு குற்றங்கள் (124 A, 153) இவ்விரண்டும் அவர்கள் மீது சுமத்தப்பட்டன. இரு தலைவர்களும் அக்டோபர் 15— வரை ஜாமீனில் விடவும் மறுக்கப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டனர். பல நாள் வழக்கு விசாரணை நடந்தது. 9—1—39—ல் கோவை செஷன்ஸ் நீதிபதி ஆறு திங்கள் வெறுங்காவல் விதித்தார்.

4—1—39—ல் முன்னமே ஆயிரம் ரூபா ஜாமீனில் நடந்து வரும் 'விடுதலை' நாள் இதழுக்கு மேலும் ஓர் ஆயிரமும், குடி அரசு ' கிழமை இதழுக்கு ஆயிரமும், 'பகுத்தறிவு' திங்கள் இதழுக்கு ஆயிரமும், இவற்றை அச்சியற்றும் உண்மை விளக்கம் அச்சத்திற்கு ஆயிரமும் ஆக நாலாயிரம் ரூபா ஜாமீன் கேட்கப்பட்டது ஆட்சியினரால் . "பகுத்தறிவு" நிறுத்தப்பட்டது. மற்ற மூன்றிற்குமாக மூன்றாயிரம் ரூபா ஜாமீன் கட்டப்பட்டது.

தளபதியின் தமிழ் விருந்து!

தமிழருடைய ஒரே ஒரு — தினசரி "விடுதலை" அதை வீழ்த்தினால் இந்திப் போர் வீழ்ந்து போகும் என்று ஆச்சாரியார் ஆட்சி கருத்திற்று. என்ன செய்தும் — அது வீழவில்லை. மேலும் மேலும் முன்னேறிற்று; உரத்த குரலில் தமிழ்நாட்டைக் கூவி அழைத்தது போராட்டத்திற்கு . ஈ. வெ.கி. கைதானதும் அ. பொன்னம்பலனார் அதன் பதிப்பாளரானார். அறிஞர் முத்துசாமியின் பேனாமுனைக்குத் தடைவிதிக்கப்பட்டதும் தளபதி அண்ணாவின் செந்தமிழ்

விருந்து தமிழருக்குக் கிடைத்தது. விடுதலை மூலம் எப்படியம் விடு கலைச் சங்கு தன் நாதத்தைக் கிளப்பிக் கொண்டே இருந்தது. இந்திப்போர் முடியு மட்டும் கிளப்பிக்கொண்டே இருந்தது.

அடக்குமுறை வலுக்கிறது!

தமிழ் வாழ்க , இந்தி — வீழ்க" என்று ஒலிக்கும் ஒரு குற்றத்திற்காக இந்திப் போர்வீரர்களுக்கு 4 மாதம், 6 மாதம், 8 மாதம், 10 மாதம், ஓராண்டு , ஈராண்டு , மூன்றாண்டு என்று கடுங்காவல் போர்த் தளபதிகள் ஒவ்வொருவருக்கும் அடுத்தடுத்து சிறைச்சாலை அழைப்புத் தாள் ! இயக்கப் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு! பதிப்பாளர்கட்கு 124A! சென்னையில் சர்வாதிகாரிகள் பதவி ஏற்றனரோ இல்லையோ உடனே சிறை. பல கூட்டங்களுக்கு 144. இங்ஙனம் நாலா பக்கங்களிலிருந்தும் தமிழன் கண்ட மொழிப் போருக்கு அடக்குமுறை. ஆனால் தமிழன் நெஞ்சு இத்தனைக்கும் தயார் கூறிற்று. இந்திப்போர் மேலும் மேலும் உரம் பெற்றது. சிறைக்கஞ்சாச் சிங்கங்கள் தொடர்ந்து கிளம்பிக்கொண்டே இருந்தனர்.

கிரிமினல் திருத்தச் சட்டம் தமிழனை வதைக்கிறது !

1938 ஆகஸ்டு 18! சென்னை சட்டசபையில் இடி இடித்தது ; புயல் வீசிற்று! இந்தி எதிர்ப்பை நசுக்க ஆட்சியினர் கையாளும் கொடிய முறைகள் ஒழிய வேண்டும் என சட்டமன்ற உறுப்பினர்கள் முழக்கமிட்டனர் ! ஜனாப் அப்துல் அமீத்கான், திவான்பகதூர் அப்பாதுரைப்பிள்ளை, கான் பகதூர் கலிபுல்லா முதலியோர் இந்திப் போர்வீரர்களுக்குத் தரப்படும் தண்டனை பெருங்கொடுமை என்பதை நன்கெடுத்துக் கட்டினர் ! அன்று மட்டுமா ! சட்டசபை கூடும் நாள்தோறும் அடலேறு சர் பன்னீர்செல்வம் ஆச்சாரி ஆட்சியினர்க்குக் கசையடி கொடுத்துக்கொண்டே இருந்தார். சட்டமன்றத்தில் சர் செல்வம் பேச எழுந்திருக்கிறார் என்றாலே அமைச்சர் கூட்டத்திற்கு நடுக்கம்தான்!

18—8—38—ல் சட்டசபையில் பேசிய தோழர்கள் கிரிமினல் திருத்தச் சட்டத்தைக் கொண்டா இந்திப்போர் வீரர்களை அடக்குவது என்று கேட்டனர். அந்தக் கேள்வியில் நியாயம் இருக்கிறது. 1935—ல் இந்தியா சட்டசபையில் இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டபோது அது தோற்றது ! வைசிராய் சில திருத்தங்களுடன் மீண்டும் சட்டசபைக்கு அதை அனுப்பிவைத்தார். மீண்டும்

அது தோற்றது. இறுதியில் வைசிராயின் ஆசீர்வாதம் தான் அதை நிறைவேற்றிற்று. பொதுமக்களின் சட்டசபை அல்ல. " அதிகாரம் கொடுக்கப்பட்டவர்கள் கையில் இச்சட்டம் அடக்குமுறை இயந்திரமாக மாறுகிறது." என்று பேராசிரியர் அகர்வாலால் அர்ச்சிக்கப்பட்டது இச் சட்டம். தோழர் சத்தியேந்திர நாந் சென் கருத்துப்படியோ முட்டாள் தனமான சட்டம். "இது அற்பமானது ஆனால் அபாயகரமானது" என்கிறார் மோடி, இது அறிவிலிகளால் அமுலுக்குக் கொண்டுவரப் பட்டது என்பது தோழர் அமர்நாத்டட் தந்த அணிந்துரை பிரிட்டிஷ் அரசியலார் காங்கிரஸ்காரர்களை அடக்க இந்தச் சட்டத்தைக் கையாண்ட போது இது சைத்தான் சட்டம்" என்றனர் காங்கிரசார். (* ஆரிய ஆட்சி : பக்கம் 49 — 54.) எங்களிடத்தில் ஆட்சி வந்தால் இதை ஒழித்துவிட்டுத்தான் மறுவேலை என்றனர் அந்தக் காலத்தில். ஆட்சி வந்தது அவர்களிடத்தில்! ஒழித்துக் கட்டவும் துவங்கினர் ! கிரிமினல் திருத்தச் சட்டத்தை அல்ல. இந்தி எதிர்ப்பாளர்களை ! ஒழித்துக் கட்டவேண்டிய அதே சட்டத்தின் துணைகொண்டு !

இந்தி எதிர்ப்பை அடக்க இச்சட்டம் கையாளப்படுவது கொடிது என்றனர் டாக்டர் இரவீந்திரநாத் தாகூர், ஜனாப் ஜின்னா , சர் சிகந்தர் ஹயத்கான், டாக்டர் காரே அத்தனைப்பேரும். இச் சட்டத்தை இந்தி எதிர்ப்பாளர்மீது வீசுவதன் மூலம் சென்னை காங்கிரஸ் ஆட்சி தன்னுடைய நாணயத்திற்கும் கௌரவத்திற்கும் பெருத்த இழுக்கைத் தேடிக் கொள்கிறது. அது மட்டுமல்ல ; ஜனநாயகத் தத்துவத்தின் அடிப்படையையே காங்கிரஸ் வேரோடு கெல்லியெறிகிறது" என்று எழுதிற்று லாகூர் 'டிரிப்யூன்." ஆச்சாரியார் என்னதான் சமாதானம் சொன்னாலும் அவருடைய இந்தச் செயல் கட்டாயம் கண்டிக்கப்படத்தான் வேண்டும் என்று டெல்லி "நேஷனல் கால்" தீட்டிற்று.

1—7—38, 25—12—38 இரண்டு நாள்களும் இந்தி ஒழிப்பு நாள்களாகத் தமிழ்நாடு முழுதும் கொண்டாடப் பட்டன. ஆங்காங்கே பெருங் கூட்டங்கள் கூட்டி, இந்தி வேண்டாம் என்று முரசொலி செய்தனர் தமிழர்.

அத்தனைக்கும் ஆச்சாரியார் தந்த பதில், ஒரு மோகனப் புன்னகை மேலும் மேலும் சிறைவாசம்! 144! அடக்குமுறை! கடுங்காவல் ! 'சி' வகுப்பு!

# 5. இந்தி எதிர்ப்புத் தலைவர்கள்

[இந்திப் போர்த் தளபதிகளைப்பற்றிய சொல்லோவியங்களும் (Pen – Pictures) இந்திப் போரின் உயிர்நிலையான நகரங்களைக் குறித்த விளக்கங்களும், விடுதலை யும் "குடி அரசு "ம் போரை நிகழ்த்திய முறையும், பிறவும் இங்கே தரப்பட்டுள்ளன.)

இந்திப்போர் மும்முரமாக நடந்து கொண்டிருக்கும் இந் நிலையில், இந்த இயக்கத்தை முன்னின்று நடத்தி வரும் தலைவர்கள் யார் யார், அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை அறிந்து கொண்டால் தான் இயக்க வரலாற்றைப் பொருள் உணர்ந்து பின்பற்ற முடியும்.

தலைவர் பெரியார்

இந்தி எதிர்ப்புத் தலைவர்கள் என்ற உடனே, அந்த மகத்தான போராட்டத்தைத் தலைமைதாங்கி நடத்தி, அதை வெற்றிப் பாதையில் கொண்டு சேர்த்த வெண்தாடி வேந்தரைத்தான் தமிழன் முதலில் எண்ணுவான். பிறகு தான் மற்றவர்கள். தமிழ்நாடு வளமுற ஓய்வுசாய்வின்றி சென்ற முப்பதாண்டுகளாக அவர் உழைத்து வருகின்றார். அவர் பட்ட பாட்டின் பயனே இந்தி எதிர்ப்பு இயக்கமும் பிற தமிழர் இயக்கங்களும் என்பதைத் தமிழன் நன்றாக அறிவான். அவனைவிட ஆரியம் நன்கறியும்.

அறிந்ததால் தான், பெரியாரின் பெருந்தொண்டு தமிழர்களைத் தட்டி எழுப்பி இராவிட்டால் தமிழகத்தில் ஆரிய அச்சு இவ்வளவு விரைவில் முறிந்திராது என்பதை உணர்ந்ததால் தான் அவர் பெயரைக் கேட்டதும் ஆரியம் அலறுகிறது. அவர் பேசுகிறார் என்றாலே ஆரிய வட்டாரத்தில் அவதிக் குரல் எழுகிறது. அழகிய வெண்தாடி அசைந்தாட , மேலே போர்த்துக் கொண்டிருக்கும் சால்வை காற்றுடன் விளையாட , ஒளி பொருந்திய கண்கள் அஞ்சாமையை அள்ளி அள்ளி வீச , பசுந்தமிழில் பகுத்தறிவைக் கலந்து, கொச்சை மொழியில் மிகச் சிறந்த கருத்துகளை எடுத்தெடுத்துப் பேசும்போது பார்க்கவேண்டுமே அந்த செந்தமிழ் நாட்டுச் சிந்தனைச் சிற்பியை! "அப்பா ! நாயக்கரின் அழகு பிரசங்கத்தை, அணித்தரமான சொற்களை, அணி அணியாய் அலங்காரம் செய்யும் உவமானங்களை , உபகதைகளை ,

அவரது கொச்சை வார்த்தை உச்சரிப்பை , அவரது வர்ணனையை, உடல் துடிதுடிப்பை, பார்க்கவும் கேட்கவும் வெகு தூரத்திலிருந்து ஜனங்கள் வண்டுகள் மொய்ப்பது போல வந்து மொய்ப் பார்கள் .......... அவர் இயற்கையின் புதல்வன். மண்ணை மணந்த மணாளன். மண்ணோடு மண்ணாய் உழலும் மாந்தர்களுக்கு நாயக்கரின் பிரசங்கம் ஆகாய கங்கையின் பிரவாகம் என்பதில் சந்தேகமில்லை* (* திரு. வ.ரா. "தமிழ் நாட்டுப் பெரியார்கள்.")

இரவு பகல் எனப் பாராது, ஓய்வு ஒழிவு என்று கருதாது, கொஞ்சம் பொறுப்போம் — பிறகு பார்ப்போம் என்று எண்ணாது, தமிழ்நாடு முழுவதும் சுற்றிச்சுற்றி அவர் இட்ட இடி முழக்கம் இருக்கிறதே அதுதான் இந்தி எதிர்ப்பு இயக்கம்.

இப்படிக் கூறுவது நாமல்ல! இந்தியைப் புகுத்திய முதலமைச்சர் ஆச்சாரியார் அவர்களே தான்!

"இந்தி எதிர்ப்பாம் பொல்லாத இந்தி எதிர்ப்பு ! யார் எதிர்க்கிறார்கள் இந்தியை? எனது நண்பர் ஒரே ஒரு ஈரோடு இராமசாமி நாயக்கர் தானே எதிர்க்கிறார்" என்று கூறினார் அந்த நாள் அமைச்சர் ஆச்சாரியார். அதில் ஓரளவு உண்மையும் இருக்கிறது. தமிழர் சமுதாயத்தில் புரட்சிப் பொறி கிளம்பியதே அந்த சிந்தனைச் சிற்பியின் பணியால் தான்.

வடு நிரம்பிய உடலும், வைரம் பாய்ந்த உள்ளமும், சிந்தனை ததும்பும் மனமும், செய்வகை அனுபவமும் தெரிந்த — சிறைக்கோட்டத் திற்கும் வீட்டிற்கும் வித்தியாசமிருப்பதாகவே கருதாத — ஓய்வு தெரியாத ஒரு பெரியார் அவர். அவர் களம் பல கண்டவர்; போர் பல நடத்தியவர்; போக வாழ்வை வெறுத்து ஏழை வாழ்வை நடத்தி வருபவர். அவருக்கு அநேக தாளமுத்து நடராசன்கள் கிடைப்பர். புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல வாலிபர்கள் வருகிறார்களே என்று ஆளும் கூட்டத்தினர் ஆயாசத்தோடு கூறும் விதத்திலே வாலிபர்களை வரச்சொல்லும் வசீகரம் அவருக்கு உண்டு .** (3—9—44 "திராவிட நாட்டில் " சி. என். ஏ . தீட்டியது.)

தமிழரெலாம் இன்று விழித்தெழுந்துவிட்டனர். தமிழ் நாட்டின் துறைதோறும் படர்ந்து விட்ட பழமைப் பாசியைத் துடைத்தெறிய கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு முன் வந்துவிட்டனர். நாயினுங் கீழாய்ச் செந்தமிழ் நாட்டார்

நலிவதை நான் கண்டும் ஓயுதல் இன்றி அவர் நலம் எண்ணி உழைத்திட நான் தவறேன்" என்று ஒவ்வொரு தமிழனும் சூள் உரைக்கின்றான். **ஆன என் தமிழர் ஆட்சியை நிறுவ அல்லல்கள் வரின் ஏற்பேன் ; ஊனுடல் கேட்பினும் செந்தமிழ் நாட்டிற்கு உவப்புடன் நான் சேர்ப்பேன்** (* புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் : இசை அமுது. 95) என்று உறுதி கூறுகிறான். திராவிடநாடு திராவிடர்க்கே என்னும் ஒலி இன்று நாடு முழுவதும் கேட்கிறது. இத் தனைக்கும் காரணம் தலைவர் பெரியார்தான் ; அவர் பேச்சும் எழுத்தும் தான்; அவர் சொல்லும் செயலும் தான் ; — அவருடைய தன்மான இயக்கம் தான் — இதை யார்தான் இல்லை என்று சொல்லமுடியும்?

"தோழர் ஈ. வெ. ரா. ஒரு உண்மையான சிங்கம்; சிங்கத்தின் அஞ்சாத நெஞ்சம் படைத்தவர். அவர் தம் வாழ்க்கையில் பயம் என்பதையே இன்னதென்று அறியா தவர். பழங்காலத்தில் படை வீரர்கள் தங்கள் போர் வாளைப் பயன்படுத்தியது போல அவர் தமது பேனா முனையை அச்சம், தயை, தாட்சண்யமின்றி எங்கும் செலுத்துகின்றவர்". ( சர் கே. வி. ரெட்டி நாயுடு 1928—ல் பேசியது.) அந்தப் பேனாமுனை பல போராட்டங்களை நிகழ்த்திற்று ; வெற்றிக்கொடி நாட்டிற்று. அவற்றுள் ஒன்றுதான் இந்தி எதிர்ப்பு இயக்கம்.

இந்தி எதிர்ப்புக்காக அவர் தீட்டிய தலையங்கங்களும் ஆற்றிய பேருரைகளும் தமிழன் உள்ளத்தில் இன்றும் நிழலாடிக் கொண்டிருக்கின்றன. அவை என்றும் நிழலாடிக் கொண்டிருக்கும்.

அவர் சிறைக் கோட்டத்தினின்று மீண்டு வந்த காலை எடுத்த பணி முடியவில்லை; இந்தி மொழியும் போகவில்லை; நான் ஏன் வெளிவந்தேன் ! சிறையிலேயே நான் இறந்திருக்கவேண்டும் என்று கருதுகிறேன். அப்போது இயக்கம் மிக ஓங்கி இருக்கும் ; செந்தமிழும் வெற்றி பெற்றிருக்கும்" என்று ஈரோட்டுக் கூட்டத்தில் பேசினார் என்பது கேட்டுத் தமிழர் பதைத்தனர் — ஆரியர் நடுங்கினர்.

அந்தப் பதைபதைப்பும் நடுக்கமும் இன்னும் போக வில்லை — தமிழர் ஆட்சி ஏற்படும் வரை போகாது.

**தளபதி அண்ணா !**

குள்ளமான உருவம், குறுகுறுத்த நடை , கணீர் என்ற குரல், சரளமான பேச்சு, கைவிரலில் சில சமயம் ஒரு சிட்டிகைப் பொடி , வாயில் எப்போதும் வெற்றிலை பாக்கு — இப்படிப்பட்டவர்தாம் எங்கள் தளபதி எங்கள் தளபதி' என்று எண்ணற்ற இளந் தமிழர் இன்று ஏற்றிப் போற்றும் அறிஞர் அண்ணாத்துரை எம். ஏ ., அவர்கள். இந்தி எதிர்ப்புக் கூட்டத்தில் அவரைக் கண்டுவிட்டால், அவர் எப்போது பேசுவார் என்றுதான் கூட்டம் முழுதும் கேட்கும். எத்தனை மணியானால் தான் என்ன , அவர் இன்னும் பேசவில்லை என்று தெரிந்தால், இருந்து, அவரைப்பேச வைத்து, முழுதும் கேட்டுவிட்டுத்தான் மக்கள் இடம்விட்டுப் பெயருவார்கள். குறிப்பெடுக்க வந்த பார்ப்பனப் பத்திரிகை நிருபர்கள் கூட தங்கள் கடமையையும் மறந்து அவர் பேச்சில் லயித்து விடுவார்கள். அவர் பேச்சு என்றாலே மக்களுக்கு அவ்வளவு ஆசை. அதில் என்னவோ அப்படி ஒரு மாயம்' புதைந்து கிடக்கிறது. தென்றல் ஏன் இன்பந் தருகிறது என்று சொல்லமுடியாது. கரும்பு ஏன் இனிக்கிறது என்று உரைக்க முடியாது. தேன் அவ்வளவு சுவையாய் இருப்பது எதனால் என்று கூற முடியாது. அதுபோலத்தான் தளபதி அண்ணாவின் பேச்சு ஏன் திகட்டுவதேயில்லை என்பதையும் விளக்கமுடியாது.

ஒலி பெருக்கியை முன் நிறுத்தி, கூடியுள்ள ஆயிரமாயிரம் தமிழர்களை அன்புள்ள தோழர்களே' என விளித்து, தன்னுடைய கம்பீரமான குரலில் அவர் பேசத் தொடங்கிவிட்டால் , பிறகென்ன, கேட்போர் உள்ளமெல்லாம் அவர் பேச்சின் வழியோடி அவர் கருத்தில் பதிந்து நிற்கும். எவ்வளவு பெரிய கூட்டமாய்த்தான் இருக் கட்டுமே, அவர் பேசுகிறார் என்று தெரிந்தால் போதும், முழு அமைதி அங்கு ஓடோடி வந்து குடி புகுந்து விடும்.

அவர் எழுத்து தமிழர்க்குத் தேன் ; தென்றல்; நற் கருப்பஞ் சாறு. இவை மூன்றும் இன்பந் தருவன என்பதைச் சொல்லவா வேண்டும்? சிறப்பாக இந்தி எதிர்ப்பு இயக்கப் பிற்பகுதியில் "விடுதலை" நாளிதழில் அவர் தீட்டிய தலையங்கங்களும், கட்டுரைகளும், பரதன் — வீரன் சம்வாதங்களும் , ஊரார் உரையாடல்களும் பத்திரிகைக் கலைக்கே ஒரு புது உலகத்தைக் காட்டி விட்டன.

அவர் பேச்சிலே ஒரு தனி வசீகரம் ; அவர் எழுத்திலே ஒரு புது முறுக்கு ; அவர் சொல்லிலே சிறந்து பொலியும் ஒரு சொகுசு — இவை எல்லாம்

அவர்க்கென்றே பிறந்த தனிப் பண்புகள்.

இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் அவர் பேசிய ஒவ்வொரு பேச்சும், எழுதிய ஒவ்வொரு கட்டுரையும் ஒரு புத்தெழுச்சியை வாலிபர்க்குத் தந்தது.

அவருடைய சொற்பொழிவுகள், எழுத்தோவியங்கள் ஒவ்வொன்றும் ஒரு போர்வாள் தமிழனுக்கு.

**திருச்சி விசுவநாதன் !**

ஒல்லியான உருவம், நல்ல உயரம், கண்ணியமான பேச்சு , ஒழுங்காக வாரி வீடப்பட்ட தலை, மேலே ஒரு நீளமான சால்வை , இளஞ்சிங்கம் போன்ற தோற்றம் — இவர் தான் திருச்சித் தோழர் கி. ஆ. பெ. விசுவநாதன். இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் போது அங்கும் இங்கும் ஓடி , அரிய பேச்சு நிகழ்த்தி, போர் முறைத்திட்டம் வகுத்து, இயக்க வேலையை இவர் பலப்படுத்தினார். அன்பும் பிரியமுமுள்ள தோழர்களே என்று தொடங்கி , உங்கள் பொன்னடிகட்கு என் போற்றுதல் என்று சொல்லிவைத்து, தெளிவான நல்ல தமிழில் வாதப் பிரதிவாதங்களுடன் ஒருவர் இந்தி எதிர்ப்புக் கூட்டத்தில் பேசிக்கொண்டிருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் தாம் கி. ஆ. பெ. வி. என்று நீங்கள் — சற்றும் தயக்கமின்றிச் சொல்லிவிடலாம்.

பெரியாரும் தளபதியும் சிறையிலிருந்தபோது இந்தி எதிர்ப்பு இயக்கத்தை வெற்றிகரமாக நடத்தி வைத்த பெருமை தோழர்கள் பாண்டியனுக்கும் கி. ஆ. பெ. விசுவநாதனுக்குமே உண்டு.

பெரியார் சிறை புகுந்த அன்று சென்னைக் கடற்கரைப் பொதுக்கூட்டத்தில் திருச்சி விசுவநாதன் பேசிய பேச்சு மிக அரிய ஒன்று. இன்று ஜஸ்டிஸ் கட்சி தன் ஒப்பற்ற தலைவரை இழந்து நிற்கிறது. சுயமரியாதை இயக்கம் தன் தந்தையைப் பிரிந்து நிற்கிறது. சென்னை மாநிலப் பகுத்தறிவாளர் ஒரு பகுத்தறிவுப் பெருநிதியைப் பறி கொடுத்துவிட்டனர். உடலும் உயிரும் போல் இருந்த தமிழர்களும் பெரியாரும் ஆச்சாரி ஆட்சியினரால் பிரிக்கப் பட்டுவிட்டனர். இந்தி எதிர்ப்பு இயக்கம் தன் தனிப்பெருந் தலைவரை இழந்துவிட்டது — ஆம்! உயிரோடு இழந்து விட்டது " என்று அவர் பேசியது கேட்டுக் கண் கலங்காத தமிழர் அங்கில்லை .

தமிழ் நாட்டையே ஒரு குலுக்குக் குலுக்கி விட்ட ஈ. வெ. ரா. என்னும் அந்த மூன்றெழுத்துகளை விட்டு விட்டால் உள்ளபடியே இந்தி எதிர்ப்புக் காலத்தில் தமிழர் உள்ளந்தோறும் ஒளி வீசிய வேறு இரண்டு வாசகங்கள் அண்ணாதுரை விசுவநாதன் என்பவைதான். சுயமரியாதை உலகம் இந்த இரண்டு காளைகளையும் தன் செல்லப் பிள்ளைகளாகக் கொண்டு மகிழ்ந்தது. தலைவர் பெரியாருக்கு இருவரும் இரண்டு கரங்கள் போல விளங்கினர்.

தளபதி அண்ணாவின் சொற்பொழிவைப் பாறைகளையும் பெருமரங்களையும் புரட்டித் தள்ளிக் கொண்டு பேராவேசத்துடன் மலைமீதிருந்து ஓடோடி வருகின்ற காட்டாற்று வெள்ளம் போன்றது என்று சொன்னால், திருச்சி விசுவநாதனின் பேச்சை , நாம் கடலோரம் நடந்து செல்கிற போது, நிதானமாக — ஆனால் — அடுக்கடுக்காக எழும்பி, வந்து நம் கால்களை முத்தமிட்டுச் செல்கின்ற அழகிய கடல் அலைகளின் தன்மைக்கு ஒப்பிடலாம்.

இந்த எதிர்ப்புக் கூட்டங்களில் இந்த இரு வேறு சொற் சுவையும் தமிழர்க்கு மாறி மாறிக் கிடைத்துவந்தன, ஒரே மேடையில் — ஒன்றன் பின் ஒன்றாக , எதிரிகள் திகைக்கும் விதமாக .

**பேராசிரியர் பாரதியார்**

தமிழ்நாட்டை அதே காலத்தில் தட்டி எழுப்பிய மற்றொரு விரிவுரையாளர் பாரதியார். முன்னமே முறுக்கிவிட்ட — மீசையை மேலும் முறுக்கிக் கொண்டே பேராசிரியர் சோமசுந்தர பாரதியார் பேசும்போது, அவருடைய பேச்சைக் கேட்கலாமா — இல்லை — பழந்தமிழனை நினைப்பூட்டும் அந்த மீசையின் அருமையைப் பார்த்துக்கொண்டே இருக்கலாமா என்று தோன்றும் — அவ்வளவு அழகிய மீசை அவருக்கு ! மணியோசை போன்ற தெளிந்த குரலில், தீஞ்சுவை மிக்க அழகிய சொற்களை , அருமையான முறையில் தொடுத்து அவர் பேசும்போது அடடா, இன்றைக்கெல்லாம் அதைக் கேட்டுக்கொண்டே இருக்கலாம் என்றுதான் நம் நெஞ்சு சொல்லும். இந்த இந்திச் சனியன் இருக்கிறதே இதைத்தான் சொல்லுகிறேன் என்று அவர் சொல்லும் போது தான் ஆகட்டும் ; இதென்ன காந்திக் கிறுக்கா என்று அவர் நாக்கைத் தட்டிக்கொண்டே கேட்கும் போது தான் ஆகட்டும்; ஆனதாலேஎ — — ஆகையாலேஎ ஆதலாலேஎ — என்று இச் சொற்களை இன்னிசை அளபெடை இட்டு, பேச்சின் நடுநடுவே அவற்றை இடைச் செருகல்களாய்ச்

செருகவைத்து, சுவைபடப் பேசும்போதுதான் ஆகட்டும், கேட்கிறவர்கள் அத்தனைப் பேருக்கும் தமிழுணர்ச்சி வந்து தான் தீரும். அவருடைய உரையானது, தவறுசெய்யும் தம்பியைக் கோபம் கொண்ட அண்ணன் சற்றுக் காரமாகவே கண்டித்துத் திருத்துவது போன்றது.

நாவலர் பாரதியார் எப்போதுமே ஒரு தமிழ்ச் சூறாவளி தான் ! பாரதியார், பல ஆண்டுகளுக்கு முன்னமேயே தமிழ் முறையில் திருமணங் கொண்டவர்; தமிழ் இனப்பற்றில் என்றும் யாருக்கும் சளைக்காதவன் நான் என்று மார்தட்டிப் பேசும் வீர இயல்பு உடையவர் ; மற்றப் பெரும்பான்மைத் தமிழ்ப் பண்டிதர்போல் அல்லாது சீர்திருத்தத் துறையில் நல்ல ஆர்வமுடையவர்.

இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் முற்பகுதியில் அவர் தமிழ் நாட்டைச் சுற்றிச்சுற்றி, ஊர்தோறும் தமிழ் முழக்கம் புரிந்தார். இந்தி வேண்டாம் வேண்டாம் என்று நான் அறை கூவிச் சொல்கிறேன். வேண்டாம் என்பதற்கு ஆயிரம் காரணமுண்டு. வேண்டும் என்பதற்கு ஒரு காரணமாவது உண்டா ? எந்த அமைச்சருடனும் நான் வாதாடத் தயார். யாரேனும் வருவார்களா?" என்று அவர் கேட்டார். யாரும் வரவில்லை. கட்டாய இந்திதான் பின்னால் வீழ்ந்து பட்டது.

கட்டாய இந்தி வேண்டும் என்பதற்கு அமைச்சர் அவையினர் கூறிய போலிக் காரணங்கள் எல்லாவற்றையும் தகுமுறை மறுத்து, ஏன் அது வேண்டாம் என்பதற்குரிய பல்வேறு காரணங்களையும் தொகுத்துரைத்து, அவர் 1937—ல் ஆங்கிலத்தில் முதலமைச்சர் இராசகோபாலாச்சாரி யாருக்குத் திறந்த மடல் ஒன்றை (24 பக்கங்கள் கொண்டது) அச்சிட்டு அனுப்பினார்.

13—8—39 முதல் 20—8—39 முடிய ஒரு கிழமை அவர் சென்னையில், தொடர்ச்சியாக ஏழு பெருங் கூட்டங்களில் ஆச்சாரியார் ஆட்சியின் தன்மையை விளக்கிப் பேசினார்.

28—5—38—ல் திருச்சியில் கூடிய இந்திப்போர் மந்திராலோசனைக் கூட்டத்தில் சத்தியாக்கிரகம் " — அதில் வெற்றி இல்லையேல் சட்டமறுப்புச் செய்யவேண்டுவது தான்" என்று அவர் போர்முறை வகுத்தது தமிழர்க்கெல்லாம் நினைவிருக்கும். அதுமுதல் 1939 முடிய அவர் சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியத்தின் (High Command) தலைவராயிருந்தார்.

**சர். பன்னீர்செல்வம்**

இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் வெற்றிக்குச் சர் ஏ.டி. பன்னீர்செல்வம் ஒரு — முக்கியமான காரணம். இயக்கம், "வெற்றி மாளிகைக்கு மிக அருகில் வந்துவிட்டபோது, ஓமான் கடலின் கொடும் பசிக்குச் சர் செல்வம் பலியானார் என்றறிந்தபோது தமிழகமே ஒரு சோக சித்திரமாகத்தான் — காட்சி அளித்தது. பாழும் ஓமான் கடலே ! நீ பலி கொள்ள எங்கள் அருமைச் செல்வமோ கிடைத்தார் என்று தமிழரெல்லாம் கண்ணில் நீர் பெருக்கினர். "இப்போது தானே அவர் நம்மிடையே இருந்தார் , சென்ற திங்கள் தானே என் தமிழைக் காக்க சிறையுஞ் செல்லுவேன் — என் உயிரையும் காணிக்கை தருவேன் என்று சூளுரைத்தார் , போன வாரம் தானே தலைவர் பெரியாரின் பெருமாட்சியை எடுத்துரைத்தார், இதற்குள்ளா மறைந்துபோனார்" என்னும் பேச்சு எங்கும் கிளம்பிற்று. எங்குற்றான் செல்வன் என்றே ஏங்கி ஏங்கித் தவித்தனர் தமிழ் மக்கள், "தொல்லை நீக்கிட எழுந்த தூயருள் பன்னீர் செல்வன் இல்லையேல் படைத் தலைவன் இல்லை எம் தமிழ் வேந்தற்கே' என்று கவிஞர் பாரதிதாசன் நெஞ்சங் குமுறிக் கூறினார். ஆம் அது உண்மை என்று சொல்வது போல, அஞ்சா நெஞ்சுபடைத்த அந்த அடலேறு பெரியார் இராமசாமியும் "ஓமான் கடல் சேதி கேட்டுக் கலங்கிவிட்டார். கலக்கத்தோடு அவர் கேட்டார், காலஞ்சென்ற பன்னீர் செல்வமே நீ காலஞ் சென்று விட்டாயா! உண்மையாகவா? உண்மையாகவே தானா? நம்பவே முடியவில்லையே " என்று.

இறைந்த நல் தமிழர் தம்மை இணைத்தசீர் இராமசாமி

அறைந்த நல் வழியே "இந்தி" அரவினைக் கொன்றான் செல்வன்

நிறைந்த அத் தேனை நாட்டார் நினைந்துண்ணும் போதே அன்னான்

மறைந்தனன் என்றால் யார்தாம் மனந்துடி துடிக்க மாட்டார்

என்று செல்வத்தின் மறைவு கேட்டுக் குமுறிய பாரதிதாசன் குறிப்பிட்டார். அது வெறும் பாட்டல்ல ; தமிழர் உள்ளம்.

இந்தி எதிர்ப்பு இயக்க காலத்தில் சர் பன்னீர் செல்வம் ஆற்றிய பணி அந்த அளவிற்குத் தமிழ்மக்கள் உள்ளத்தை யெல்லாம் கொள்ளை கொண்டுவிட்டது.

கடற்கரைக் கூட்டங்களிலும் பிற தமிழ்ப் பேரவைகளிலும் இந்தி எதிர்ப்பு முழக்கம் நடந்தபடி இருக்கும். அதே சமயத்தில் சென்னை சட்டசபையில் ஒரு கம்பீர மான குரல் எழும். அதிகாரபீடத்தில் அமர்ந்திருந் தோரை அந்தக் குரல் இடித்திடித்துக் கேட்கும். "அதோ மக்கள் இடும் இடிமுழக்கம் தமிழர் நாடு முழுதும் கேட்கிறது; ஆனால் உங்கள் செவிகளில் மட்டும் விழவில்லையே , இது ஏன், ஏன்" என்று எக்காளமிடும். சட்டசபையில் அந்தக் குரல் எழுந்த போதெல்லாம் அதிகாரவர்க்கம் தன் மீது கூரிய ஈட்டி ஒன்று பாய்ந்தது போல் துடிதுடித்தது. அதே குரல் ஓமான் கடலின் ஒலி அலைகளுக்கிடையே சஞ்சரிக்கப் போய்விட்டது என்று கேட்டபோதும் தான் துடிதுடிப்பு எழுந்தது. ஆனால் இந்த முறை துடிதுடித்தது மக்கள் மன்றம் — அதிகார வர்க்கமல்ல.

சர் செல்வம் சட்ட சபையில் மட்டுமல்ல, மக்கள் மன்றத்திலும் மிக அதிகமாக உலவி வந்தார். கூட்டங்களி லெல்லாம் பேசினார். பேசும்போது சட்ட மன்றத்தில் இன்னின்ன தீங்கு தமிழருக்கு இழைக்கப்படுகிறது என்று சொல்லுவார். கேட்டுவிட்டு மூண்டெழும் கோபக் கனலைச் சிறிது அடக்கிவிட்டு , தளபதியே இதற்கு பரிகாரமென்ன என்று கேட்கும் மக்களிடம் "பரிகாரமா , இதற்கா , நாம் அனைவரும் ஈரோட்டுப் புரட்சிக்காரரின் தாக்கீதுக்கு அடங்கி நடப்பது தான் பரிகாரம். வேறென்ன இருக்கிறது, வேறென்ன பரிகாரம் இருக்க முடியும்" என்று அழுத்தந் திருத்தமாய் அவர் சொல்லுவார். ஈரோட்டுப் பாதை ஒன்று, தான் தமிழரை வாழ்க்கை வளத்தோட்டத்திற்கு அழைத்துச் செல்லும் என்பது அவருடைய முடிந்த முடிபு. பெரியார் இராமசாமியிடம் அவர்க்கிருந்த அன்பும் அடக்கமும் அளவற்றது.

தளபதி பன்னீர் செல்வத்தின் தெளிந்த சொற்களை , இனிய தொடர்களை , அழகிய வாக்கியங்களை, ஆணித் தரமான கருத்துகளை , அருமையான அறிவுரைகளை இவற்றை எல்லாம் தமிழன் தன்னுடைய இதயத்தில் இருத்திக்கொண்டான். சர் செல்வம் தமிழர் செல்வம் அல்லவா? அவர் பேச்சு தமிழ்ப் பேச்சு அல்லவா? அவர் நெஞ்சு தமிழர் நெஞ்சு அல்லவா? ஆம் என்றால் தமிழன் தன்னுடைய நெஞ்சப் பெட்டியில் அவரைப் பூட்டி வைத்துக்கொண் டானே அதிலென்ன தவறு?

**பாரதிதாசன்**

இந்தி எதிர்ப்பு இயக்கத்தை முன்னின்று நடத்திவைத்த பெருமை பாரதிதாசனுக்குக் கிடையாது; அவருடைய பாடலுக்குத்தான் உண்டு. அந்தக் காலத்தில் அவர் கூட்டங்களில் அதிகமாகக் கலந்து கொண்டது இல்லை. ஆகவே பொது மக்களும் அடிக்கடி அவர் பேச்சைக் கேட்கும் வாய்ப்புப் பெற்றதில்லை. ஆனால் இந்தி எதிர்ப்புப் போராட்டம் மிகமும்முரமாக நடந்துவந்த காலத்தில் தான் அவர் வீசிய கவிதைகள் உண்மைத் தமிழர் உள்ளந்தோறும் சென்று இணைந்துவிட்டன. ஒவ்வொருவரும் பாரதிதாசன் பண் பாடினர். எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று" எக்காளமிட்டனர். பொங்கு தமிழர்க்கு இன்னல் விளைத்தால் சங்காரம் நிசமென்று போர் முழக்கம் புரிந்தனர். புரிந்தவண்ணம் களம் நோக்கிச் சென்றனர்.

கட்டாய இந்தி வந்தது. கண்டார் பாரதிதாசன். துள்ளியெழுந்தது அவர் நெஞ்சு. அது சூழ்ச்சி கண்டு பொறுக்கவில்லை. செந்தமிழ்க்குத் தீமை வந்தபின்னும் இந்தத் தேகம் இருந்தொரு லாபமுண்டோ ?" என்று அவர் தமிழர்களைப் பார்த்துக்கேட்டார் — குமுறிக் கொந்தளித்த உள்ளத்தோடு கேட்டார். கவிஞன் குரல் கேட்ட தமிழர் கூறினர் : "தூங்குதல் போன்றது சாக்காடு , பின்னர்த் தூங்கி விழித்தல் எம் பிறப்பு; தீங்குள்ள இந்தியை யாம் எதிர்ப்போம் உயிர்த் தித்திப்பை எண்ணிடப்போவதில்லை." பாரதிதாசன் பாடல் தமிழர்களை அப்படிச் சொல்ல வைத்தது. அதில் என்ன வியப்பு ! பாரதிதாசன் என்றால் புரட்சி என்றுதானே பொருள்!

அவருடைய பாடலைக் கேட்டோர் இன்பம் பெறவில்லை — புரட்சி உள்ளம் பெற்றனர். கன்னல் மொழி இது என்று களிக்கவில்லை — போர்ப் பாட்டு கேட்டுவிட்டோம் என்று துடிதுடித்தனர். "அழகு கலை இது, வாழி! என்று தெருத்திண்ணை வேதாந்தம் பேசினரா? கிடையாது. கொலை வாளினை எடடா மிகு கொடியோர் செயல் அறவே என்று வீரமொழி கூறினர். அதுதான் பாரதிதாசன் கவிதையில் உள்ள தனிச்சிறப்பு. இதற்கும் முன்னே பல கவிஞர்கள் தமிழகத்தில் உலவினர். இன்று கூடத்தான் உலவுகின்றனர். ஆனால் அவர்கள் வழிகாட்டியது அந்த லோக வாழ்விற்கும் பாரதிதாசன் நம்மைச் செலுத்துவது புது உலக வாழ்விற்கு — புரட்சிப் பாதைக்கு! எனவேதான் அவர் பாட்டு என்றால் தமிழ்நாட்டிற்கு அவ்வளவு அகமகிழ்வு.

பாரதிதாசன் என்றால் நாட்டிலே புரட்சியை மூட்டி விடும் ஒரு சக்தி என்பதைத் தமிழர்கள் முதன் முதலில் உணர்ந்தது இந்தி எதிர்ப்புக் காலத்தில் தான். அவருடைய முதல் கவிதைத் தொகுதி தோழியர் குஞ்சிதம் குருசாமி அவர்களின் முயற்சியால் வெளியிடப்பட்டதும் அப்போது தான்.

அந்தக் காலத்தில் தமிழ் இலக்கிய வானத்தில் இள ஞாயிறு எனத் தோன்றினார் பாரதிதாசன். அந்த இள ஞாயிறு, மூண்டெழுந்த பல எதிர்ப்புச் சக்திகளை முறித்துத் தள்ளி, தன்னை அழிக்க வந்த பல ஆபத்துகளைத் தகர்த்தெறிந்துவிட்டு, மடமடவென மேலோங்கி, இன்று தமிழ் வானத்தில் தனக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி ஒளி வீசித் திகழ்கிறது. அன்று யார் யார் அவரை அலட்சியப்படுத்தினார்களோ, யார் யார் அவரை ஒரு கவி என்று சொல்லக் கூட அஞ்சினார்களோ, யார்யார் அவருக்கு நியாயமாக உரிய புகழை அணைபோட்டுத் தடுத்துவிடப் பார்த்தார்களோ, அவர்களே இன்று பாரதிதாசனைப் பாராட்ட முந்திவிட்டனர்.

"சேனை ஒன்று தேவை — பெருஞ்சேனை ஒன்று தேவை — செந்தமிழைக் காப்பதற்குச் சேனை ஒன்று தேவை" என்று அந்தக் காலத்தில் அவர் தீட்டிய போர்ப் பாட்டு தமிழகத்தில் எந்தக் காலத்திலும் ஒலித்துக் கொண்டே இருக்கும் என்பதை இங்கே சொல்லித்தானாக வேண்டும்.

**தோழர் பாண்டியன்**

மிக மரியாதையான பேச்சு, கௌரவமான வாழ்க்கை , எதிரிகளும் ஒப்புக்கொள்ளும் பெருந்தன்மை, கம்பீரமான தோற்றம், ஜஸ்டிஸ் சுயமரியாதை இயக்கங்களில் நீண்ட 'நாளைய பற்று, அசையாத நெஞ்சுறுதி இத்தனையும் உடையவர்தாம் பாண்டி நாட்டுத் தோழர் சௌந்தர பாண்டியன் அவர்கள். இந்தி எதிர்ப்புக் காலத்தில் பேச்சு மேடை மின் வெளிச்சத்தில் அவர் அவ்வளவாகத் தோன்ற வில்லை என்பது உண்மைதான். ஆனால் இயக்கத்திற்கு உயிர் நாடியைப் போன்ற உள்ளீடான பல அரிய பணிகளை அவர் ஆற்றிவந்தார்.

அவருடைய உருட்டி மிரட்டும் கண்களை — வீரம் விளையாடும் அழகிய தோற்றத்தை — கம்பீரமான உரு வத்தை — இவற்றை எல்லாம் கண்டால் பாண்டியன் பாண்டியனேதான் என்று நாம் சொல்லி ஆகவேண்டும்.

ஆட்சித் திறமும் நிர்வாக அனுபவமும் நிரம்பப் படைத் தவர் பாண்டியன். அவரைப் பார்க்கும் ஒவ்வொருவனும் சொல்லித் தீருவான் அவருடைய இனம் நாடாண்ட இனம் என்பதை ! அவருடைய தோற்றம் அப்படி சொல்லச் சொல்லும். —

இந்தி எதிர்ப்புக் காலத்தில் தமிழர் பலரும் — சிறப்பாகச் சுயமரியாதைக்காரர்கள் — குட்டித் தலைவர் பாண்டியன் என்றே அவரை அன்புடன் அழைத்துவந்தார்கள்.

பெரியார் அவர்களுக்கு எப்போதுமே பாண்டியனி டத்தில் நல்ல மதிப்பு இருந்துவந்தது. இந்தி எதிர்ப்புக் காலத்திலும் அப்படித்தான்.

**மறைமலையார் குடும்பம்**

இடைவிடாத தம் ஆராய்ச்சி, பல அரிய நூல்கள் எழுதும் பெருமுயற்சி, உடல் நலமின்மை முதலிய பல தடைகளுக்கிடையே பேரறிஞர் மறைமலை அடிகளார் இந்திப் போரின் தத்துவத்தை முழுமனதுடன் ஆதரித்துப் பல கூட்டங்களில் போர் முழக்கம் புரிந்தார் : 4—10—37—ல் சென்னை கோகலே மன்றத்தில் கூடிய பெருங் கூட்டத்திற்கும், 3—6—38—ல் கோடம்பாக்கத்தில் கூடிய இந்தி ஒழிப்பு மாநாட்டிற்கும், 11—9—38—ல் தமிழர் பெரும் படையை வரவேற்க சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் கூடிய மாபெருங் கூட்டத்திற்கும் அவர் தலைமை தாங்கினார். அப்போதெல்லாம் அவர் ஆற்றிய உரைகள் தனித் தமிழுக்கு உள்ள ஆற்றலைத் தெளிவுற விளக்கிக் காட்டின.

அடிகளாரின் குடும்பம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பெரும்பங்கு கொண்டது. அவருடைய இளைய மகன் வித்துவான் மறை திருநாவுக்கரசு இந்திப்போரில் ஈடுபட்டு, தக்க பணியாற்றி நான்கு திங்கள் சிறைவாசமும் செய்தார். அவர் ஆசிரியப் பணிபுரிந்த பள்ளியினர் இந்தி கூடாது என நீர் முழங்கக் கூடாது' என்று சொன்னபோது அத்தகைய பதவியும் எனக்குக் கூடாது" என்று அதை வீசி எறிந்து விட்டு சிறைக்கோட்டம் புகுந்த காளை அவர்.

அடிகளாரின் மூத்த மகன் மறை மாணிக்கவாசகமும் புன்முறுவல் பூத்த முகத்துடன் எங்கும் நடமாடி பல அரிய கூட்டங்கள் அமைத்து, பேச்சு மேடைகள் பலவற்றை ஒழுங்குறுத்தித் தமிழர் வாழ்வு தழைக்கத் தொண்டு பல செய்தார்.

அடிகளாரின் திருமகள் திருவரங்க — நீலாம்பிகை அம்மையாரும் சென்னை ஒற்றைவாடைக் கொட்டகையில் கூடிய தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாட்டிற்குத் தலைமை தாங்கி இந்திப்போரில் தமிழ்ப் பெண்கட்கும் பங்குண்டு என்பதை நிலை நிறுத்தினார்.

மறைமலையாரின் தலை மருமகள் சரோசனி அம்மையாரும் இளைய மருமகள் ஞானம் அம்மையாரும் இந்தியை வீழ்த்தச் சிறைபுகுந்து, இருபதாம் நூற்றாண்டின் தலை சிறந்த தமிழ்ப் புலவர் பெருந்தகையின் குடியினர் தாம் என்பதை மெய்ப்பித்துவிட்டனர். மறைமலை அடிகளார் வாழ்க! அவர் குடும்பம் வாழ்க!

**சென்னை, திருச்சி, காஞ்சி, பாண்டிய நாடு**

இந்தி எதிர்ப்பு இயக்கத்திற்குச் சென்னை , திருச்சி, காஞ்சி மூன்றும் முறையே மூளையும் ஜீவநாடியும் இருதயமுமாய் இருந்தன. முதுகெலும்பு பாண்டி நாட்டில் இருந்தது. இயக்கத்தின் முழு வேகமும் பேராற்றலும் உணர்ச்சிப் பெருக்கமும் துலக்கமாய்த் தோன்றியது சென்னையில் தான் ; எனவே அது இயக்கத்தின் ஜீவநாடியாயிற்று. இயக்கத்திற்கான போர்முறைத் திட்டங்கள் அத்தனையும் தீட்டப்பட்டது திருச்சியில் தான் ; எனவே அது இயக்கத்தின் மூளையாயிற்று. தமிழர் உள்ளம் இந்தியை வெறுக் கிறது என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டியது காஞ்சி இந்தி எதிர்ப்பாளர் மாநாடுதான். எனவே அது இயக்கத்தின் இருதயமாயிற்று, சிறைக்கோட்டம் செல்வதற்காக மேலும் மேலும் இந்திப்போர் வீரர்களை — செந்தமிழ் இளஞ் சிங்கங் களை அளித்துக் கொண்டே இருந்தது மதுரை நெல்வேலி இராமநாதபுரம் மாவட்டங்களை உள்ளடக்கிய பாண்டிய நாடு ; எனவே அது இயக்கத்தின் முதுகெலும்பாயிற்று.

**சென்னை**

இயக்கத்திற்கு வேண்டிய உணர்ச்சியும் எழுச்சியும், ஊக்கமும் உற்சாகமும் சென்னை நகரில் கிளர்ந்தெழுந்தன. பெரும்பெரும் கூட்டங்கள் சென்னையிலே நடைபெற்றன. நூறாயிரக்கணக்கான தமிழர்கள் பெருந் திரளாகக் கூடிக் கடற்கரையில் அவ்வப்போது செய்த பெரு முழக்கம் சென்னை நகர

வரலாற்றிலேயே தனிச் சிறப்புடைய ஓர் அத்தியாயம் என்று சில காங்கிரஸ் பத்திரிகைகளே அக் காலத்தில் சொல்லின.

சென்னை நகரம்தான் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தலைமைப் போர்க்களமாய் இருந்தது. அங்குள்ள இந்து தியாலாஜிகல் பள்ளிதான் போர் அரங்கம் ! தியாகராய நகரில் இந்திப் போர் வீரர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்ட கொட்டகை , இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிக்கே ஓர் அழகிய உணர்ச்சிக்களமாய் விளங்கிற்று. இந்தியை எதிர்த்துச் சிறை சென்ற தோழர்கள் இந்த உலக வாழ்வை விட்டுச் சிறை உலக வாழ்விற்குத் தாவிக் குதிப்பதற்கு ஒரு மாற்று நிலையமாக இருந்ததும் அதுதான். போலீசாரால் அது பிரித்தெடுக்கப்பட்டபோது இயக்கத்திற்கே ஓர் அழகு குறைந்துவிட்டது போலத்தான் இருந்தது. சென்னை நகரில் பெத்து நாய்க்கன் பேட்டை அன்று இந்தி எதிர்ப்புக் கோட்டையாய்ப் பொலிவுற்றது — இன்றைக்கும் சுயமரியா தைக் கோட்டையாய்ச் சிறப்புறுகிறது.

**சென்னை மும்மணிகள்**

சென்னை நகரத்தில் நடைபெற்ற பிரமாண்டமான இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை அவ்வளவு வெற்றிகரமாக நடத்திவைத்த பெருமை தோழர்கள் என். வி. நடராசன், டி.வி. முருகேசன், வ.சு. தேவசுந்தரம் ஆகிய மூவருக்குத் தான் உரியது. சென்னை இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிக்கு அவர்கள் மூவரும் மும்மணிகளாய் விளங்கினர். தோழர் நடராசன் அவர்கள் காலையில் எழுந்ததும் காலில் சக்கரத்தை மாட்டிக்கொண்டு ஓடுவது போல நகர் முழுதும் பம்பரம் போல் ஓயாது சுழன்று சுழன்று பணியாற்றி வருவார்" (ஏ. பி. ஜனார்த்த னம் 1946 மார்ச்' திங்கள் சென்னை இரண்டாவது வட்டார திராவிட மாநாட்டில் பேசியது.) பார்க்கும் இடமெங்கும் திடீர் திடீரெனத் தோன்றித் தோழர்களை எல்லாம் கண்டு பேசி , நயமான பேச்சும் பயமறியா மனமும் கொண்டு அவர் தொண்டு புரிந்துவந்தார். தோழர்கள் நடராசன் — முருகேசன் ஆகிய இருவரும் இணைபிரியாத் தோழர்களாய் இந்தி எதிர்ப்புக்குப் பணியாற்றியதை யார் மறக்க முடியும்? சின்ன உருவினராய் இருந்தாலும் சிறந்த பணி யாற்றினார் மற்றொரு தோழராகிய தேவசுந்தரம் அவர்கள். இம் மும்மணிகளுடைய வாழ்க்கைத் துணைவியர் மூவரும் இந்திப் போரில் சிறை புகுந்த வீராங்கனைகள் என்பது இங்கே குறிக்கத்தக்கது.

**மயிலை சிவமுத்து**

கருத்து அடர்ந்த மீசையில் இடை இடையே வெண் மயிர்கள் ஒளிசெய்ய , முழங்கை மீது தொங்கவிடப்பட்டிருக்கும் சிகப்புச் சால்வை மின்ன, முகத்தில் அணிந்திருக்க வேண்டிய மூக்குக்கண்ணாடி கண்ணுக்கும் கைவிரலுக்கும் இடையே போய்ப் போய் வர , ஓரளவு குள்ளமான உருவ மொன்று அந்தக் காலத்தில் சென்னை நகரில் சுழன்று சுழன்று பணியாற்றிக் கொண்டிருக்கும் இந்தி எதிர்ப்பை வெற்றிக்குக் கொண்டுவர; அவருக்குப் பெயர் "வாத்தியார் ". சென்னையில் இந்தி எதிர்ப்புத் தோழர்களுக்கு ஏதாவது அய்யப்பாடு இருந்தால் வாத்தியாரிடம் தான் போய்க் கேட்பார்கள். எல்லோருக்கும் அவரிடத்தில் அவ்வளவு ஆசை. இந்திக் கிளர்ச்சி மிக மும்முரமாக நடந்துகொண்டிருந்த அந்தக் காலத்தில் வாத்தியார் அவர்கள் இரவு முழுதும் கண் விழித்திருந்து பல்வேறு இலட்சியச் சொற்களைப் பொறித்துப் பல அறிக்கைப் பலகைகளையும் தட்டிகளையும் தயாரித்துக்கொண்டிருப்பார். இரவும் பகலும் பல புத்தகங்களை நெடுக படித்துக்கொண்டே இருப்பார். அந்தக் கூட்டத்தை அப்படி நடத்தவேண்டும், இந்த ஊர்வலத்தை இப்படிச் செலுத்த வேண்டும் என்று எப்போதும் — தெருவில் நடக்கும் போது கூட — திட்டமிட்டுக்கொண்டே இருப்பார். இவ்வளவுக்குமிடையே பல நண்பர்களுடன் — தமிழரெலாம் அவருக்கு நண்பர்தாம் — ஓயாது பேசிக்கொண்டே இருப்பார். இத்தனையும் ஒரே சமயத்தில் நடந்து கொண்டே இருக்கும். அம்மாடி , இவ்வளவு பணியாற்ற நம்மால் முடியாது என்று தான் யாரும் மலைப்பார்கள். ஆனால் வாத்தியார் பணி இந்த அளவில் நின்றுவிடவில்லை. "வாத்தியார் ' வாத்தி யாராகவும் இருந்தார் ! அதாவது சென்னை உயர் நிலைப் பள்ளி ஒன்றில் அவர் தமிழாசிரியர் . — —

தமிழாசிரியர் என்றால் சம்பிரதாயப்படியான தமிழாசிரியர் அல்ல. வெல்ஸ், பெர்னார்ட்ஷா போன்ற சிந்தனைச் சிற்பிகளின் பகுத்தறிவுக் கருத்துக்கள் நாடு முழுவதும் பரவவேண்டும் என்னும் நோக்கம் கொண்டவர். பரந்த உள்ளம் படைத்தவர்.

வாத்தியாருக்குத் தமக்கையார் ஒருவர் உண்டு. தமிழ் காக்கச் சிறை சென்ற பெருமாட்டி அத் தமக்கையார் .

தம்பி பெயர் மயிலை முத்துக்குமாரசாமியார் (மயிலை சிவமுத்து ) ; தமக்கை பெயர் மலர்முகத்தம்மையார். வாத் தியார் வாழ்க. வாத்தியார் தமக்கையர் வாழ்க.

**டாக்டர் தருமாம்பாள்**

சென்னையைப் பற்றிப் பேசும்போது சென்னைக் கிளர்ச்சிக்கே ஓர் அடிப்படைக் காரணமாய் அமைந்து, மலர்ந்த முகத்துடன் இயக்கப்பணி புரிந்து, பல பொதுக் கூட்டங்களையும் மாநாடுகளையும் கூட்டி , இயக்கத் தோழர்கள் சோர்வடைந்தபோது அவர்களுக்கு உற்சாக மூட்டும் தாயாக விளங்கி , தமிழ்ப் பெண்கள் உலகத்தினின்று முதன் முதலாகச் சிறைக்கோட்டம் புகுந்த வீராங்கனை டாக்டர் — தருமாம்பாளைப்பற்றிக் குறிப்பிடாமல் இருக்கமுடியாது. இந்திப் போரில் மங்கையர் கொட்டிய போர் முரசு டாக்டர் தருமாம்பாள் அவர்கள் தீட்டிய திட்டத்தின் விளைவு என்றே சொல்லிவிடலாம். அவ்வளவு அருமையான பணி ஆற்றியிருக்கிறார்கள் அம்மையார் அவர்கள். சென்னை நகர வரலாற்றிலேயே ——ஏன் — தமிழ் நாட்டு வரலாற்றிலேயே என்றும் கண்டும் கேட்டும் இராத அளவு அத் துணைப் பெரிய தமிழ்ப் பெண்கள் மாநாட்டை நடத்திக் காட்ட டாக்டர் அம்மாவைத் தவிர வேறு யாரால் முடியும்? குண்டு முகம், கொஞ்சம் நரைத்த தலை, எப்போதும் தமிழர் வாழ்வு தழைக்க வேண்டும் என்று எண்ணும் நெஞ்சு , தாராளமாய்க் கலந்து பழகும் இயற்கை, கொண்ட கொள் கையை நிலைநாட்டியே தீரும் உறுதி — இப்படிப்பட்ட டாக்டர் தருமாம்பாள் அவர்கள் செந்தமிழர் கிளர்ச்சி வெற்றி பெற ஆற்றிய தொண்டின் திறம் பெரிது.

திருச்சி

சென்னையைப் பற்றியே நீண்ட நேரம் பேசிக் கொண் டிருந்தால் திருச்சி நம்முடன் சண்டைக்கு வந்துவிடும். எனவே இனி திருச்சிக்குச் செல்வோம். திருச்சி என்றதும், தமிழனுக்கு அங்குள்ள மலைக்கோட்டை நினைவிற்கு வரும். இத்தகைய கோட்டைகளைக் கட்டி ஆண்ட அந்த நாள் தமிழர் ஆட்சி நினைவிற்கு வரும். அடுத்த நினைவு தோழர் வேதாசலத்தைப் பற்றித்தான். வழக்கறிஞர் வேதாசலம் அவர்கள் நல்ல உயரமும் எளிய வாழ்வும் குழந்தை உள்ளமும் கொச்சை மொழியும் படைத்தவர். அன்பு நெஞ்சத்தால் அனைவரையும் தன்பால் ஈர்க்கும் பண்புடையவர். தமிழர் வாழ்வு தழைக்க

வேண்டும் என் பதிலே அடங்காத ஆர்வமுடையவர். பெரியாரின் பெருந் தொண்டு ஒன்றால் தான் தமிழர் தலை நிமிர்ந்து வாழமுடியும் என்ற உறுதி படைத்த உள்ளத்தினர். சிறுசிறு சொற்களைச் சின்னச்சின்ன சொற்றொடர்களாக்கி மெல்ல மெல்ல அவர் பேசும்போது, அன்புள்ள அண்ணன் தன்பால் அன்புள்ள தம்பிகளுக்கு அறிவுரை நிகழ்த்துவதுபோல் இருக்கும். திருச்சித் தோழர்கள் கி. ஆ. பெ. விசுவநாதனும் வேதாசல் மும் சுந்தர நாடாரும் என். சங்கரனும் உழைத்து உழைத்துத் திருச்சியைத் தமிழர் கோட்டையாகவே ஆக்கிவிட்டார்கள். எந்த நகரத்தை மறந்தாலும் திருச்சி நகரத்தை மட்டும் ஆச்சாரியார் ஆட்சியினர் மறக்க மாட்டார்கள். இந்திப் போருக்குக் கொடி மரம் நாட்டப்பட்டதே திருச்சிப் பாசறை யில் தான். இந்தி ஒழிய வேண்டும் அல்லது நாங்கள் ஒழிய வேண்டும் என்று செந்தமிழர் சூள் உரைத்ததும் திருச்சியில் தான். 1937—1940 ஆம் ஆண்டுகளில் தமிழரெல்லாம் திருச்சி திட்டம் தீட்டுகிறது என்று பெருமையோடு சொல்லுவார்கள். திரும்பிப் பார் திருச்சியை (இந்தத் தலைப்பில் தளபதி அண்ணா அவர்கள் அப்போது விடுதலை யில் ஒரு தலையங்கம் எழுதி விருந்தார்.) என்று ஆரிய வட்டாரத்திற்கு அன்புடன் எடுத்துக் காட்டுவார்கள். அந்தக் காலத்தில் மட்டுமல்ல; இந்தக் காலத்திலும் திருச்சி தமிழர் கோட்டையாய்த்தான் ஒளிர்கிறது. தலைவர் பெரியாருக்குத் திருச்சி என்றாலே ஒரு தனி ஆசை உண்டு.

**சிங்கப்பூர்**

தமிழ் நாட்டை விட்டு வந்து விட்டோமே! எத்தனையோ மைல் கடந்து, திரைகடல் எல்லால் கடந்து, தோழர்கனை எல்லாம் விட்டுவிட்டு, சுற்றத்தாரையும் பிரிந்து, தமிழ் நாட்டில் வாழ வழியின்றி வாழ்க்கைக்கு ஒரு வழிதேடி இங்கு நாம் வந்துவிட்டோமே ! தமிழ் நாடுதான் நம்மை ஆதரிக்க மறந்து விட்டதே ! அத்தகைய தமிழ் நாட்டைப் பற்றி — அங்கு நடக்கும் போராட்டத்தைப்பற்றி நமக்கென்ன கவலை" என்று சிங்கப்பூர் தமிழர்கள் எளிதில் எண்ணியிருக்க முடியும். அப்படி அவர்கள் எண்ணியிருந்தால் அது நேர்மையில்லை என்று யாரும் சொல்லிவிடமுடியாது. தமிழ் நாடுதான் அவர்கள் வாழ வழிவகுத்துக் கொடுக்க வில்லையே!

ஆனால் அவர்கள் அப்படி எண்ணவில்லை. தமிழ் நாடு அவர்களை மறந்துவிட்டது. ஆனால் அவர்கள் தமிழ் நாட்டை மறக்கவில்லை. தங்கள் சொந்த நாடு தமிழ் நாடு என்பதை மறக்கவில்லை. அங்கு நிகழும் போராட்டம் தம்முடைய போராட்டம் என்பதை மறக்கவில்லை. தொலை தூரத்திலிருக்கும் மலாய் நாட்டிலிருந்து சிறப்பாகச் சிங்கப்பூரிலிருந்து பல தோழர்கள் தமிழ்நாட்டுக்கு வந்து அங்கு நிகழும் தமிழ்ப்போரில் பங்குகொண்டு சிறைக்கோட்டமும் புகுந்த செய்தி இருக்கிறதே அதைத் தமிழர்கள் என்றைக்கும் மறக்கமாட்டார்கள். எப்படித்தான் மறக்கமுடியும்! எங்கோ உள்ள சிங்கைத் தமிழர்கள் இங்கே உள்ள சென்னையில் சிறைபுகுந்த காட்சியை இந்தி ஒழிக! எங்கள் தமிழ் வாழ்க!' என்று மலாய் நாடு பினாங்கு சிங்கப்பூர்ப் பகுதிகளில் எழுந்த தமிழ் முழக்கம், அங்கு நிகழ்ந்த பெரும் பெரும் கூட்டங்கள், பேசப்பட்ட அரிய உரைகள், காட்டப்பட்ட தமிழ் உணர்ச்சி இவற்றை எல்லாம் எதிர் காலத் தமிழர்கள், தமிழர் ஆட்சியின் இன்பத்தைச் சுவைக்கும்போது, தங்கள் பிள்ளைகட்கும் பேரர்கட்கும் வீரகாதை எனச் சொல்லுவார்கள். அத்தகைய பெருமாட்சி கொண்டது சிங்கைத் தமிழர்கள் செய்த தொண்டு. அந்தத் தொண்டிற்கு உயிர்நிலையாய் உணர்ச்சிக்களமாய் அமைந்த சிங்கப்பூர் தமிழ் முரசு' நாளிதழையும் அதன் ஆசிரியர் தோழர் சாரங்கபாணி அவர்களையும் இங்கே குறிப்பிட தான் வேண்டும்.

**தளபதிகள்**

காஞ்சியில் சென்னை மாநில இந்தி எதிர்ப்பாளர் மாநாட்டை மிகச் சிறப்பாக நடத்திவைத்த காஞ்சீபுரம் அ. க. தங்சுவேலர், அலுவலகத்திலிருந்து ஓய்வு பெற்றாலும் தமிழ்நாட்டுப் பணியினின்று ஓய்வு பெறாது, மரணம் தன்னைத் தழுவும் வரை தொண்டாற்றிய பழம்பெரும் சுயமரியாதை வீரர் செ.தெ. நாயகம், தமிழர் படையைத் தலைமை தாங்கி நடத்தி வந்த அஞ்சா நெஞ்சன் அழகிரி சாமி , சுயமரியாதைச் சூறாவளிப் படையின் முன்னணி வீரர் அ. பொன்னம்பலனார், அரிய ஆராய்ச்சி உரைகளால் இந்தி வேண்டாம் என்பதை நிலை நிறுத்திய தமிழறிஞர் கா. சுப்பிரமணியனார், எம்.ஏ.,எம்.எல். ஆற்றல் மிக்க பேச்சாளர் கே. எம். பாலசுப்பிரமணியம் பி.ஏ.பிஎல். தமிழ்வாழத்தான் வாழ்ந்த தமிழவேள். த.வே.உமா மகேசுவரனார், "கட்டாய இந்தி தொலைக ' என்று பல இடங்களிலும் வீரமுழக்கம் புரிந்து வந்த கான்பகதூர் கலிபுல்லா

எம்.ஏ.பி.எல்.,எம்.எல்.ஏ., பெரியாரின் பெருந்தொண்டுக்கு உற்ற துணையாய் உடனிருந்த பெரியாரின் பெரியார் வைத்திய வள்ளல் . ஈ. வெ. கிருஷ்ணசாமி, இந்தி எதிர்ப்பில் பெற்ற வீர உணர்ச்சியால் சைவத் துறவியாய்ச் சிறை புகுந்து ஆனால் சுயமரியாதை வீரராய் வெளி வந்த ஈழத்தடிகள் பி.ஏ., எவ்வளவு பெரிய மாநாடுகளையும் சிறப்பாக நடத்துதற்கேற்ற பக்குவமும் செய்வகை அனுபவமும் தெரிந்த எஸ். வி. லிங்கம், சேலத்தைத் தமிழர் பாடி வீடாக மாற்றி அமைத்த தோழர் . சித்தையன், சின்னஞ்சிறு மாட்டு வண்டியில் ஒரு சிறு மாட்டைப் பூட்டிக் கொண்டு, சென்னை நகர் முழுதும் அதை ஓட்டி ஓட்டி இந்தி எதிர்ப்புப் பணியாற்றிய சாமி அருணகிரிநாதர், தமிழர் — தினசரி விடுதலைக்கு ஆசிரியராய் அமர்ந்து அரிய கட்டுரைகள் தீட்டிச் சிறைக்கோட்டம் புகுந்த கிழவனார் பண்டித முத்துசாமி — இந்தி எதிர்ப்பு இயக்கம் என்ற உடனே இவர்கள் எல்லாரும் நம் மனக்கண் முன் தோன்றுதல் இயற்கை

**விடுதலை**

இத்துணைப் பெரிய இயக்கத்திற்கு இருந்த தினசரி எல்லாம் ஒன்றே ஒன்றுதான். விடுதலை' அதன் பெயர். சாதிக் கட்டினின்றும் சமயக் கட்டினின்றும் வேத புராண இதிகாசக் கட்டுகளினின்றும் விடுதலை பெறத் தமிழர்க்குக் கிடைத்தது ஒரே ஒரு விடுதலை'. ஆனால் அந்த ஒரு விடுதலை ' எத்துணைப் பெரிய இயக்கத்தை எத்துணை விரைவில் எத்துணை எளிதாக வெற்றி புரிக்குச் சேர்த்து விட்டது ! அதுவும் எத்தனை எத்தனை ஆரிய ஏடுகளின் மறைத்தல் — திரித்தல் பிரசாரத்திற்கிடையே !

**"குடி அரசு "**

"விடுதலையின் தாயகம் குடிஅரசு". அத் தமிழர் தன்மான முரசு, பெரியார். கொட்டிய போர் முரசினைத் தமிழர்க்கெல்லாம் ஒலி பெருக்கிற்று. சென்ற இருபதாண்டுகளாக விடாது ஒளிபரப்பி வரும் ஒரே ஒரு சுயமரியாதைச் சுடரொளி குடிஅரசு". எத்தனை எத்தனைப் புரட்சிகளைக் "குடி அரசு' நடத்தி இருக்கிறது அறியாமை நிறைந்த இத் தமிழ் நாட்டில். எத்தனையோ பேர் நஞ்சில் தோய்த்து வீசிய அம்புகளை எல்லாம் புன்முறுவல் பூத்த முகத்துடனே ஏற்று, கிழமை தவறாது தன் இடி முழக்கத்தை நாடு முழுதும் எழுப்பி வரும் 'குடி அரசு' இருந்திரா விட்டால் தமிழன் இன்று தமிழனாய் இருந்திருப்பானா?—

— சூத்திரனாய்த்தானே இருந்திருப்பான்! " குடி அரசு வேறு, சுயமரியாதை இயக்கம் வேறு என்று பிரித்தெடுக்க முடியாதபடி இரண்டும் ஒன்றாய்க் கலந்துவிட்டன். அத்தகைய குடி அரசின் ஆதரவு இந்திப் போருக்கு என்றால் இந்திப் போர் ஏன் வெற்றி பெறாது?

இந்த இரண்டையும் தவிர நகர தூதன் என்ற ஒரு தமிழ்க் கிழமை இதழும் "சண்டே அப்சர்வர்' என்ற ஓர் ஆங்கிலக் கிழமை இதழுமே இந்திப்போர் முழக்கம் புரிந்தன .. போராட்டத்தை நடத்துவிக்க தமிழர் அன்று பெற்றிருந்த பத்திரிகைகள் — இந்த நான்குதான். ஆனால் ஆரியர்க்கோ ஊரெங்கும் பத்திரிகைகள். எத்தனை எத்தனையோ நாளிதழ்கள், கிழமைத்தாள்கள், திங்கள் மலர்கள்! இருந்தென்ன? இறுதியில் வென்றவன் தமிழன் ; வீழ்ந்தவன் மாற்றான் ! வென்றது வீரம் ; வீழ்ந்தது சூழ்ச்சி !

# 6. தமிழர் பெரும்படை போகுது பார் !

(1938—ல் தமிழர் பெரும்படை ஒன்று திருச்சியிலிருந்து புறப்பட்டு சென்னைவரை கால்நடையாக வந்த வரலாறும், சென்னை அப் படைக்குத் தந்த வரவேற்பும், 11—9—38—ல் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் நடைபெற்ற அவ்வரவேற்புக் கூட்டத்தில் தலைவர் பெரியார் முதன்முறையாகத் தமிழ்நாடு தமிழருக்கே' என்னும் தாரக மந்திரத்தைத் தமிழர்க்கு உச்சரித்தவகையும் பிறவும் இந்தப் பகுதியில் தரப்படுகின்றன.)

1938 ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில், தமிழர் பெரும் படை போகுது பார்' என்று தமிழரெல்லாம் எக்காளமிட்டுக் கொண்டு சொல்லினர் . "ஆரியரே வாரீர், நேற்றுவரை உமது வேட்டைக் காடாய் இருந்த தமிழ்நாட்டில் இதோ இன்று கிளம்பி இருக்கும் இந்த வீரர் கூட்டத்தைப் பாரீர்" என்று ஆரிய வட்டாரத்தை நோக்கிப் பூரிப்புடன் புகன்றனர். கிளம்பிற்றுக் காண் சிங்கக் கூட்டம், தேடுது காண் பகைக் கூட்டத்தை ' என்று எடுத்தெடுத்துக் காட்டினார். வட்டாரம் தோறும் கட்டாய இந்தித் திட்டத்தைத் தவிடுபொடியாக்கிவரும் அவ்வீரர்கள் வாழ்க என வாழ்த்தினர்.

திருச்சியிலிருந்து புறப்பட்டு, சென்னைவரையுள்ள எல்லா ஊர்கட்கும் கால்நடையாகச் சென்று, ஆங்காங்கு கூட்டங்கள் அமைத்து, ஆரியர் வரவால் தமிழர் வாழ்வு சிதைந்த வரலாற்றை விளக்கி, இந்திப் பாடத் திட்டக் கொடுமையை எடுத்துக்கூறி, தமிழ் மக்களைத் தட்டி எழுப் பிற்று அந்தத் தமிழர் பெரும்படை.

தமிழர் நெஞ்சம் களிப்புக்கடலாயிற்று, அடிப்படை கண்டு. ஆரியர் உள்ளம் வெதும்பினர் , இப்படியும் உண்டா என்று .

படையின் நோக்கத்தையும் திட்டத்தையும் தெளிவாக விளக்கி, செந்தமிழைக் காப்பதற்கு இத்தகைய சேனை யொன்று தேவை என்று படை அமைச்சர் மணவை ரெ. திருமலைசாமி 1938 ஜூன் இறுதியில் "விடுதலை" இதழில் அறிக்கை யொன்று விடுத்தார். கிட்டத் தட்ட 500 வீரர் கள் படைக்கு மனுச் செய்தனர். நல்ல உடல் கட்டும் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடக்கும் பண்புமுடைய நூறு இளம் காளைகள் மட்டுமே பொறுக்கி எடுக்கப்பட்டனர்.

ஒவ்வொரு நிமிஷமும் உத்திரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்த இந்த இளங்காளைகள் புறப்படு' என்ற ஆணை வந்ததும் ஓடோடி வந்து படையில் கலந்துகொண்டனர்.

நெருப்புப்பொறி பறக்கப் பேசி , கேட்போர் அத்தனைப் பேர் நெஞ்சையும் துடிதுடிக்கச் செய்து சுயமரியாதைச் சண்டமாருதத்தை நாட்டில் எழுப்பிவந்த தோழர் கே. வி. அழகிரிசாமிதான் படைச் சேனாதிபதி. படைத் தளபதி என்றால் படைத் தளபதியேதான் அவர். அந்த நெட்டை யான உருவம் போர்க்கோலம் பூண்டு படையை இராணுவ முறையில் அணிவகுத்துச் செலுத்திய காட்சி , அடே அப்பா, எதிரிகளையெல்லாம் திக்குமுக்காடச் செய்துவிட்டது.

படைத் தலைவர், தோழர் அய். குமாரசாமிப்பிள்ளை . பெருஞ்சோற்றுத்தலைவி , மூவலூர் மூதாட்டி இராமாமிர்தத் தம்மையார். திருச்சி வழியனுப்புகிறது!

1988 ஆகஸ்ட் 1— தமிழர் பெரும்படை முரசு கொட் டியவண்ணம் உறையூர் என்னும் படை வீட்டிலிருந்து புறப்பட்டு முக்கியமான திருச்சி வீதிகளின் வழியாக "டவுன் ஹால்' மைதானம் வந்தது. திருச்சித் தமிழர் அங்கு வழி யனுப்பப் பெருங் கூட்டம் கூட்டயிருந்தனர். பெரியார் அதன் தலைவர். கான்பகதூர்கலிபுல்லா , திருச்சித் தளபதி வேதாசலம் இருவரும் படையை வாழ்த்திப் பேசினார். படைச் சேனாதிபதி அழகிரிசாமி நன்றி கூறினார். படை புறப்பட்டது.

படை இன்னின்ன ஊரில் இன்னின்ன தேதியில் இன்ன இன்ன நேரத்தில் இத்தனை மணி நேரம் தங்கும் என்ற நிகழ்ச்சி நிரலும் படை செல்லும் பாதையும் படை அமைச் சரால் முன்னமே விடுதலை ' யில் அறிவிக்கப்பட்டி ருந்தது. அந்தப்படியே படை சென்றது ; வழிநெடுகத் தமிழர் வரவேற்புத் தந்தனர். ஊர்தோறும் பொதுக்கூட்டங் கள் கூட்டப்பட்டன. எல்லா இடங்களிலும் தமிழர் படை யினர் இந்தித்திட்டம் கெட்டொழியத் தக்கதே என்பதை விளக்கிப் பேசினர். ஆகஸ்டு 1—ல் உறையூரினின்றும் புறப் பட்ட படை திருச்சி மாவட்டத்தைக் கடந்து, தென்னார்க் காடு மாவட்டத்திற் புகுந்து, செங்கற்பட்டு மாவட்டத்தைத் தாண்டி, செப்டம்பர் 11—ல் சென்னை மாவட்டத்திற்கு வந்து சேர்ந்தது.

**சென்னை வரவேற்கிறது .**

அன்று மாலை சென்னை திருவல்லிக்கேணிக் கடற்கரையில் தமிழ்நாடு அதுவரையில் கண்டிராத அத்தனைப் பெரிய கூட்டம் ! 150,000 தமிழர் திரண்டு குழுமி இருந்தனர். எத்தனையோ ஊர்வலங்கள் புற்றிலிருந்து ஈசல் புறப்படுவது போல எங்கெங்கிருந்தோ புறப்பட்டுக் கடற்கரைக்கு வந்தபடி இருந்தன. சென்னை மாகாணத்தின் பல பகுதிகளிலி ருந்தும் ஏராளமான பொதுமக்கள் வந்திருந்தனர். ஆயிரக் கணக்கான பெண்கள் ஒருபால் அமர்ந்திருந்தனர். சதிகார நெஞ்சங்கள் துடிதுடிக்கச் சடசட வெனத் தமிழ்க் கொடிகள், விண்ணில் அசைந்தசைந்து ஆடின. "தமிழ் வாழ்க! தமிழ் வாழ்க !" என்று மக்கள் ஒலித்தபடி இருந்தனர். மாலை 5 மணிக்குக் கூடிய கூட்டம். இரவு 1 மணிக்கும். கலைய மனமின்றிக் கலைந்தது. திருச்சிப் படைக்குச் சென்னைத் தமிழர் தந்த வரவேற்பு , உள்ளபடி கண்கொள்ளாக் காட்சி.

மறைமலை அடிகளார் கூட்டத் தலைவர். சொல்லவா வேண்டும் அவர் பேச்சை ? தொடர்ந்து பெரியாரின் சங்க நாதம்.

பெரியார் பேசியானதும், படைச்சேனாதிபதி அழகிரிசாமி , பேராசிரியர் பாரதியார், ரெவரண்ட். அருள் தங்கையா, மூவலூர் இராமாமிர்தத் தம்மையார். பண்டிதை நாராயணியம்மையார், வ. பா. தாமரைக்கண்ணியம்மை யார் , முந்நகர் அழகியார், வேலூர் ஷர்புதீன், திருப்பூர் மொய்தீன், காஞ்சி கலியாண சுந்தரம் இத்தனைப் பேரும் பேசினர்.

படை அமைச்சர் தம் அறிக்கையைச் சமர்ப்பித்தார். அது இது:

கடல் போலத் திரண்டோடி வந்திருக்கும் அன்பர்களே,

தமிழர் படையின் சார்பாக இராணுவமந்திரி என்கின்ற தோரணையில் உங்களுக்கு எமது வணக்கத்தைத் தெரி வித்துக் கொள்ளுகின்றேன்.

**படையெடுப்பின் நோக்கம்**

தமிழர் பெரும் படையின் வரலாற்றை நீங்கள் தெரிந்திருப்பீர்கள். காங்கிரஸ் கட்சித் திரையில் நின்று இந்தியப் பொதுமொழி தேவை என்கின்ற சொல்லால், நம் தமிழ்மீது வட மொழியொன்று படை எடுத்து வருவதைத் தடுப்பான் வேண்டியும், தாய்மொழிக்கு ஏற்பட்டுள்ள இன்னல்களைக் களைவான் கருதியுமே இப்படை திரட்டப்பட்டது என்பதை முன்னரே தெரிவித்திருக்கிறேன்.

**எங்கள் படைவீரர்கள்**

எமது படையில் இந்து முஸ்லிம் கிறிஸ்து ஆகிய மதச்சார்பினரும், இந்துக்களில் பார்ப்பனரல்லாத எல்லா வகுப்பைச் சேர்ந்தவர்களும் ஆதித்திராவிடர்கள் உள்பட அங்கம் பெற்றிருக்கிறார்கள். மலையாள நாட்டினரும் தெலுங்கு தேசத்தினரும்கூட இதில் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கிறார்கள்.

நாங்கள் ஆகஸ்டு 1—ந்தேதி புறப்பட்டோம். இன்றோடு 42 நாள்களாகின்றன. இந்த 42 நாள்களில் 234 கிராமங்களைக் கடந்து முக்கிய ஊர்களில் தங்கி ஆங்காங்கே எங்கள் நோக்கங்களை எடுத்துச் சொல்லி வந்திருக்கின்றோம். ஆயிரக்கணக்கில் பொதுமக்கள் வந்திருந்த 87 பொதுக்கூட்டங்களில் எங்கள் கருத்தை மணிக் கணக்கில் மிக விளக்கமாக எடுத்துப் பேசி இருக்கிறோம்.

**42 நாள்களில் 577 மைல்கள்**

இந்த 42 நாள்களில் ஓய்வுக்காக ஒருபொழுது, அரைப் பொழுதாகத் தங்கிய வகையில் 9 முழு நாள்கள் அலுப்பாறினோம். அது போக 33 நாள்கள் நடந்து வந்திருக்கிறோம். எங்கள் நடையில் 577 மைல்கள் போயிருக்கின்றன. ஊர் விட்டு ஊர் போவதற்காக நடந்த மைல்கள் 409 ஆயினும் ஊர்வலமாகச் சுற்றிய சுற்று வேறு 168 கற்களுக்கு மேற்பட்டுவிட்டன.

நதிகளைக் கடந்தோம்

தஞ்சை மாவட்டத்தையும் எதன்னார்க்காடு மாவட்டத்தையும் பிரிக்கின்ற முக்கால் மைல் அகலமுள்ள கொள்ளிடம் நதியைத் தோணி மூலம் கடந்தோம். பண்ருட்டிக்கும் சோலியனூருக்கும் இடையிலிருக்கும் அரை கல் அகலமுள்ள பெண்ணையாற்றில் வயிற்றளவு தண்ணீர் ஓடியதால் அதை நீந்திக் கடந்தோம். பூதூருக்கும் திருக்கழுக்குன்றத்திற்கும் நடுவிலிருக்கும் பாலாற்றைச் சுள்ளென்று அடிக்கும் வெயில் நேரத்தில் அதாவது 3 மணிக்கு நடந்து கடந்தோம்.

மழையில் நனைந்தோம்

இது மாரிக்காலத் தொடக்கம் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டியதில்லை. இக் காலத்தில் அடிக்கடி மழை பொழியும் என்பதை நீங்கள் அறிந்தது போலவே நாங்களும் அறிவோம். இதுசமயம் நடந்து செல்வது எனும்

ஏற்பாட்டுடன் புறப்பட்டால் இடையில் மழை எங்களைத் துன்புறுத்தும் என்பதையும் நாங்கள் அறிவோம். அப்படியிருந்தும் எங்கள் தலைமீது சுமந்துள்ள கடமை எவ்வகை இடையூறுகளையும் கவனிக்காது போரைத் தொடர்ந்து நடத்தும்படித் தூண்டிற்று. **திரும்பத் திரும்ப மழைதான்**

திருச்சி நகரை விட்டுப் புறப்பட்டுக் காவிரி நதியைக் கடக்கும்போதே மழையும் எங்களைத் தொடர்ந்து பொழிந்தது. சுமார் 1 கல் தொலைவுக்குமேல் மழையிலேயே நடந்து சென்றோம். அதேபோல், சாத்தனூருக்கருகில் செல்லும் போது தொடங்கிய மழை 2 கல் நடந்து சாத்தனூர் சத்திரத்திற்குள் நுழைந்துங்கூட இரவு 11 மணிவரை ஓய வில்லை. திருவையாற்றை விட்டுத் தஞ்சைக்குப் போக அடி எடுத்து வைத்ததும் தொடங்கிய மழை எங்கள் மீது கல் தொலைவு பொழிந்து கொண்டே வந்தது. பசுபதி கோயிலை விட்டுப் பாபநாசம் போகும்போது சக்கராப் பள்ளியில் பிடித்த மழை பாபநாசத்தில் ஊரைச் சுற்றி உஸ் என்று குந்தும் வரை 2 மணி நேரம் விடவில்லை.

மழைக்கு மத்தியில் 27 கல்

பூண்டியாங்குப்பத்தில் இரவு தங்கியிருந்தேரம். அங்கு இரவு 10 மணிக்குப்பிடித்த மழை விடியற்காலை 3 மணிக்குத் தான் விட்டது. எங்கள் இராத்தங்கல் இடத்தின் மேற்கூரை ஓட்டைகள் நிரம்பியிருந்தமையால் இரவு முழுதும் உட்கார்ந்து கொண்டே இருந்தோம் நெல்லிக்குப்பத்திலிருந்து பண்ருட்டிக்கு 9 கல். நெல்லிக் குப்பம் விட்டதும் 2 கல்லில் பிடித்த மழை பண்ருட்டி போய்ச் சேரும்வரை விடவே இல்லை. காஞ்சீபுரத்தில் இரண்டாம் — நாள் பொதுக்கூட்டத்திலிருந்து புறப்பட்டபோது பிடித்தமழை சகிக்க முடியாதது. 21 கல் அந்தக் கடுமழையைப் பிளந்து சென்றோம். கடைசியாகக் கோடம்பாக்கத்தை அடைந்ததும் அந்தப் பாடாவதி நெடுஞ்சாலையில் 2 கல் தொலைவு விழுந்தும் எழுந்தும் நடக்க வேண்டியதாயிற்று. ஆயிரக்கணக்கான பொதுமக்களும் எங்களோடு மழையில் துன்புற்றனர். எல்லா இடங்களிலும் மழையோடு மழையாய் நடந்து சென்றோமே தவிர எங்கும் ஒண்டி நிற்கவில்லை. அநேக இடங்களில் கையில் கொண்டு வந்த மாற்று உடுப்புகளும் நனைந்து போனதால் வேறு உடுப்புகளின்றி நனைந்தவை உலரும்வரை வெட வெடத்துக் கொண்டு இருந்திருக்கிறோம். மொத்தம் 27

கல் நனைந்த உடுப்புகளோடு குடை இல்லாமல் மழையிலேயே ஊடுருவிப் பாய்ந்து வந்திருக்கிறோம். நோய்வாய்ப்பட்டோம் , மனம் நொந்தோமில்லை

குறித்த தேதியில் குறிப்பிட்ட இடத்தை அடைய வேண்டுமென்ற கருத்தோடு , இப்படி மழையில் நனைந்தும் காற்றில் உலர்ந்தும் நடையை நிறுத்தாமல் படை போய்க் கொண்டிருந்தாலும், கோரக்குளிரிலும் நெஞ்சையும் சில்லிடச் செய்யும் நச்சுக்காற்றிலும் படை சென்றதாலும் கல் போன்ற உடலும் கரையத் தலைப்படுமன்றோ? எங்களைப் பகைவராய் எண்ணிப் பழிதூற்றும் அன்பர்களைப்போல நாங்களும் மனிதர்கள் தானே? எங்களுக்கும் நோய் வரத் தானே செய்யும்? இதனால் எமது படை வீரர்களில் சிலர் ஜுரத்தாலும் ஜலதோஷத்தாலும் சீத பேதியாலும் இருமலாலும் கஷ்டப்பட நேர்ந்தது. இப்படி நோய்வாய்ப்பட்டோரில் பலர் மருந்து சாப்பிட்டுக்கொண்டே படையுடன் தொடர்ந்து வந்தனர். சிலரைச் சில இடங்களில் விட்டு வைத்து மருந்து சாப்பிட ஏற்பாடு செய்துவிட்டு வந்தோம். அவர்களெல்லாம் திரும்பி வந்துவிட்டனர்.

பச்சைப்புண் உடம்போடு படைத்தலைவர்

எமது தமிழர் பெரும்படையின் சேனாதிபதி அன்பர் கே. வி. அழகிரிசாமி அவர்கள் உடல் நலிவுள்ளவர். அவர் சிகிச்சை முறையிலிருந்து மீண்ட சொற்பதினத்தில் படை யெடுக்க வேண்டியதாய் இருந்ததால், பச்சைப்புண் உடம்போடு படையை நடத்த முற்பட்டார். அதோடு மணிக் கணக்கில் ஒவ்வோர் ஊரிலும் பேசி வந்தார் .

படை எடுப்பு நடந்த வகை

திருச்சி மாவட்டத்தில் 3 ஊர்களும், தஞ்சை மாவட்டத்தில் 17 ஊர்களும், தென்னார்க்காடு மாவட்டத்தில் 22 ஊர்களும் எங்களுக்குத் தங்கிப் புறப்படும் ஊர்களாக இருந்திருக்கின்றன. திருச்சி மாவட்டத்தில் 16 கல்லும், தஞ்சை மாவட்டத்தில் 103 கல்லும், தென்னார்க்காடு மாவட்டத்தில் 136கல்லும், செங்கற்பட்டு மாவட்டத்தில் 154 கல்லும் ஆக ஊர்விட்டு ஊர் போவதற்காக மட்டும் 409 கல் தொலைவு நடந்திருக்கிறோம்.

வாழ்த்தினார்கள், வரவேற்றார்கள், எதிர்ப்பும் உண்டு

நாங்கள் போகும் இடங்களில் எல்லாம் எங்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புகள் கணக்கில் அடங்கா . ஆயிரம் பதினாயிரக்கணக்கிலேயே கூட்டங்களில் எல்லாம் மக்கள் இருந்தனர். இரண்டோரிடங்களில் எதிர்ப்பும் இருந்தது என்பதைக் கண்ணியமாக ஒப்புக் கொள்ளுகிறேன். சுமார் 4 லட்சம் மக்களுக்கு எங்கள் நோக்கங்களை எடுத்துச் சொல்லி வந்திருக்கிறோம். அதே மூச்சில் இன்றும் சுமார் 1 லட்சம் பேருக்கு முன் நாங்கள் நிற்கிறோம்.

எங்கள் தலைவர் வாழ்க

என்ன எண்ணத்தோடு தமிழர் பெரும்படை புறப் பட்டதோ அது பூரண வெற்றி கண்டுவிட்டது என்பதில் தான் நான் பெருமகிழ்ச்சி கொள்கிறேன். திருச்சியில் ஆசிகூறி வழியனுப்பிய எங்கள் ஒப்புயர்வற்ற பெருந்தலைவரான அதே ஈ.வெ.ரா. அவர்கள் இன்று எங்களை வரவேற்று வாழ்த்தி மகிழ்விக்க எங்கள் முன் உங்களிடையே வந்திருக்கின்றார். அவர் வாழ்க !

ஈடு இணையற்ற படை இது

தமிழர் படையைப் போன்ற பெரும்படை இவ்வளவு தாரம் சுமார் 600 கல் நடந்தது இதுவரை எதுவுமே இல்லை. காந்தியின் தண்டி ஜாதாவும், தோழர் இராச கோபாலாச்சாரியின் வேதாரண்ய உப்பளப்படையும் தமிழர் பெரும் படையின் நான்கில் ஒரு பங்கு அளவில் கூட நடக்க வில்லை . ஆகவே இது இந்திய வரலாற்று உலகில் ஒப்புயர் வற்ற பெரும்படை என்ற உயர்வை அடைந்து விட்டது என்பது மிகையாகாது.

படையைக் கலைக்கின்றேன்

தொடக்கத்திலேயே குறிப்பிட்ட வண்ணம், படை இன்றோடு இந்தக் கடற்கரைக் கூட்டத்தோடு முற்றுப் பெறுகின்றது. உத்தியோக தோரணையில் இன்று மாலையோடு படையைக் கலைக்கின்றேன் என்பதை இதன் மூலம் லட்சக்கணக்கான உங்கள் முன்னிலையில் தெரிவிக்கிறேன்!

எல்லோருக்கும் எமது வணக்கம் !

16—9—38: இந்து தியலாஜிகல் பள்ளி ; இன்று இங்கு திருச்சி தமிழர் பெரும்படையைச் சேர்ந்த 40 பேர் மறியல் செய்தனர். 7,000 பேர் கொண்ட கூட்டம் அவர்களை வாழ்த்திற்று. ஏராளமான பெண்களும் திரண்டு குழுமி , "காளைகாள்! வாகை சூடி வருக' என்று சொல்லி சிறைச் சாலைக்கு

அவர்களை அனுப்பிவைத்தனர். படைவீரர்கள் நாற்பதின்மரும் உணர்ச்சியும் எழுச்சியும் ததும்ப ஒழிக இந்தி! வாழ்க தமிழ் ! என ஒலித்தவண்ணம் இருக்கையில் போலீஸ் கமிஷனர் ஒருவரும் இன்ஸ்பெக்டர் ஒருவரும் அங்குவந்து அவர்களைக் கைது செய்தனர். சிறைக்குத் தானே, இதோ வந்தோம்" என்று சொன்னவண்ணம் படைவீரர் சென்றனர். தலைக்கு ஆறுமாதம் கடுங்காவல் பெற்றனர்.

கோவை மாவட்டத் தமிழர் படை என்ற பெயருடன் மற்றுமோர் படை 1938 ஆகஸ்டுத் திங்களில் கோவை மாவட்டம் முழுதும் சுற்றுப்பயணம் செய்தது ; சீறிடும் உள்ளங் கட்கும் சிரித்த முகத்துடன் தன் நோக்கங்களை எடுத்துக் காட்டிற்று. தோழர் என். பி. காளியப்பன் படைத்தலைவர். எஸ். எஸ். ஜோஸப் அதன் செயலாளர் . சென்னை ஆர். நாராயணி அம்மையார் போன்றவர்கள் படையில் தக்க பங்கெடுத்துக் கொண்டனர்.

தமிழர் பெரும் படைகள் ஆங்காங்கு பெருமுழக்கம் புரிந்து கொண்டிருந்த இதே நேரத்தில் அமைச்சர் ஆச்சாரியாரின் போக்கு நாளுக்கு நாள் மாறிக்கொண்டே இருந்தது. அவருடைய பேச்சும் புதிது புதிதான உருவம் பெற்ற வண்ணம் இருந்தது.

1937—ஜுலைத் திங்கள் சென்னை இராமகிருஷ்ணா மடத்தில் பேசுகையில் சென்னை மாகாணத்தில் உள்ள எல்லாப் பள்ளிகளிலும் எல்லா வகுப்புகளிலும் கட்டாய இந்தியை வைக்கப்போகிறேன் என்றார்.

அடுத்த திங்கள் கிறித்தவக் கல்லூரியில் பேசுகையில் எல்லாப் பள்ளிகளிலும் — ஆனால் முதல் மூன்று பாரங்களில் மட்டும் என்றார்.

21—4—38—ல் அவர் பிறப்பித்த இந்திக் கட்டாய உத்தி ரவில் தமிழகத்தில் 60, ஆந்திராவில் 54, கன்னட நாட்டில் 4, மலையாளத்தில் 7 ஆக 125 பள்ளிகளில் மட்டுமே முதல் மூன்று பாரங்களில் இந்தியைப் புகுத்தினார்.

அடுத்த திங்கள், இந்தியில் தேறாவிட்டாலும் பரவா யில்லை — மாணவர்கள் மேல்வகுப்பிற்கு மாற்றப்படுவார்கள் என்றார்.

அதற்கடுத்த திங்கள், இந்தியில் ஒரு நூறு சொற்கள் தெரிந்தால் போதும், மற்றபடி நான் முழு இந்தியைக்கூடப் படிக்கச் சொல்லவில்லையே என்றார்.

மற்றும் ஒருமுறை, இன்றைக்கு இந்தி வேண்டுமா வேண்டாமா என்பதே பிரச்சினை அல்ல. ஆள்வது நானா அல்லது ஒரு ஈரோடு இராமசாமியா என்பது தான் பிரச்சினை என்றார்.

இன்னொருமுறை, இன்றைய பிரச்சினையெல்லாம் இந்த நாட்டுக் கல்வி முறையை உருவாக்கும் உரிமை எனக்கிருக்கிறதா அல்லது ஈரோடு எனது நண்பர் இராமசாமி நாயக்கருக்கிருக்கிறதா என்பதே என்றார்.

இந்திக் கிளர்ச்சியின் துவக்க காலத்தில் அன்பர் ஆச்சாரியார், "இந்தியை யார் எதிர்க்கிறார்கள்? ஒரு இராமசாமியும் ஒரு பாரதியும் தானே! இராமசாமியோ பார்ப்பனத் துவேஷி; பாரதியோ பண்டிதர் . ஒரு பண்டிதரும் ஒரு பார்ப்பனத் துவேஷியும் எதிர்ப்பதற்கா நான் இந்தியை விட்டுவிடுவது' என்றார். ஆனால் அதே ஆச்சாரியார் இந்திப்போரின் இறுதிக் கட்டத்தில், புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல இந்திப் போர் வீரர்கள் வருகிறார்களே! இந்த இந்திச் சனியனுக்கு இவ்வளவு எதிர்ப்பு இருக்கும் என்று தெரிந்திருந்தால் இந்தியை வைத்திருக்கவே மாட்டேனே" என்றார்.

திடீரென்று என் வீட்டில் திருடர்கள் புகுந்துவிட்டால் கையில் கிடைத்த எந்த ஆயுதத்தையும் கொண்டு அவர் களை நான் தாக்குவேன். அதுதான் நியாயமும் கூட. அது போல் தான் இந்தி எதிர்ப்புப் பற்றிய என்னுடைய அடக்கு முறையும் என்று பின்னொரு முறை கூறினார்.

தமிழர் கிளர்ச்சியின் வேகம் அவரை அப்படியெல்லாம் மாறி மாறிச்சொல்லவைத்தது; அடக்குமுறையையும் வலுக்க வைத்தது.

ஆனால் அவருடைய அடக்கு முறையால் கிளர்ச்சியின் வேகம் சிறிதும் தணியவில்லை . அடக்க அடக்க மேலும் மேலும் வீறுபெற்று எழுந்தது கிளர்ச்சி ; வீறுபெற்று எழுந்தனர் தமிழர்.

4—12—38: இராமநாதபுரம் மாவட்டத் தமிழர் மாநாடு இன்று காரைக்குடியில் நடைபெற்றது. மறைந்த மாவீரர் சர் பன்னீர் செல்வம் மாநாட்டுத் திறப்பாளர். கருத்துச் செறிவு மிக்க இவருடைய அழகிய உரைக்குப் பிறகு, பாரதி யாரின் வீரத் தமிழ் விருந்து! அன்று பாரதியார் மாநாட்டுத் தலைவர். அது மட்டுமல்ல. பெரியார் பேச்சாளர். பெரியாரின் பேச்சு, அன்று தனிச்சிறப்பு. அடுத்த இரு நாளில் சிறைக்கல்லவா செல்கிறார் பெரியார். சிறைக் கோட்டம் செல்லுமுன்

அவர் பேசிய கடைசிக் கூட்டம் அது தானே ! ஆகவேதான் அன்றைய பேச்சில் ஒரு எழுச்சி காணப்பட்டது. "தமிழரே அஞ்சாதீர் , நான் சென்று வருவேன் — என்னைப்பற்றி எண்ணாதீர், கவலை கொள்ளாதீர், போர் மட்டும் விடாதீர் , வெற்றி நமதே' என்று தமிழருக்குக் கடைசி உரை புகன்றார். சென்னை சென்றார் ! சிறை புகுந்தார்.

இதோ, மாநாட்டில் பாரதியார் ஆற்றிய தலைமையுரை

தமிழுக்கும் தமிழர் உரிமை நலன்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தற்கால நெருக்கடியில் வரும் ஏதம் அறிந்து அகற்றி நலம் பேண ஆழ்ந்து சூழ்ந்து ஆற்றுவது தமிழர் அனைவருக்கும் அறனும் முதற் கடனும் ஆகும். இந் நன்னோக்கம் கருதிக் கூடும் இம் மாநாடு, தமிழர் ஆக்கமும் தமிழர் உரிமை நலமும் பேண விரும்பும் அனைவருக்கும் பொதுவாகும். அரசியல் — பொருளாட்சி — பதவி — பிறப்பு — சமயம் முதலான கொள்கைகளில் எவ்வித வேறுபாடும் கருதாமல், தமிழர் எல்லோரும் ஒன்றுபட்டு நம்மவர் நலம் ஓம்பி வளர்க்கும் முயற்சி மேற்கொள்வதே இம் மாநாட்டின் நோக்கமென நம்புகிறேன்.

நான் காங்கிரஸ் வாதியே

என்னை அறிவார் எல்லார்க்கும் அரசியல் துறையில் நான் சென்ற 35 ஆண்டுகளாக மாறாத காங்கிரஸ்வாதி என்பதை இங்கு நினைவுறுத்தல் மிகையாகும்.

இப்படிப்பட்ட நான் இன்று திடீரென்று காங்கிரசுக்கு எதிர்க்கட்சியாளனாகக் கருதப்படக் காரணமில்லையே? அன்றியும் வாழ்நாள் முழுவதும் மாறாத தேசீய வாதியும் காங்கிரஸ் தொண்டருமான தோழர்கள் கருமுத்து தியாகராச செட்டியார், சேலம் மாணிக்க செட்டியார், பொள்ளாச்சி இராமலிங்கம் செட்டியார் முதலியோரும் தேசியப் போரில் முனைந்து சிறை சென்ற பலரும், இன்னும் காஞ்சி பரவஸ்து இராசகோபாலாச்சாரியார், டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி யார் முதலிய அறிவோடு அனுபவம் முதிர்ந்த பலரும் இந்தியை எதிர்க்க முன்வந்துள்ளார்களே ! இவர்கள் எல்லோரையும் நாட்டின் கேடு சூழும் பகைவரெனப் பழிப்பது முறையாகுமா

இந்தியைக் காங்கிரஸ் ஒப்புக்கொண்டதா ?

இந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாத மாகாணங்களில் அதைப் பொது மொழியாக்க வேண்டுமென இது வரை எந்த காங்கிரஸ் கூட்டத்திலும் யாதொரு மூடிவான தீர்மானமும் ஏற்படவில்லை. மாறாக இவ்வகைத் தீர்மானம் இந்த ஆண்டு டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் கொண்டு வரப்பட்ட போது ஏற்கப் படாமல் மறுக்கப்பட்டது யாவரும் அறிந்த செய்தி. இது மட்டோ? நம் சென்னைத் தென்மாகாணம் ஒன்று தவிர காங்கிரஸ் ஆட்சி ஏற்றுள்ள வேறு எந்த மாகாணத்திலும் கட்டாய இந்தி ஏற்பாடில்லை. சில கேள்விகள்

உண்மை இதுவாக, காங்கிரஸ் அமைச்சர் ஒருவர், முன் அறிவிப்பின்றி, தமிழருக்கு முழுதும் அந்நிய மொழியென அவரே ஒப்புக்கொள்ளும் இந்தியைக் கட்டாய பாடமாக்கி, அதை யாராவது எதிர்க்கத் துணிந்தால் துணிவாரைச் சிறை புகுத்தி மகிழத் துணிவது ஜனநாயகக் கொள்கைக்கு மாறாகாதா?

காங்கிரஸ் மாகாண ஆட்சி ஏற்றால், தான் இந்தியைக் கட்டாய பாடமாக்குவதாக வட இந்திய நண்பர் ஒருவருக்கு வாக்குறுதி பண்ணிவிட்டேன், அதனால் இந்தியைக் கட்டாய பாடமாக்குவதில் தமிழர் எல்லோரும் உடன் பட்டுத் தீர வேண்டுமென நம் முதல் அமைச்சர் இந்தியைக் கட்டாயமாக்கிய பின் நமக்குக் கூறுவது ஜனநாயகக் காங்கிரஸ் கொள்கைக்குப் பொருந்துவது ஆகுமா?

அம் மந்திரியாரின் இம் முயற்சி ஜனநாயகக் கொள்கைக்கும் தமிழர் உரிமைக்கும் குறைவும் தமிழுக்குக் கேடும் உண்டுபண்ணும் என உரைப்பவரைக் காங்கிரஸ் பகைவராவும், அரசியல் ஆட்சி விருப்பச் சுயநலவாதிகள் எனவும் பழிப்பது அறமா?

தவிர, காங்கிரஸ்காரரே மிக வெறுத்து இழித்துத் தூற்றும் அறன் அல்லாத மறச்சட்டத்தால் இந்தியை எதிர்ப்பவரை ஒறுப்பதைத் தம் குறிக்கோளாகக் கொள்ளும் மந்திரிமார் ஆட்சி பாராட்டத்தக்கதா?

இந்தி தேவையா?

பல்லாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து முதிர்ந்த தனி வேறு மொழிகள் பல பயின்று வீறுபெற்று உயர்ந்த நமது நாட்டில் நேற்று மொகலாய வல்லரசு

காரணமாய் , ஒரு வட மாகாணத்தில் எழுந்ததும் இன்னும் இலக்கணம், இலக்கியம் தனக்கென எழுத்தும் கூட இல்லாததுமான ஓர் அந்நிய மொழியை நம்மவர் எல்லோருக்கும் பொதுமொழியாக்குவது அவசியமா, நலம் தருமா?

காங்கிரசே இம்முடிவை ஏற்காமல் விலக்கியுள்ளது. முஸ்லிம் சமுதாயம் முழுவதும் இதனை எதிர்க்கிறது. வங்காளம் முதலிய வடமாகாணங்கள் பலவும் ஒவ்வாமலிருந்து வருகின்றன. பெருந் தலைவர் பலர் இன்னும் இப்புதுப் பொதுமொழி பற்றி மாறுபட்ட கருத்துடையராய் உள்ளனர்.

அன்றியும் நாகரிக உலக சரிதத்தில் பலகோடி மக்க ளடங்கி விரிந்து பாந்த பெருநாடு எதனினும் எல்லோருக்கும் ஒரு பொதுமொழியை அரசியலார் வற்புறுத்திய செய்தி கேட்கப்படாத புதுமையாகும். அதற்கு மாறாக ஒரு மொழி பேசிய சமுதாயமே வளர்ந்து நாளடைவில் பெருகுங்கால், தம்முள் பலமொழி பேசும் கிளைகளாகப் பிரிவது இயல்பாகக் காண்கிறோம். தவிர பல மொழியுடைய சமுதாயங்கள் புதிதாக ஒரு பொதுமொழி மேற்கொண்டதாக யாண்டும் காண்டல் அரிது.

பழங்காலத்தில் தமிழ் ஒன்றே பேசிய திராவிடர், பின் தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய பல்வேறு மொழி பேசும் கிளைக்கூட்டமாகப் பிரிந்து வாழ்ந்து வருதல், உண்மை வரலாறு உணர்ந்த நமக்குக் கண்கூடு.

அதுபோலவே முதலில் ஆரியப் பிராகிருதமும் பாலியும் பேசிய வடநாட்டார் பின் பதினெட்டுக்கு மேற்பட்ட இலக்கிய முடைய வெவ்வேறு மொழி பேசுபவராய் மாறினதும் நாம் அறிவோம். பழம் பாரசீகம், இடைக்காலச் சீனம், துருக்கி, தற்கால உருசிய அய்க்கியக் குடியரசு முதலிய வல்லரசுகளில் எல்லாம் என்றும் பலவேறு மொழிகளைத் தனித்தனியே பேசிவரும் உரிமை மறுக்கப்படாமலும், பொதுமொழி எதுவும் சுமத்தப்படாமலும், பல நூற்றாண்டுகளாக அரசியல் குலையாமல் நடைபெற்றுள்ள உண்மை காணும் நாம், தொன்று தொட்டே அய்ம்பதுக்கு மேற்பட்ட பல மொழிகள் வளர்ந்து பெருகிய நம் நாட்டில் இன்று ஒரு புது மொழியைப் பொது மொழியாக்கி ஆக்கம் வளர்த்தல் எளிது, இயல்வது, இன்றியமையாதது எனக் கருதுதல் அறிவாண்மையா அல்லது. ஆணவமா? நிதானியுங்கள். இந்தியால் தமிழ் கெடும்

இந்தியால் தமிழ் கெடாது எனப் பறையடிப்போர் மொழிபற்றிப் பேச இந்தியை எதிர்க்கும் தமிழர் எல்லாரையும் விட என்ன சிறப்புரிமை உடையவர் ஆவார்? இந்தி யால் தமிழ் கெடாது எனச் சொல்லுபவரே ஆங்கிலத்தால் தமிழ் இழந்த நிலையையும் அடைந்த கோட்டையும் ஒப்புக் கொள்ளுவர். தமிழ் ஆரியத்தால் கெட்டு மலையாளமானது போல் இந்தியால் நொந்து வடநாட்டுப் பெரியம்மை வார்த்து உருமாறும் ; இலக்கணக் கட்டழிந்து தட்டழியும்... சுருங்கச் சொல்லின் தமிழ் தன் உயிர் இழந்து இந்தி மயமாக மாறும்.

இனி, இலக்கியமற்ற புதிய இந்தியால் தண்டமிழ் வளரும் என்பர் சிலர். வறுமையால் செல்வம் வளருமாயின் தமிழ் இந்தியால் தழைத்தல் கூடும். இந்திச்சுமை நலம் எதுவும் தராது; எல்லா ஏதமும் விளைக்கும். தன்னொடு எவ்வித இயையும் தொடர்புமற்ற பிற மொழியைக் கட்டாயமாக்கிச் சுமத்தினால், அச்சுமை தாங்கும் சமுதாயம் தன் நிலை குன்றிப் பிறிது நலமும் ஏற்க முடியாமல் நோவுற்று அழிவது உறுதி.

வழி வகுக்க

ஆதலால், இன்று கூட்டத்தில் வந்துள்ள பெரியார் பலரும் உளங்கலந்து பேசி நம்மவருக்கு உண்மை நலமும் குறையா முற்றுரிமையும் பேணி வளர்க்கும் வழிகளையும் ஆராய்ந்து வகுத்திடுக. ஊர்தோறும் தமிழர் ஒற்றுமை பெருக்க இன்றியமையாத கட்டுப்பாடுகளை ஏற்படுத்தித் தெருவெல்லாம் தமிழ் முழங்கச் செய்க. தமிழும் தமிழகமும் தலை நின்று ஓங்கி வீறுபெறுக.

# 7. மங்கைமார் போர் முரசு !

(தமிழ்ப் போரில் எங்களுக்கும் பங்குண்டு' என்று செந்தமிழ் நாட்டு வீராங்கனைகள் செய்த பெருமுழக்கமும், தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாட்டு நிகழ்ச்சி முறையும், மங்கைமார் சிறைபுகுந்த வரலாறும் பிறவும் இங்கே தரப்படு கின்றன.)

வீரத்தாய்

அவள் ஒரு வீரத்தாய். அஞ்சாத நெஞ்சு படைத்த வள் அவள். அச்சம் என்பது இன்னது என்றே அறியாத உள்ளத் திண்மை வாய்ந்தவள்.

தன் நாடு திருநாடு — அது சிறப்புடன் வாழ வேண்டும் என்பதே அவளுடைய முடிவு. அதற்கு எத்தகைய தியாகத்தையும் செய்ய அவள் தயாராய் இருந்தாள். அவளுடைய நாட்டின் மீது நாட்டம் கொண்ட பகைவர் அந்நாட்டைத் தம் நாடாக்கிக் கொள்ள எண்ணி அதன் மீது படை எடுத்தனர். போர் மூண்டது. முந்தா நாள் போராட்டத்திற்கு அவள் தன் அண்ணனை அனுப்பி இருந்தாள் அன்புடன். அன்றைய போரில் அவன் இறந்தான். அவள் வருந்தவில்லை . என் நாடு காக்க — என் அண்ணன் பலியானான் என்றே மனம் களித்தாள்.

சங்கக்காலத் தமிழகம்

நேற்று மறுபடியும் போர் முரசு ஒலிக்கக் கேட்டாள். கேட்டு முடிப்பதற்குள் அவள் கணவன் அங்கு வந்தான் . கேட்டாயோ ஒரு சேதி என்றான் அவன். என்ன என்றாள் இவள், போர்க்களம் அழைக்கிறது. என் நாடு அழைக்கிறது; இன்பத் தமிழ்நாடு அழைக்கிறது ! நான் செல்வேன்" என்றான் அவன்.

காதலரே சென்று வாரீர் என்று முகத்தில் களிப்புக் கூத்தாட அவள் சொன்னாள்; அவன் சென்றான் போர் அரங்கு அவனை விழுங்கிவிட்டது. என் நாட்டுப் போருக்கு அண்ணனை நேற்றுத் தந்தேன் , அன்பனை இன்று தந்தேன்" என்று எக்காளமிட்டாள் மங்கை. இன்று மீண்டும் போர் முரசு ஒலிக்கிறது ! கேட்டாள், நெஞ்சங் களித்தாள், தன் ஒரு மகனை அழைத்தாள், சின்னஞ்சிறுவன் அவன் — அவனுக்குத் தலைவாரிப் பூச்சூடிப் புத்தாடை புனைவித்தாள். போர்க்களம் நோக்கிச் செல்க" என விடுத்தாள். (* கெடுக சிந்தை கடிதிவள் துணிவே' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாட்டு.)

முன்னாள் போராட்டத்தில் தன் முன்னவனை இழந் தாள். நேற்றைய போராட்டத்தில் தன் துணைவனையும் இழந்தாள் — இன்றைக்கும் போர் ! இன்றைக்குத் தன் மகனை — தன்னுடைய ஒரே மகனை — போர்க்களம் அனுப்பி னாள் ! என்ன வைர நெஞ்சம் அவளுக்கு!

அவள் தமிழ் நாட்டுச் சேய்தான். ஈராயிரம் ஆண்டு கட்கு முன்னே வாழ்ந்தவள் ; புறநானூற்றுக் காலத்தவள்.

அன்றும் இன்றும்

அன்று தமிழ்நாட்டுப் போர். இன்று தமிழ்மொழிப் போர். அது புறநானூற்றுக்காலம். இது இந்தி எதிர்ப்புக் காலம் . ஆனால், அன்றைக்கிருந்த வீராங்கனைகள் இன்றைக்கும் உண்டு என்பதை எடுத்துக்காட்டி விட்டது. இந்திப்போரில் மங்கைமார் கொட்டிய போர்முரசு !

மங்கைமார் முரசு கொட்டுகின்றார்

13—11—38! பிற்பகல் ஒரு மணிக்குச் சென்னை பெத்து நாயக்கன் பேட்டையிலிருந்து ஊர்வலம். தமிழகத்துப் பெண்டிர்குலம் என்றைக்கும் பெருமைப் படக்கூடிய ஊர்வலம். . ஆயிரமாயிரம் வீராங்கனைகள் தமிழ்க் கடலெனத் திரண்டு கூடி "வீரத் தமிழ்நாடு எம் நாடு' என்று — முழங்கிய ஊர்வலம் . தோழியர் திருவரங்க நீலாம்பிகையம்மையார், டாக்டர் தருமாம்பாள் அம்மையார் , நாவலாசிரியர் மூவலூர் இராமாமிர்தத்தம்மையார், பண்டிதை நாராயணி அம்மையார் இன்னபிறர் முன் செல்ல மங்கைமார் பெருங்கூட்டம் இந்தி ஒழிக" என ஒலிக்க, "பெண்களெல்லாம் விழித்துவிட்டார் ! இனி என்ன அச்சம்! இந்தி போயிற்று இன்றோடு " என்று சொன்னவண்ணம் தமிழ்க்காளைகள் ஒரு பால் வர, இத்தனையுங் கண்டு அடங்காத பெருமகிழ்ச்சி கொண்டு தலைவர் ஈ. வெ. ரா. உடன் செல்ல, சென்றது ஊர்வலம். வான்வெளி தமிழ் வெளி ஆயிற்று. அந்த அளவுக்குத் தமிழ் முழக்கம் எழும்பிற்று. அனைவர் கையிலும் தமிழ்க்கொடி , அனைவர் வாயிலும் பாரதிதாசன் பண். "நமதென்று நாட்டடா நந்தமிழ்ப் பொன்னாடு , நரிகளுக்கு இங்கில்லை வேலை" என்று தான் எல்லோரும் கூவினர்.

சென்றது ஊர்வலம். சேர்ந்தது ஒற்றைவாடை நாடகக் கொட்டகையை . அன்று அங்கு தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாடு , அய்யாயிரம் பெண்கள். ஏராளமான ஆடவர்கள். உள்ளும் புறமும் பெருங்கூட்டம். கொட்டகை முழுதும் அழகிய ஒப்பனைகள், வாழைமரங்கள், வளைவுகள், வரவேற்புச் சிறப்புக்கள், வாழ்த்தொலிகள் ! மூலைக்கு மூலை தமிழ்க் கொடிகள் கூத்தாடின. திடீர் திடீரென்று பெரியார் வாழ்க" என்னும் பேரொலி . தமிழர் வரலாற்றிலேயே அன்றுவரை அத்தகைய மாநாடு இருந்ததில்லை. தமிழ் நாட்டு வரலாற்றில் அது ஒரு புது அத்தியாயம்.

மாநாடு கூடுகிறது

தோழியர் மீனாம்பாள் சிவ அரசு தமிழ்க்கொடி உயர்தினார். கொடி உயர்ந்தது போல் தமிழர் வாழ்வும் நாகரிக மும் உயர வேண்டுமென அன்னைமார் அனைவரும் வாழ்த்தினர். பண்டிதை நாராயணி அம்மையார் மாநாட்டைத் திறந்துவைத்தார். இந்தியை வீழ்த்த எங்கட்கு வழி தெரியும் என்றும் சொல்லிவைத்தார். தோழியர் வ.பா. தாமரைக்கண்ணி அம்மையார் யாவர்க்கும் வரவேற்புக் கூறினார். பின், மறைமலை அடிகளாரின் திருமகள் தோழியர் நீலாம்பிகை அம்மையார் மாநாட்டிற்குத் தலைமை தாங்கித் தனித்தமிழ்ப்பேச்சு நிகழ்த்தினார். இடையே பெரியாரின் துணைவியார் காலஞ்சென்ற வீராங்கனை நாகம்மையார் படத்தைத் தோழியர் பார்வதி அம்மையார் திறந்து வைத்தார்.

மாநாட்டுத் தீர்மானங்கள்

பின்னர் மாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேறின. அவை இவை

(1) இந்தியாவில் இதுவரை தோன்றிய சீர்திருத்தத் தலைவர்களால் செய்ய இயலாமற்போன வேலைகளை நம் மாபெருந் தலைவர் ஈ. வெ. ரா. அவர்கள் செய்து வருவதாலும், தென்னாட்டில் அவருக்கு மேலாகவும் ஒப்பாகவும் நினைப்பதற்கு வேறு ஒருவரும் இல்லாமையானும் அவர் பெயரைச் சொல்லிலும் எழுத்திலும் வழங்கும் போது பெரியார் என்ற சிறப்புப் பெயரையே வழங்க வேண்டும்.* (1935—36 ஆண்டுகள் தொட்டே தலைவர் ஈ. வெ. ரா. வுக்கு இப் பெயர் வழங்கி வருகிறது. ஆனால் அப் போதெல்லாம் பெரியார் என்னும் சொல்லைவிட ஈ.வெ. ரா. என்னும் சொல்லே நிரம்ப வழக்கில் இருந்தது. இம் மாநாட்டுத் தீர்மானத்தின் பின் பெரியார் என்றே தமிழர் எல்லோரும் ஈ. வெ. ரா. வை அழைக்கத் தொடங்கினர். )

(2) மணவினைக் காலத்தில் புரோகிதர்களையும் வீண் ஆடம்பரச் செலவுகளையும் விலக்கிவிட வேண்டுமென்று இம் மாநாடு தீர்மானிக்கிறது.

(3) மற்ற நாடுகளைப் போலவே தமிழ் நாடும் ஒன்றுபட்டு ஒரு சமூகமாய் வாழ்வதற்கு இன்று பெருந்தடையாய் இருப்பது சாதி வேற்றுமையாதலால், இவ் வேற்றுமையை ஒழிப்பதற்கு இன்றியமையாத கலப்புமணத்தை இம்மாநாடு ஆதரிக்கிறது.

(4) கணவனை இழந்த கைம்பெண்களின் துயர் நீங்க மாதர் மறுமணத்தை இம் மாநாடு ஆதரிக்கிறது.

(5) தமிழ் நாட்டில் எல்லாப் பள்ளிகளிலும் தமிழ்மொழியைக் காட்டாய பாடமாக்க வேண்டுமென்று அரசினரை இம்மாநாடு கேட்டுக் கொள்வதுடன், தமிழ் நாட்டில் பிறமொழிகளைக் கட்டாயபாடமாக வைக்கும் முயற்சி தமிழுக்கு ஊறுபயக்குமாதலால் அது கூடாதெனவும் தீர்மானிக்கிறது.

(6) இந்தியை எதிர்த்துச் சிறை சென்ற தோழர்கள் செ.தெ. நாயகம், ஈழத்தடிகள், கே. எம். பால சுப்பிரமணியம், சி.என்.ஏ., அருணகிரி அடிகள் உள்ளிட்ட பெரியார்களையும் தொண்டர்களையும் இம்மாநாடு பாராட்டுகிறது; அவர்களுக்குத் தன் நன்றியைச் செலுத்துகிறது.

(7) தமிழ் நாட்டில் 100—க்கு 95 மக்கள் கண்ணிருந்தும் குருடராய் , தாய்மொழியில் கையெழுத்துப் போடவுந் தெரியாத நிலையில் இருக்கையில், சென்னை முதலமைச்சர் அதற்கு ஆவன செய்யாமல் இந்தியைக் கட்டாய பாடமாகச் செய்திருப்பதையும், அதனைக் கண்டிக்குமுகத்தான் தமிழ்நாட்டுப் பெருமக்களும் அறிஞர்களும் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் மாபெருங் கூட்டங்கள் கூட்டித் தெரிவித்தும், அதனைச் சிறிதும் பொருட்படுத்தாமல் பிடிவாதமாக இருப்பதையும், இதைப் பற்றித் தங்களுக்குள்ள மனக் கொதிப்பைக் காட்டும் முறையில் மறியல் செய்யும் தமிழர்களைச் சிறையில் அடைத்துக் கொடுமைப் படுத்துவதையும் இம் மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

(8) சென்னை புகைவண்டி நிலையத்தில் பீச், போர்ட், பார்க் என்று தமிழில் எழுதியுள்ளதை முறையே கடற்கரை, கோட்டை, தோட்டம் எனத்தமிழில் வழங்க வேண்டுமெனவும் அப்படியே பயணச் சீட்டுகளிலும் வழங்க வேண்டுமெனவும் அரசினரையும் இரயில்வே கம்பெனியையும் இம் மாநாடு வேண்டுகிறது.

(9) ஓரணா , நாலணா நிக்கல் நாணயங்களின் மதிப்பைக் குறித்திருப்பதில் ஏறத்தாழ 3 கோடி தொகை உள்ள தமிழ் மக்களுக்கு விளங்கும்படியாகத் தமிழிலும் குறிப்பிட வேண்டுமென அரசினரை இம் மாநாடு வேண்டுகிறது.

தீர்மானங்களை விளக்கி பண்டிதை கண்ணம்மாள், கலைமகள் அம்மையார், இராமாமிர்தத்தம்மையார், கமலாம் மாள், சிறுமி குஞ்சிதமணி நீலாயதாட்சி , ஆர். நாராயணி அம்மையார் , மலர்முகத்தம்மையார் (புலவர் மயிலை

முத்துக்குமாரசாமியார் தமக்கையார்), இராணி அம்மையார் (தளபதி அண்ணாதுரையின் துணைவியார்) முதலியோர் பேசினர்.

இது முடிந்ததும் பெரியார் ஈ.வெ.ரா. " தமிழ் மொழிக் குற்ற இடையூற்றைக் களைந்தெறிய வாருங்கள், தமிழ்நாடு உங்களை அழைக்கிறது" என்று பெண்டிர் குலத்திற்கு அன்பழைப்பு விடுத்தார். அத்துடன் மாநாடு முடிந்தது.

மாநாட்டு வாவேற்புத் தலைவர் வ. பா . தாமரைக்கண்ணியார் உரை :

வஞ்சியீர் வஞ்சியிடையீர் மறவேலான்

பஞ்சடி ஆயத்தீர் எல்லீரும் வம்மெல்லாம்

கொங்கையால் கூடல் பதிசிதைத்துக் கோவேந்தைச்

செஞ்சிலம்பால் வென்றாளைப் பாடுதும் வம்மெல்லாம்

தென்னவன் தன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்."

ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்குமுன் கண்ணகி என்னும் வீரத் தமிழ்ப் பெண் தனக்குத் தீங்கிழைத்த பாண்டிய அரசனையும் அவனது நகரத்தையும் தனது கற்பின் ஆற்றலால் அழித்துச் சோகம் அளாவிய முகத்தினளாய் வஞ்சி நாடு புகுந்தாள். அங்ஙனம் புகுந்த பத்தினிக் கடவுளைத் தொழுவதற்காக வஞ்சி மகளிர் தம் இனத் தவரைக் கூவி அழைத்த பாட்டுதான் இது. இதுபோல இன்று நம்மிடை ஒரு பெண் அடைக்கலம் புகுத்திருக் கின்றாள். அவள் நம்மை எல்லாம் பெற்ற தாய். நான் மேலே எடுத்துக்காட்டிய கண்ணகிக்கும் அவள் தான் தாய். இவ்வுலகத்துக்கே அவள் தான் முதல் தாய் என்று சொன்னா லும் குற்றமாகாது. இவ்வளவு வயது நிரம்பியும் அவள் தனது இளங்கன்னிக் கோலம் மாறாதிருக்கின்றாள். அவள் முகத்தில் அவலக்குறி தோன்றுகின்றது. அவளது திருக்கரங்களில் விலங்கு பூட்டப்பட்டிருக்கின்றது. அவளது கலை உரியப்பட்டிருக்கின்றது அவளது செம்பொன் போன்ற திருமேனியில் அம்மைத் தழும்புகளும் காய வடுக்களும் காணப்படுகின்றன. தாயாகிய அவளைக் காப்பது மக்களாகிய நமது கடமை அல்லவா? அவளுடைய கை விலங்கை உடைத் தெறியவும், அவளுடைய கலையைச் சீர்திருத்தி அவளுக்கு ஒப்பனை செய்யவும், உடம்பிலுள்ள மாசைத் துடைக்கவும் அன்னை மீர் விரைந்து வம்மின்.

என் அருமைச் சகோதரிகளே , நாம் இன்று கூடியுள்ள மாநாட்டைப்போல், தமிழ் நாட்டு வரலாற்றில் இதற்குமுன் வேறு எப்போதும் கூடியதில்லை என்று துணிந்து கூறுவேன். இம் மாநாட்டைக் கூட்டியதன் நோக்கம் தமிழர் சமூகம் அடியோடு மாண்டு போகாமல் காப்பதற்காகத் தமிழர்களை அவர்களுடைய பேருறக்கத்தினின்றும் சிறிது தட்டி எழுப்புவதில் நம்மாலான உதவியைச் செய்வது தான்.

தற்போதைய தமிழர்களின் சீர்கேடுற்ற நிலைமையை ஒரே வாக்கியத்தில் கூறவேண்டுமானால் தமிழர்கள் தங்களது சொந்த நாட்டில் உரிமை உணர்ச்சியுடன் தலை நிமிர்ந்து நடக்கமுடியாத நிலைமையில் இருக்கிறார்கள்' என்று சொல்லலாம். வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அவர் களுடைய உரிமைகள் பறிக்கப்பட்டிருக்கின்றன. நாலா பக்கங்களிலிருத்தும் அவர்கள் ஒடுக்கப் பட்டிருக்கிறார்கள். கண்ட பேர்களுக்கெல்லாம் அவர்கள் அடிமை ஆகிறார்கள்.

இதற்கெல்லாம் காரணம் தாய்க்கொலை செய்த பாவமே. தமிழர்கள் என்று தங்கள் தாய்மொழியாகிய தமிழைப் போற்றாமல் விட்டார்களோ அன்றே அவர்களுக்கு அடிமைத் தளை பூட்டப்பட்டுவிட்டது. தங்களுடைய பண்டைப் பெருமைகளை அவர்கள் மறந்துவிட்டார்கள். தங்களுக்கே உரிய கலை — பண்பு — நாகரிகம் முதலியவைகளை அறவே கைநழுவவிட்டுத் தமக்கு எவ்வாற்றானும் ஒவ்வாத பிறநாட்டுப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டு இன்னல் உறுகின்றனர். தமிழ்ச் சான்றோர்களையும் அவர்கள் இயற்றிய — இயற்றும் நூல்களையும் தமிழர்கள் பாராட்டுவ தில்லை. தங்கள் முன்னேற்றத்தைக் கருதி நடத்தப்படும் இயக்கங்களுக்கு ஆதரவளிக்காமல் தங்களுடைய அடிமை விலங்கைப் பின்னும் இறுக்குவதற்காக மாற்றார் செய்யும் வஞ்சனைச் சூழ்ச்சிகளில் சிக்கி அம் மாற்றாருக்குப் பொருளு தவி செய்கிறார்கள். இத்தகைய நிலையிலிருந்து நாம் விடுதலை பெறவேண்டுமானால், நமது தமிழ்த் தாயை அவளது பண்டைய அரியாசனத்தில் ஏற்ற வேண்டும். தமிழ்த்தாயை இழந்து நாம் வாழ்வது வாழ்வாகுமா? அன்றி வாழத்தான் முடியுமா?

நாம் நமது தாய்மொழியை விழிப்புடன் போற்றாத காரணத்தால், அதன் புனிதத் தன்மை கெட்டுவிட்டது. தமிழ் இலக்கணத்துக்கும் பண்புக்கும் ஒவ்வாத

அயல்மொழிச் சொற்கள் ஏராளமாக வந்து அதில் கலந்துவிட்டன. பட்டணத்துப் பால்காரர்கள் பாலில் தண்ணீரைக் கலப்பதில்லை யாம். தண்ணீரில் தான் பாலைக் கலப்பார்களாம். அது போல இக் காலத்தில் தமிழ் இலக்கண இலக்கியங்களை அரிதின் முயன்று கல்லாத சிலபேர் தமிழ் எழுத்தாளர்" என்று தம்மைச் சொல்லிக்கொண்டு எழுதும் விபரீத நடை யைப் பார்ப்பீர்களானால், அதில் எத்தனைச் சொற்கள் இருக்கின்றனவென்று விரல் விட்டு எண்ணிவிடலாம். ஒரு தமிழ்ச் சொல்லுக்குப் பதிலாக அயல் மொழிச் சொல்லொன்று வழக்குப் பெற்றால், அத்தமிழ்ச் சொல் வழக்கற்றுப்போகு மென்று உணர்வதற்கு மொழிநூற் புலமை வேண்டியதில்லை. சாதாரணப் பகுத்தறிவு இருந்தால் போதும். இம்மாதிரி எத்தனையோ அழகான பொருட்செறிவுள்ள தமிழ்ச் சொற்கள் அய்யோ இறந்து போய்விட்டன ! நம் உயிரை எல்லாம் கொடுத்தாலும் அவைகளை நாம் மீண்டும் பெற முடியாது. எடுத்துக்காட்டாக, ஞாயிறு என்றால் எல்லார்க்கும் தெரியாது, சூரியன் என்றால் தான் தெரியும் ; திங்கள் என்றால் தெரியாது, சந்திரன் என்றால் தான் தெரியும்; ஆண்டு என்றால் தெரியாது, வருஷம் என்றால் தான் தெரியும் ; அய்யாறப்பன் அல்ல, பஞ்சந்திஈஸ்வரன்தான்; பேறு அல்ல பாக்கியம் தான் ; பொருட்செறிவு அல்ல, அர்த்தபுஷ்டிதான்; நோக்கு அல்ல திருஷ்டிதான் — இப்படியே எவ்வளவு வேண் டுமானாலும் அடுக்கிக்கொண்டே போகலாம்.

இது மட்டுமன்றித் தமிழ்ப் பண்புக்கு எவ்வாற்றானும் ஒவ்வாத சொற்றொடர்களும் மேற்சொன்ன 'எழுத்தாளர் களால் கையாளப்பட்டு வருகின்றன. சில மாதிரிகளைப் பாருங்கள் : பெருமை அடித்துக் கொள்ளுதல், என்ன ஸார்வாள், எங்கே போறையள், ஜிஞ்சாமிர்தமாக , தொபு கடீரென்று, தூம்தடாகா , கப்சிப், கப்சா, கமலா' ஸ் காதல், கச்சேரி காலட்சேபம், லேடீஸ் கிளப் — போதுமா இன்னும் வேண்டுமா? இப்படித் தமிழன்னையைப் பையப் பையச் சாகடிக்கும் இந்த எழுத்தாளர்கள் தான் உயிருள்ள தமிழ் நடை எழுதுபவர்களாகக் கருதப்படுகிறார்கள். எப்படி இருக்கிறது சங்கதி ? இதற்கு விமோசனமே இல்லையா?

இந்த நிலைமையில் இந்திச் சனியன் வேறு வந்து புகுந்தது. இவ்வளவு காலத்துக்குப் பிறகு, தமிழ் நாட்டுப் பாடசாலைகளில் சிறுவர்களுக்கு இந்தியைக் கட்டாய பாட மாக வைக்கக் கூடாதென்பதற்குரிய காரணங்களை

நான் சொல்லிக்கொண்டு போனால் அது கொல்லத் தெருவில் ஊசி விற்பதற்குச் சமானமாவதும் அல்லாமல் என்னைப் பித்துப் பிடித்தவளென்று நீங்களெல்லாம் ஏசுவீர்கள். இந்தி எதிர்ப்புப் பேச்சைக் கேட்டுக் கேட்டுக் காதெல்லாம் சலித்துப் போய்விட்டது ......

அன்னைமீர்! நீங்கள் யார், வாழையடி வாழையாக வந்த எந்தத் திருக்கூட்டத்தை நீங்கள் சேர்ந்தவர்கள் என்பவைகளைச் சிறிது சொல்லுவேன்.

பெண்கள் சுதந்திரர்களல்ல. எக் காலத்திலும் அவர்கள் பரதந்திரர்கள் தான். ஆகவே துறவு நெறியிற் செல்ல அவர்களுக்குத் தகுதி இல்லை" என்னும் வடநாட்டு நூலோரின் கொள்கையைப் பொய்ப்படுத்தி, தனது கட்டிளங் கன்னிப் பருவத்தில் ஓர் அரச குமரனுடைய உண்மைக் காதலையும் அற்பமென உதறித் தள்ளித் துறவு நெறி மேற்கொண்டு உலகத்துக்கு வழி காட்டிய மணி மேகலை உங்கள் இனத்தைச் சேர்ந்தவளே.

'Plain living and high thinking' என்னும் ஆங்கிலப் பழமொழிக்கு ஏற்ப எளிய வாழ்வு வாழ்ந்து உயர்ந்த குறிக் கோள்களைத் தாங்கித் தமிழ் நாடெங்கும் தமது புகழ்பரப்பிய அவ் வயார் தமிழ்த் தாயின் தவப் புதல்வியே.

தனது மகன் அன்று நடந்த போரில் புறமுதுகிட்டோடினான் என்று சிலர் சொல்லக்கேட்டு நிலை குலைந்து "அப்படியானால் அவனுக்குப் பாலூட்டிய இம் மார்பை அறுப்பேன்" என்று சினந்து வாளேந்திய கையளாய்ப் போர்க்களம் சென்று பார்க்கையில், அங்கே தனது மகன் மார்பகத்தில் புண்ணுடன் இறந்து வீழ்ந்து கிடப்பதைக் கண்டு ஈன்ற பொழுதினும் பெரிதுவந்த' ஒரு பெண்ணைப் பற்றியும் இன்னும் பல வீரத் தமிழ்த் தாய்மார்களைப் பற்றியும் நீங்கள் புறநானூறு முதலிய சங்க நூல்களில் தெரிந்து கொள்கிறீர்கள்.

அன்னை மீர் ! உங்கள் குலத்து முன்னோர்களைப் பற்றி நான் சிறிது சொன்ன அளவிலேயே உங்கள் முகத்தில் உள்ள சோர்வு நீங்குவதை நான் பார்க்கிறேன். அதற்குப் பதிலாக வீரக்களை தோன்றுகிறது. அன்றொரு நாள் நமது குலத் தலைவியாகிய கண்ணகி என்னும் வீரமாது தனது கணவனைக் கள்ளனென்று பாண்டியன் ஒறுத்தான் என்னும் செய்தியைக் கேட்டுப் பொங்கி எழுந்தாள். 'சான்றோரும் உண்டுகொல் சான்றோரும் உண்டுகொல்' என்று

அரற்றினாள். அவள் பொங்கி எழுந்ததன் பயன் என்ன ஆயிற்றென்பது உங்கட்குத் தெரியும்.

கண்ணகியைப் போல நாமும் சான்றோரும் உண்டு கொல் சான்றோரும் உண்டு கொல்; தெய்வமும் உண்டு கொல் தெய்வமும் உண்டுகொல்" என்று அரற்ற வேண்டிய காலம் வந்துவிட்டது. இன்று நமது தமிழ்த் தாய்க்குத் தீங்கு செய்யப்படுகிறது. எனவே, தமிழ்ப் பெண்குலத் துக்கே கேடு சூழப்படுகின்றது. இது கண்டு பொறாது நீங்கள் சீறி எழுந்தால் ........"

**தமிழறிஞர் திருவரங்க — நீலாம்பிகை அம்மையார் தலைமைப் பேருரை**

தமிழ் நாட்டில் ஆண்மக்களும், பெண்மக்களும் மிகுதியாய்ப் படிக்கும் இக் காலத்தில், நம் அருமைத் தாய் மொழியாகிய தமிழ்க் கல்வி மிகக் குறைந்த நிலையில் இருப்பதேன்? நம் பெண்பாலாரில் நூற்றுக்கு இரண்டொருவர் கூடத் தமிழிற் பெரும்புலமை வாய்ந்திருக்கக் காண்டல் அரிதினும் அரிதாய் இருப்பதேன் எனக் கேட்போ மாயின் இவ்வளவுக்கும் காரணம் தம் தாய்மொழிப் பற்றில்லாமையே என்றுதான் கூறல் வேண்டும்.

மேலும் பள்ளிக்கூடங்களில் நம் தாய்மொழிக் கல்வி மிகச் சிறிதளவாகவே கற்பிக்கப்படுகிறது. எவ்வாறெனில் ஆங்கிலமெனும் அயல் நாட்டு மொழியும், கணக்கும் , நிலநூல், நாட்டு வரலாறும், அறிவியல் நூலும், இயற்கைப் பாடமும், தைத்தலும் படமெழுதலும் என்ற எல்லாப் பாடங்களோடும் தமிழ் மிகச் சிறிதளவாகவே கற்பிக்கப்படுகிறது. பள்ளிக்கூடங்களில் தமிழைப் பல பாடங்களோடு பாடமாகப் படிக்க வேண்டியிருப்பதால் நம் பிள்ளைகள் அதனை நன்றாய்ப் படிக்க முடியாதவர்களாய் இருக்கிறார்கள். இவர்கள் இவ்வாறு பல பொருள்களையும் கற்பதால் ஒன்றையும் ஆய்ந்தோய்ந்து படிக்க முடியாமல் ஒரு துறையிலேனும் கல்வித்திறம் பெறுகின்றார்களில்லை.

அடிப்படை நன்றாகப் போடாத கடைக்காலின் மேல் பெரிய கட்டடம் நில்லாதது போல் தாய்மொழிக் கல்வியாகிய அடிப்படை இல்லாத நம் மாணவ மாணவிகளுக்கு மற்றக் கல்விகளெல்லாம் பயனளிப்பதும் மிக அரிதாய் இருக்கிறது.

நம் அருமைத் தமிழ்மொழியைப் பள்ளிக்கூடங்களில் நன்றாகப் படிக்க முடியாமல் ஆங்கிலம், கணக்கு முதலிய வற்றை வருந்திப் படித்துக்கொண்டு

தவிக்கும் இக்காலத்தில் நமக்கு அயல் நாடான வடநாட்டில் வழங்கும் பல மொழி களில் ஒரு மொழியான இந்தி மொழியைத் தமிழ்ப்பள்ளிக் கூடங்களில் பிள்ளைகட்குக் கட்டாய பாடமாகக் கற்பிக்கப் பட வேண்டுமென்று அரசியலார் திட்டமொன்று வருத்து, அதனைச் செயல் முறைக்கும் ஓரளவில் கொண்டு வந்திருக் கின்றார்கள்.

இந்தி இலக்கண இலக்கிய வரம்பில்லாதது ; எளிதாகப் படிக்க முடியாதது ; கடுமையான உரத்த ஓசையை உடை யது ; உயிர் மூச்சை மிகுதியாய் வெளியே கழிக்கக் கூடியது. தமிழ் மொழியோ இனிய ஓசையும் மூச்சுச் செட்டும் உடையது. இதனைப் படிக்கும் தமிழ்ப் பிள்ளைகளுக்கு இந்தி படிக்க முடியாது. தமிழ்ப் பிள்ளைகட்கு நம் அருமைத்தாய் மொழியாகிய தமிழையே இன்னும் கட்டாய பாடமாக வைக் காத நிலையில் அயல்நாட்டு மொழியாகிய இந்தியைக் கட்டாய பாடமாக்கலாமா? நம் தாய் உணவின்றி அழுது கொண்டிருக்கும்போது உணவு வேண்டாத மற்றொருத்தியை வலிந்து அழைத்துவந்து அவளுக்குச் சோறும் போட்டுக் கூறையும் கொடுப்பது போல், நம் தமிழ்த் தாய் தமிழுணவின் குறைவால் வருந்திக்கொண்டிருக்கும்போது அயல் நாட்டினளான இந்தி என்னும் பணிப்பெண்ணை வலிய அழைத்து வந்து கட்டாயமாக நுழைப்பதைத் தமிழ்த் தாயின் மக்களாகிய நாம் ஒவ்வொருவரும் எதிர்த்தல் வேண்டும்.

இந்தியின் சேர்க்கையால் தமிழுக்கும் தமிழர்க்கும் செழிப்பும் பெருநலமும் உண்டாகப் போகின்றனவென்று சிலர் கூறுகின்றார்கள், இஃதெவ்வாறோ ! தமிழுக்கும் இந்திக்கும் எவ்வகையிலேனும் தொடர்பு இருக்கின்றதா? ஒரு வகையிலும் இல்லையே. தமிழில் இல்லாத சிறப்பு இந்தி மொழியில் என்ன இருக்கின்றது? நாம் படிக்கத் தக்கன — அறியத்தக்கன ஏதும் இந்தி மொழியில் இல்லையே. தமிழ் செழிப்பில்லாத மொழியா? வடமொழி போல் பேசமுடி யாமல் இறந்து பட்ட மொழியா? எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக இமயமலை என்று சொல்லப்படும் பனிமலை யிலிருந்து கன்னியாகுமரி வரை நம் தமிழ் பரந்து உரிமை யாட்சி பெற்றிருந்தது. இப்போதும் அது கோடிக்கணக்கான தமிழ் மக்களால் பேசப்பட்டு வரும் உயிருள்ள மொழியாகும். இவ்வாறு குறைபாடின்றி எல்லாச் சிறப்புகளும் நிறைந்துள்ள நம் தமிழுக்கு இந்தியின் துணை ஒரு சிறிதும் வேண்டப்பட மாட்டாது.

இந்தியாவிலுள்ள பல்வேறு வகையான மக்கட் பிரிவின்ரும் ஒற்றுமையாக வாழ்வதற்கு இந்தி ஒரு பொதுமொழியாக வைக்கப்படல் வேண்டும் என்று கூறுகிறார்கள். வடநாட்டிலிருந்து வாணிபஞ் செய்தற்கு இந்தி மொழியாளர்கள் ஏராளமாக இங்கே வருகிறார்கள் . இச் சென்னை மாநகரில் மார்வாடிகள் என்னும் வடநாட்டினர் பலர் உண்டியல் கடை வைத்திருக்கிறார்கள். மிட்டாய் எனும் இனிப்புணவு விற்கும் லாலாக்கள் என்போரும் வடநாட்டினரே. பட்டாடை விற்கும் சேட்ஸ் என்று சொல்லப்படும் துணி வாணிபரும் வட நாட்டினரே. இவ்வாறு ஏராளமான வடநாட்டு மக்கள் தமிழ் நாட்டில் வந்து தமிழர்களோடு இருந்து வாழ்ந்து தான் வருகிறார்கள். தமிழும் நன்றாகப் பேசுகிறார்கள். இன்னும் அடிக்கடி வடநாட்டில் ஏற்படுகின்ற பஞ்சத்தால் பைராகிகள் போன்ற ஏழை எளியவர்கள் இங்கு பிழைக்க வருகின்றார்கள். இவ் வடநாட்டினர் எல்லாம் தொழின் முறையில் நம் தமிழர்களோடு பழக வருமுன் வடநாட்டிலிருந்தே நம் தமிழ் படித்துக்கொண்டு வருகிறார்களா? மலையாளத்தில் இருந்து தமிழ் நாட்டில் வந்து பிழைத்துவரும் மலையாளர்கள் தங்கள் நாட்டிலிருந்து தமிழ் படித்துக்கொண்டு வருகிறார்களா, இல்லையே ! இவர்கள் எல்லாம் தமிழ் மக்களோடு பழகப் பழகத் தாமாகவே தமிழ் பேசக் கற்றுக்கொள்கிறார்கள். மேலும் தமிழ் நாட்டவர்களில் மிகச் சிலரே வடநாடு செல்கின்றனர். அவர்களும் அம் மக்களோடு கலந்து பழகு முகத்தானே அம் மொழியைப் பேசத் தெரிந்துகொள்கின்றனர். ஆதலால் வடநாட்டின் உதவி சிறிதும் வேண்டாத தமிழ் மொழிக்கும் தமிழ் மக்கட்கும் இந்தி ஒரு சிறிதும் வேண்டப்படமாட்டாது என்பது நன்கு பெறப்படுகிறது அன்றோ ?

எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக நம் தமிழ் மக்கள் இரங்கூன் — ஆப்ரிக்கா — மலேயா முதலிய வேற்று நாடுகளுக்குச் சென்று வாணிபஞ்செய்து வருகின்றனர். இவர்களெல்லாம் அந்நாடுகளுக்குப் போகுமுன் அந்நாட்டு மொழிகளைக் கற்றுக்கொண்டு போகிறார்களா? இல்லையே!

வயிற்றுப் பிழைப்பைக் கருதிப் பிறநாடு போக விழை பவர்கள் வேண்டுமானால் அந் நாட்டு மொழிகளைக் கற்றுக் கொண்டு போகட்டும். ஏனையோரும் கட்டாயமாய்ப் படிப்பதேனோ?

ஆதலால் ஒரு நாட்டு மொழியை இன்னொரு நாட்டவர் கட்டாயமாகப் படிக்க வேண்டுமென்பது வீணான முடிபாகும். ஒரு சிலர்க்கு வேண்டும் மொழியைத் தமிழ் நாட்டில் உள்ள எல்லா மக்களும் ஒருங்கே கட்டாயமாகப் படிக்கவேண்டு மென்பது பொருந்தாத உரையேயாகும்."

அன்னைமார் சிறை செல்கிறார்.

14—11—38 : பெண்கள் சிறைவாழ்வு இன்று தொடங் கிற்று. பெத்து நாய்க்கன் பேட்டை காசி விசுவநாதர் கோயில் அருகிலிருந்து, டாக்டர் தருமாம்பாள் , தோழியர் இராமாமிர்தத்தம்மையார் , மலர்முகத்தம்மையார், பட்டம் மாள், சீதம்மாள் ஆகிய அய்ந்து தமிழ்வீரப் பெண்மணிகள் இந்து தியாலாஜிகல் பள்ளி நோக்கிப் புறப்பட்டனர் — இல்லை — சிறை நோக்கிப் புறப்பட்டனர். பத்தாயிரம் தமிழர் ஊர்வலமாய் உடன் சென்றனர். தாய்மார்கள் அய்வரும் தமிழ்க் கொடி பொறிக்கப்பட்ட தமிழ்க் கொடிச் சேலை அணிந்திருந்தனர் ; செந்தமிழைக் காப்பதற்குச் சேனை ஒன்று தேவை" என்ற பாரதிதாசனின் பண் பாடிக் கொண்டே சென்றனர். வழி நெடுக ஏராளமான மலர் மாலைகள் அவர்கட்கு இடப்பட்டன. ஊர்வலம் பள்ளியண்டை வந்ததும் கூட்டம் சமாளிக்க முடியாத அளவு பெருகிவிட்டது. போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் அங்கு வந்தனர்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவர் : (தாய்மார்களைப் பார்த்து, நீங்கள் இவ்விடம் விட்டுப் போங்கள்.

தாய்மார் : முடியாது; இந்தி ஒழியும் வரை நாங்கள் இந்த இடம் விட்டுப் போகமாட்டோம்.

போ . இ : அம்படியானால் உங்களைச் சிறைச்சாலை அழைக்குமே.

தாய்மார்: அழைக்கட்டுமே , அதற்குத்தானே நாங்களும் காத்துக் கொண்டிருக்கிறோம்.

உடனே அய்வரும் கைது செய்யப்பட்டனர். மக்கள் வாழ்த்தொலி செய்தனர்.

வழக்கு மன்றத்தில், தமிழ்நாட்டில் தமிழ் தழைக்க வேண்டும்; இந்தி ஒழிய வேண்டும்; இவை இரண்டே எங்கள் நோக்கம் என்று தாய்மார் அனைவரும் திட்டமாகக் கூறிவிட்டனர். நீதிபதி எவ்வளவோ கேட்டுக்கொண்டும் முன்வைத்த காலைப் பின்வைக்க அவர்கள் மறுத்துவிட்டனர். ஆறு வாரம் சிறை வாழ்வு

பெற்றனர். அதற்கு முன்னாள் வரை தமிழ்ப் போரில் சிறை புகுந்தோர் தொகை 417. அவர்கள் அனைவரும் ஆண்கள்.

14—11—38—ல் தாய்மார் அய்வர் சிறைபுகுந்தனர். 21—11—38—ல் எழுவர் சென்றனர். கிழமைதோறும் மேலும் மேலும் சிறை சென்ற வண்ணம் இருந்தனர். முதல் முறை சிறை சென்றோர் தவிர மற்றைபோர் யாவரும் ஆறு மாதம் சிறை வாழ்வு பெற்றனர்.

**மொழிப் போரில் சிறை புகுந்த வீராங்கனைகள்**

14—11—38—ல்

டாக்டர் தருமாம்பாள்

மூவலூர் நாவலாசிரியர். இராமாமிர்தத்தம்மையார், பட்டம்மாள் (திருவாரூர் பாவலர் பாலசுந்தரம் துணைவியார்).

மலர்முகத்தம்மையார் (சென்னை தமிழ்ப் புலவர் மயிலை முத்துக்குமாரசாமியார் தமக்கையார்.)

சீதம்மாள் (டாக்டர் தருமாம்பாள் மருமகள், மூன்று வயதுடைய மங்கையர்க்கரசி , ஒரு வயதுடைய நச்சினார்க் கினியன் என்ற குழந்தைகளுடன்.)

21—11—38—ல்

உண்ணாமுலையம்மையார் (முன்னாள் 'திராவிடன்" ஆசிரியர் புலவர் அருணகிரிநாதர் துணைவியார், தமிழரசி என்ற ஒரு வயது குழந்தையுடன்)

புவனேசுவரி அம்மையார் (தோழர் என். வி. நடராசன் துணைவியார், சோமசுந்தரம் என்ற இரண்டு வயது குழந்தையுடன்)

சிவசங்கரி (தோழர் டி.வி. முருகேசன் துணைவியார், லோக நாயகி என்ற இரு வயது குழந்தையுடன்)

சரோசனியம்மையார் (தோழர் தேவசுந்தரம் துணைவியார் , மார்த்தாண்டம் என்ற இரு வயது குழந்தையுடன்.)

கலைமகளம்மையார் (டாக்டர் சிற்சபையின் துணைவியார் ; டாக்டர் தருமாம்பாளின் மருமகள்.)

ஞானசுந்தரி அம்மையார் (விமலா என்ற இரண்டு வயது குழந்தையுடன்)

தனக்கோட்டி அம்மையார், சதுரங்கப்பட்டினம்.

28—11—38—ல்

இராசம்மாள் (பெல்லாரி திவான் பகதூர் கோபால்சாமி முதலியார் தமக்கை ; பண்டிதை நாராயணி அம்மையார் தாயார்.)

கமலம்மாள் (சேக்காடு தோழர் பாலசுப்பிரமணிய முதலியார் துணைவியார்)

சேக்காடு அங்கயற்கண்ணி அம்மையார்.

வேலூர் துளசிபாய் (பிராமணர்).

5—12—38—ல்

ஜெயலெட்சுமியம்மையார் (இந்திப் போரில் 18 மாதக் கடுங்காவல் பெற்ற சிந்தாதிரிப்பேட்டை சாமிநாதனின் சிறிய தாயார்)

12—12—38—ல்

ரோசம்மாள் (சிவாஜி என்னும் 2 வயது குழந்தையுடன்)

16—12—38—ல்

அம்பலூர் அபரஞ்சிதம்மாள் (குழந்தை இளங்கோவுடன்.)

அம்பலூர் கோவிந்தம்மாள்

— கனகாம்பாள்

ஆர். செல்லம்மாள்

9—1—39—ல்

சேலம் சேவகி அம்மாள் (இரு குழந்தைகளுடன்).

17—1—39—ல்

ஈரோடு ரங்கம்மாள்

சென்னை லலிதாம்பாள் (இரு குழந்தைகளுடன்).

23—1—39—ல்

எஸ். குப்பம்மாள் பிரகாசம்மாள்

சொக்கம்மாள்

பகவதி அம்மாள்

துளசிபாய்

ராஜேசுவரி அம்மாள்

குணபாக்கியம் அம்மாள்

கண்ணம்மாள் (இரு வயது குழந்தையுடன்).

லிஜ்ஜி அம்மாள்

கமலம்மாள் (கஜேந்திரன் என்ற குழந்தையுடன்)

30—1—39—ல்

சென்னை கல்யாணி அம்மாள்

6—2—39—ல்

மீனாட்சி அம்மாள்

முத்தம்மாள் (தன் குழந்தையுடன்)

அன்னம்மாள்

அமிர்தம்மாள்

பத்மாவதி அம்மாள்

17—2—39—ல்

சென்னை ஆர். நாராயணி அம்மையார் (பெரியாரைப் பதினைந்து நாள்களுக்குள் விடுதலை செய்க. இல்லையேல் மறியல் என்று முன் கூட்டி எச்சரிக்கை விடுத்து முதலமைச்சர் இல்லம் முன் மறியல் செய்து சிறை புகுந்தார்.)

20—2—39—ல்

பட்டம்மாள் (பாவலர் பாலசுந்தரம் துணைவியார், குழந்தை ஆலங்காட்டானுடன் ) இரண்டாம் முறை சிறை சென்றார்.

ஞானம் அம்மையார் (புலவர் மறை திருநாவுக்கரசு துணைவியார், அறிஞர் மறைமலையடிகளாரின் இளைய மருமகள் ; குழந்தை சிறையஞ்சானுடன்)

6—3—39—ல்

மலர்க்கொடி அம்மையார்

13—3—39—ல் —

இராசம்மாள் (திருவாரூர் தோழர் டி. என். இராமனின் தாயார்.)

சரோசனி அம்மையார் (மறை — மாணிக்கவாசகத்தின் துணைவியார், மறைமலை அடிகளாரின் மூத்த மருமகள் ; குழந்தை மறைக்காடனுடன்)

திருச்சி எபினேசம்மாள்

மாயவரம் ராஜாமணி அம்மாள்

26—6—39—ல்

நெய்வேலி தாயாரம்மாள், நாகை விசாலாட்சி அம்மாள்

17—7—39—ல்

11ஆவது சர்வாதிகாரி கந்தம் ரோசம்மாள்

குருவம்மாள் (சிறையில் உயிர் நீத்த வீரன் தாளமுத்து வின் துணைவியார்.)

காமாட்சியம்மாள்

ஜானகியம்மாள் (இராமாமிர்தம் என்ற குழந்தையுடன்)

சொர்ணம்மாள்

மருதம்மாள் (மீனாட்சி சுந்தரம், அம்சவேணி என்ற இரு குழந்தைகளுடன் )

வடிவாம்பாள் (அய்ந்து வயது குழந்தையுடன்)

மலர்க்கொடி யம்மையார். (இரண்டாம் முறை சிறைவாசம்).

லட்சுமி அம்மாள்

24—7—39—ல்

தாயாரம்மாள் (இரு குழந்தைகளுடன்)

21—8—39—ல்

12 ஆவது சர்வாதிகாரி கோபி மாரியம்மாள்

நெல்வேலி பொன்னம்மாள் (நெல்லைத் தமிழ்ப் புலவர் இராமநாதர் துணைவியார்)

தமிழ் அன்னை (8 வயது குழந்தையுடன்)

4—9—39—ல்

நாச்சியம்மாள் (இந்திப் போரில் முதல் முதல் சிறை சென்ற பல்லடம் தோழர் பொன்னுசாமியின் துணைவியார்;

நாகம்மாள் என்ற 10 மாத குழந்தையுடன்)

பூவாளூர் செல்லம்மாள்

ஈரோடு மீனாட்சியம்மாள் (மூன்று வயது இரத்தினம், ஒன்பது மாத நாகம்மாள் என்னும் குழந்தைகளுடன்)

அங்கமுத்து அம்மாள்

காஞ்சி இராசாமணி அம்மாள்.

இந்திப் போரில் சிறை சென்ற மங்கைமார் தொகை — 73 அவர்களுடன் சிறைசென்ற குழந்தைகள் தொகை —32.

# 8. சிந்தனைச் சிற்பி சிறையில் !

(தலைவர் ஈ. வெ. ரா. சிறைக்கு அழைக்கப்பட்ட வரலாறும், அவர்மீது தொடுக்கப்பட்ட வழக்கு விசாரிக்கப் பட்ட முறையும், அது காலை அவர் தந்த அழகிய அறிக்கையும், அவருக்கு அளிக்கப்பட்ட கொடுத்தீர்ப்பின் தன்மையும் , அறுபது ஆண்டு கடந்த அவ் ஆண்டகையைச் சிறைப் பிடித்த ஆச்சாரியார் ஆட்சியின் நெஞ்சுரத்தைக் கண்டித்து நாடெல்லாம் குமுறி எழுந்த வரலாறும், பல பத்திரிகைகள் அத்தீர்ப்புத் தகாது என்று தீட்டிய தலையங்கக் குறிப்புகளும், சென்னை , பெல்லாரி , கோவைச் சிறைகளில் அவர் வாடி வதைந்ததும், 'வீரத் தலைவரை விடுதலை செய்க" என்று தமிழ் மக்கள் ஒரு குரலில் எழுப்பிய பெரு மூழக்கும், பிறவும் இங்கே தரப்படுகின்றன .)

இந்தியை எதிர்த்து இளங்காளைகள் சிறை சென்றனர்; மங்கைமார் சிறை சென்றனர் ; தளபதிகள் பலர் சென்றனர்; தலைவர்கள் தாமும் ஒவ்வொருவராய்ச் சென்றனர்; சின்னஞ் சிறு குழந்தைகளும் தங்கள் அன்னைமார் உடன் சென்றன ; இறுதியில் பெரியாரும் சிறை புகுந்தார்.

சிறைக்கோட்டம், செந்தமிழ் வாணிகரை அழைத்தது; வழக்கறிஞரை அழைத்தது ; துறவியரை அழைத்தது ; பகுத்தறிவாளர்தமை அழைத்தது ; புலவரையும் அழைத் தது; இறுதியில் பெரியாருக்கும் அன்பழைப்பு அனுப்பி விட்டது.

— ஆம்! உம்மீது வழக்கு 5—12—38—ல் சென்னையில் நிகழும் ; வருக" என்று பெரியாருக்கு சம்மன்" அனுப்பி விட்டது.

வாழ்த்தொலி

அன்று காலை எழும்பூர் இரயிலடி தமிழ் மேடையாகி விட்டது. காலை 7 மணிக்குப் பெரியார் இரயிலை விட்டு இறங்கினார். இறங்கியதும் ஈ.வெ.ரா. வாழ்க என்று எழுந்த பெருமுழக்கம் புகைவண்டி நிலையத்தையே அதிரச் செய்து விட்டது. தமிழர் தலைவர் வாழ்க , திராவிடத் தந்தை வாழ்க, பகுத்தறிவுப் பெருநிதி வாழ்க, சுயமரியாதைச்சிங்கம் வாழ்க , ஆரியத்தை அடக்கவந்த எம் தலைவர் ஈ. வெ. ரா. வாழ்க என்று ஒன்றன்பின் ஒன்றாகக் கிளர்ந்தெழுந்த வாழ்த்தொலிகள் விண்ணைப் பிளந்தன. எப்பக்கம்

பார்த்தாலும் பெரியார் வாழ்க, பெரியார் வாழ்க என்னும் ஒரே ஒலி . அந்த ஒலி காற்றுடன் காற்றாய்க் கலந்து கலந்து எங்கெங்கும் கீதம் இசைத்தது.

ஊர்வலம்

வாழ்த்துக்குப் பின் ஊர்வலம், சிந்தாதிரிப்பேட்டை தோழர் இராகவலுவின் செஞ்சட்டைப் படை இராணுவ முறையில் அணிவகுத்து முன்னே செல்ல, சென்னை போலீஸ் கமிஷனர் — சப் இன்ஸ்பெக்டர்கள் — குதிரை மீதேறிய சார்ஜெண்டுகள் – 500 போலீஸ்காரர்கள் இத்தனைப் பேரும் சூழ்ந்துவர, மக்கள் கூட்டம் கடலெனத் திரண்டு பின்னே வர, இடையே 'கோச்' ஒன்றில் பெரியார் சிங்க ஏறுபோல் செம்மாந்த நோக்குடன் அமர்ந்துவர, ஊர்வலம் நகர்ந்தது. நகர்ந்து நகர்ந்து சென்றது.

ஆரவாரம்

காலை 11 மணிக்கு ஜார்ஜ் டவுன் 4ஆவது நீதிபதி தோழர் மாதவராவ் முன் வழக்குத் துவக்கம். காலை 10 மணிக்கே பெரியார் வந்துவிட்டார். வழக்கு மன்றத்தில் எல்லோரையும் விடாததால் ஏராளமான தமிழ் மக்கள் எதிரில் உள்ள கடற்கரை நெடுஞ்சாலையில் வழக்கின் முடிவை எதிர் நோக்கிக் காத்திருந்தனர். தலைவர் ஈ. வெ. ரா. வந்ததும் பெருங்களிப்புக் கொண்டு மிகுந்த ஆரவாரம் செய்தனர். தம்மை வாழ்விக்க வந்த பெருந்தகையைக் கண்டால் யாருக்குத்தான் மகிழ்ச்சி பொங்காது!

வரவேற்பு

காலையில் ரயிலடியிலும் பின்னர் வழக்கு மன்றத்திலும் வந்திருந்த பெருமக்கள் சர் பன்னீர் செல்வம் பார் — அட்—லா , திருச்சி விசுவநாதன், ஈ. வெ. கிருஷ்ணசாமி, ஜஸ்டிஸ் " ஆசிரியர் டி. ஏ. வி. நாதன் பி. ஏ., பி.எல்., நாகர்கோவில் சிதம்பரனார் பி. ஏ., பி.எல்., (இவர் மனோன்மணீயம் இயற்றிய பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் திருமகனார்) ஈரோடு வேணுகோபாலர் பி. ஏ . பி . எல்., திருப்பத்தூர் நகராண்மைக் கழகத்தலைவர் துரைசாமி நாயுடு , கௌரவ நீதிபதி சுப்பிரமணிய நாயுடு , நாராயணசாமி நாயுடு கார், சேலம் சித்தையன், "தமிழர் தலைவர் ' ஆசிரியர் சாமி சிதம்பரனார் , திருவொற்றியூர் சண்முகம், பாசுதேவர் பி.ஏ. பி.எல்., இன்ன பிறர்.

வழக்கு

வழக்கு மன்றத்தில் " அடிக்கும் மணிப்பொறி 11 அடித்தது. வழக்கும் தொடங்கிற்று. 117—7 (1) — இந்தச் சட்டப்படிதான் பெரியார் மீது வழக்கு. துவக்கத்திலேயே பெரியார் அவர்கள் தாம் எதிர் வழக்காடப் போவதில்லை என்றும், அந்த அறங்கூறு மன்றத்தில் நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கை தமக்கில்லை என்றும், சாட்சிகளை எதுவும் குறுக்கு விசாரணை செய்யப் போவதில்லை என்றும், செய்தாலும் உருவான பயன் ஏதும் கிட்டாது என்றும் தெள்ளத்தெளிய விளக்கிச் சொல்லிவிட்டார்.

சாட்சிகள்

அன்றைக்கு ஒரு சுருக்கெழுத்து இன்ஸ்பெக்டரும், இரு சுருக்கெழுத்து சப் இன்ஸ்பெக்டர்களும் சாட்சிகளாக விசாரிக்கப்பட்டனர். மறுநாள் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் விசாரிக்கப்பட்டார். மூவரும் 13—11—38—ல் கூடிய தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாட்டிலும் அடுத்த நாள் பெத்து நாய்க்கன் பேட்டையில் நடைபெற்ற பெண்கள் சிறை புகுந்த பாராட்டுக் கூட்டத்திலும் பேசுகையில் பெரியார் பெண்களைச் சிறை புகுமாறு தூண்டினார் என்று குறிப்பிட்டனர்.

இரண்டாம் நாள் 6—12—38 அன்று, வழக்கு விசாரணை முடிந்ததும் பெரியார் அவர்கள் தம்முடைய நிலையை நன்கு விளக்கி ஓர் அறிக்கையை விடுத்தார்.

அதில் சில பகுதிகள் :

"நான் சம்பந்தப்பட்டிருக்கும் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியானது காங்கிரசிற்கு விரோதமானது என்றும், காங்கிரஸ் கட்சியினரைக் கவிழ்ப்பதற்காக ஏற்பட்டது என்றும், பார்ப்பனத்து வேஷம் கொண்டதென்றும் கனம் முதல் மந்திரியாரே சட்டசபையிலும் பொதுக்கூட்டங்களிலும் தெரிவித்திருக்கிறார்."

"இந்த நீதிமன்றம் காங்கிரஸ் அமைச்சர்கள் நிர்வாகத்திற்கு உட்பட்டது."

தாங்களும் பார்ப்பன வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவை தவிர, இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை ஒழிக்க வேண்டுமென்பதில் காங்கிரஸ் மந்திரிகள் அதிதீவிர உணர்ச்சி கொண்டிருக்கிறார்கள். அது விஷயத்தில் நியாயம் அநியாயம் பார்க்க வேண்டியதில்லை என்றும், கையில் கிடைத்த ஆயுதத்தை எடுத்து உபயோகித்து ஒழித்தாக வேண்டும் என்றும், இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியைத் திடீரென்று வந்து புகுந்த திருடர்கட்கு ஒப்பிட்டும் கனம் முதல் மந்திரியார்

கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் பேசியிருக்கிறார். எனவே இந்தி எதிர்ப்பு விஷயமாய் மந்திரிகள் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகள் அடக்கு முறையே என்பது எனது சுருத்து. அடக்குமுறைக் காலத்தில் இம்மாதிரி நீதி மன்றங்களில் நியாயம் எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனம்."

"ஆதலால் இந்த நீதி மன்றத்து நியாயத்தில் — இந்த வழக்கில் எனக்கு நம்பிக்கையில்லை. எனவே, கோர்ட்டாரவர்கள் தாங்கள் திருப்தியடையும் வண்ணம் அல்லது மந்திரிமார்கள் திருப்தியடையும் வண்ணம் எவ்வளவு அதிகத் தண்டனையைக் கொடுக்க முடியுமோ அவைகளையும் பழி வாங்கும் உணர்ச்சி திருப்தியடையும் வரைக்கும் எவ்வளவு தாழ்ந்த வகுப்பு கொடுக்க உண்டோ அதையும் கொடுத்து இவ்வழக்கு விசாரணை நாடகத்தை முடித்துவிடும்படி வணக்கமாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

எவ்வளவு நியாயமான இலட்சியத்தை அடைய வேண்டுமானாலும் அதற்காகக் கஷ்ட, நஷ்டங்களடைதல் என்னும் விலை கொடுத்தே தீரவேண்டும். ஆதலால் அவ்வாறு வேண்டிக்கொள்ளுகிறேன்."

தீர்ப்பு

மாலை 4 மணி அளவில், நீதிபதி பெரியார் செய்த குற்றங்கள் இரண்டு என்று சொல்லி குற்றம் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் ஆண்டு கடுங்காவலும் ஓராயிரம் ரூபாய் அபராதமும் அபராதம் செலுத்தத் தவறினால் அவ்வாறு மாதத் தண்டனையும் விதித்தார். இரண்டு தண்டனைகளையும் ஒரே சமயத்தில் அனுபவிக்கவேண்டும் என்றும் விதித்தார். அபராதம் கட்டுவது என்பதுதான் பெரியார் அகராதியிலேயே இல்லையே ! ஆகவே அவர் மூன்றாண்டுக் கடுங்காவலை ஆண்டுகளில் அனுபவித்தாக வேண்டும். இதுதான் தீர்ப்பு .

பெரியார் மகிழ்ச்சி : பிறர் கலக்கம்

"நீதிபதியின் தீர்ப்பைக் கேட்டவுடன் பெரியார் மகிழ்ச்சியுடன் அதை வரவேற்றார். அன்றலர்ந்த செந் தாமரையினை நிகர்த்தது' அவர் முகம். ஆனால் அன்பர் பலரும் கண்ணீர் விட்டனர். சர் பன்னீர் செல்வம் போன்ற கலங்கா நெஞ்சினரும் கலங்கிவிட்டனர். அற மன்றத்திற்கு வெளியில், மழையையும் காற்றையும் கடுங்குளிரையும் பொருட்படுத்தாமல் கூக் காத்திருந்த பல்லாயிரக்கணக்கான மக்களும் பரிதவித்தனர்.

கொடுமை ! கொடுமை !!

பல்லாண்டுகளாக அரசியல் நடத்தியது நீதிக் கட்சி. அதன் மாபெருந் தலைவர் பெரியார். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர் . அறுபதாண்டு நிரம்பிய ஆண்டகை. எதிர்க் கட்சியின் தலைவர். எதிர்காலத்தில் அரசாங்கத்தை நடத்தும் உரிமை பெற்றவர். இவ்வொப்பற்ற பெரியார்க்குக் கடுந்தண்டனை கிடைத்தது கேட்டு நாடெல்லாம் அழுதன. (* "தமிழர் தலைவர் " பக்கம் 179—180.)

சிரித்த முகத்துடன் சிறைக் கோட்டத்திற்கு!

ஆனால் அந்த அஞ்சாத நெஞ்சன் — தமிழ் நாட்டுத் தனித்தலைவன் — வெஞ்சமர் தொடுப்பேன் செந்தமிழர் நலம் காப்பேன் என்று சூளுரைத்து, தமிழரை எல்லாம் ஒன்று திரட்டி, போர்க்களம் நோக்கிச் செல்க எனச் செலுத்திய ஆண்மையாளன் சிறிதும் கலங்கவில்லை. மூண்றாண்டு தானே , செல்வேன், மீண்டு வருவேன், வெற்றிகொள்வேன் , அஞ்சுவேன் அல்லேன் என்று வீர முழக்கம் புரிந்தது அந்த அடலேறு. சீறிப் போரிடும் இயல்புடைய அச்சிங்க ஏறு சிரித்த முகத்துடன் 6—12—38 அன்று சிறைக் கோட்டம் புகுந்தது. ஆம். பெரியார் சிறை புகுந்தார்.

சென்றுவிட்டார் எம் தலைவர்

கசிந்து கண்ணீர் மல்கிய சர் பன்னீர் செல்வனை, தம்மைத் தழுவிக்கொண்டு தாரை தாரையாய்க் கண்ணீர் விட்டழுத எட்டாவது சர்வாதிகாரி தோழர் சம்பந்தத்தை, (அமைச்சர் எஸ். இராமநாதனின் இளவல்,) இது தீர்ப்பா — எங்கள் தலைவனுக்கா — தகுமா என்று நெஞ்சம் துடிதுடித்துக் கூறிய தமிழ் மக்களை , குமுறும் உள்ளங்களை , கொந்தளிக்கும் நெஞ்சங்களை, முடியாது முடியாது, யாம் ஒப்பமாட்டோம்" என முழங்கும் காளைகளை அனைவரை யும் சமாதானம் செய்துவிட்டு எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டு, காலை 10 மணி முதல் மாலை 4 மணிவரை உணவுண்ணவேண்டுமே என்பதையும் மறந்து தெருவில் அமைதியாக அமர்ந்திருந்த ஆயிரமாயிரம் தமிழ்ப் பெரு மக் களுக்குத் தம் வணக்கத்தையும் கூறிப் போலீஸ் காரில் ஏறிக்கொண்டு அவர் சென்று விட்டார். என்று இனிக் காண்போம் அவரை !

கொம்பில் பழுத்த அந்தப் பொன் மேனியை , வெள்ளை வெளேரென்று வெள்ளிக் கால்கள் இறங்கிய அந்தச் சந்திர பிம்பத்தின் ஒளியை , கன்னியின் காதல் தவழும் அந்த சிம்மத்தின் தோற்றத்தை இன்னும் பதினெட்டு மாத காலத்திற்கு நாம் பார்க்கப் போவதில்லை. பெரியார் வாயிலிருந்து வெளிக்கிளம்பும் கொச்சைத் தமிழும் ஹாஸ்யப் பேச்சும் நம்மைப் பரவசப்படுத்தப்போவதில்லை. தளர்ந்த நரம்புகட்கு வீரமும், ஆறிய ரத்தத்திற்குச் சூடும், அவிந்த கண்கட்குப் பிரகாசமும், சுண்டிச் சோர்ந்த சரீரத்திற்குப் புத்துணர்ச்சியும் செலுத்துகின்ற அன்னாரது வீர கர்ஜனையை இனி எப்போது கேட்போமோ? யார் அறிவார் !* (நகரதூதன்.)

பெரியாருக்கு அளித்த தீர்ப்பைக் கேட்டுத் தமிழ்நாடு இப்படித்தான் குமுறிற்று. தமிழ்நாடு மட்டும் அன்றி ஆந்திர , மலையாள, கன்னட நாடுகளிலும் பம்பாய், டெல்லி, லாகூர், மராத்தா பகுதிகளிலும், கொழும்பு, சிங்கப்பூர், மலேயா, பினாங்கு முதலிய வேற்று நாடுகளிலும் "இது கொடிது, இது கொடிது!" என்னும் முழக்கம் வீறி எழுந்தது.

போதன் ஜோசப் கண்டனம்

பல பத்திரிகைகளிலும் இதுபற்றிய கண்டனங்கள் அப்போது எழுதப்பட்டன. தென்னாட்டு நவசக்தி, மெயில், எக்ஸ்பிரஸ் முதலியனவும், பூனா இதவாதா , கல்கத்தா ஸ்டார் ஆப் இந்தியா , அமிர்த பஜார், டெய்லி எக்ஸ்பிரஸ், அலகாபாத் லீடர்" , நாகபுரி மராட்டா" முதலியனவும் இந்தத் தீர்ப்பு அடாது என்று காரசாரமான தலையங்கங்கள் தீட்டின. சிறந்த பத்திரிகாசிரியரான போதன் ஜோசப், அப்போது சென்னை இந்தியன் எக்ஸ்பிரசில் எழுதிய ஆசிரியக் கட்டுரையில் இது காட்டு மிராண்டிக்காலத் தண்டனை (Barbarous treatment என்று குறிப்பிட்டிருந்தார்.

பல பத்திரிகைகளின் தாக்குதல்

ஆயிரம் ரூபாம் அபராதம் விதிப்பதை, காட்டு மிராண்டிக்காலத் தண்டனை என்றே நாம் கருதுகின்றோம். ஆங்கில நாட்டு வழக்கு மன்றங்களில் மிகக் கொடிய குற்றங்களுக்குக்கூட ஒரு சில பௌண்டுகளுக்கு மேல் அபராதம் விதிக்கப்படுவதே கிடையாது. தங்கள் அரசாங்கத்தை நடத்துவதற்காகத் தங்களுடைய அரசியல் எதிரிகளிடமிருந்து அபராதத் தொகை மூலம் பணம்

திரட்டி விடுவது என்று இந்த அரசாங்கத்தார் முடிவு செய்து கொண்டார்களா என்ன" என்று அவர் 7—12—38—ல் தீட்டி இருந்தார். நாயக்கர் அவர்கள் முதலமைச்சர் வீட்டின் முன் மறியல் செய்தாரா — இல்லை. எந்தச் சட்டத்தையாவது மீறினாரா — கிடையாது. பின் எதற்காக அவருக்கு இந்தக் கர்ண கடூரமான தண்டனை , " (Thundering sentence) என்று பம்பாய் சென்டினல் அப்போது கேட்டது. "தம் கொள்கைக்கு மாறுபட்டவர்கள் அகிம்சை முறையைக் கைக் கொண்டிருக்கும் போது அவர்கள் மீது மற்றொரு கொள்கையில் உறுதியுள்ளவர்கள் மிகக் கொடிய பாணங்களை ஏவுவது மிகவும் விசித்திரமானதென்றே நாங்கள் நினைக்கிறோம். மேலும் மேலும் அடர்ந்தெழுகின்ற அடக்கு முறைகளாலும், அந்த அடக்குமுறைகளுக்கு ஒரு சிலர் உள்ளாவதாலும், அத்தகைய சங்கடமான நிலைமைகள் ஏற்படுவதாலும் தான் மனித சமூகம் இதுவரையில் விடுதலை பெற்று வந்திருக்கிறது. இப்போதைய இந்த அடக்குமுறையும் இதே பயனைத்தான் தரும் என்பது உறுதி என்று கல்கத்தா டெய்லி எக்ஸ்பிரஸ்' எழுதி யிருந்தது.

ஆனந்த விகடன் "சர்டிபிகேட்"

பெரியாரைத் தூற்றுவதையே தன் பிறவி பயனாக எண்ணி இருக்கும் சென்னை ஆனந்த விகடன்' கூட இச் சமயத்தில் பெரியாரைப் பற்றிக்கொடுத்த நன்மதிப்பிதழ் இது : "அவரிடம் உயர்ந்த குணங்களும் சிறந்த ஆற்றல்களும் உண்டு என்பது வெளிப்படை. அவருடைய எளிய வாழ்வு முறையும் விருந்தோம்பும் குணமும் பிரசித்தி பெற்றவை. வாக்கு வன்மையிலும் வாதத் திறமையிலும் அவருக்கு இணையானவர் தமிழ்நாட்டில் இன்னொருவர் உண்டா என்பது சந்தேகம். எழுதுவதில் தான் என்ன? எழுத்துப் பிழைகள் இலக்கணப் பிழைகளுடன் எழுதினாலும் அவர் எழுதுவது நேரே வாசகர்களின் உள்ளத்தில் போய்த் தைக்கும் .... அவருடைய ஆப்த நண்பர் ஸ்ரீமான் இராச கோபாலாச்சாரியார் பிரதம மந்திரியாய் இருக்குங் காலத்தில் அவர் சிறைபுக நேர்ந்ததை விதியின் விளையாட்டு' என்று தான் சொல்லவேண்டும்"

திரு. வி. க . தேன் தமிழ்

சென்னை நவசக்தி இதழில் திரு. வி. கலியாண சுந்தரனார் 9—12—38—ல் தீட்டிய தலையங்கம் பல அரிய உண்மைகளை எடுத்துக் காட்டுவதாய் இருக்கிறது :

"6—12—38—ல் திரு. நாயக்கர் கடுங்காவல் தண்டனை ஏற்று சிறைக் கோட்டம் நண்ணினார். வெள்ளிய தாடி அசைய , மெலிந்த தோல் திரங்க, இரங்கிய கண்கள் ஒளிர, பரந்த முகம் மலர , கனிந்த முதுமை ஒழுக ஒழுகத் தாங்கிய தடியுடன் திரு நாயக்கர் சிறை புகுந்த காட்சி அவர்தம் பகைவர், நொதுமலர், நண்பர் எல்லார் உள்ளத்தையும் குழையச் செய்திருக்கும் என்பதில் அய்யமில்லை. முதுமைப் பருவம்! காவல் ! கடுங்காவல் ! அஃதும் ஓராண்டு! என்னே! இந் நிலையை உன்ன உன்ன உள்ளம் குழைகிறது. திரு. நாயக்கருடன் மிக நெருங்கிப் பழகிய சிலர் மந்திரிப் பதவியில் வீற்றிருக்கின்றனர். அவர் தம் மனமும் கசிந்தே இருக்கும். வயதின் முதிர்ச்சி எவரையும் அலமரச் செய்யும்.

சிறைக்கோட்டம் நாயக்கருக்குத் "தவக்கோட்டம்"

நண்பர் நாயக்கருக்குச் சிறைவாசம் பழையது; மிகப் பழையது ; புதியதன்று. முன்னே அவர் ஒரு ஒத்துழையாமையில் ஈடுபட்டும் தீண்டாமையை முன்னிட்டும் சம தர்மத்தைக் குறிக்கொண்டும் பலமுறை சிறை சென்றுள்ளனர். இம்முறை அவர் இந்தி எதிர்ப்புக் காரணமாகச் சிறை நுழைந்திருக்கின்றனர். சிறைக்கோட்டம் நாயக்கருக்கு ஒருவிதத் தவக்கோட்டம் ஆயது போலும்!

ஈ. வெ. ரா. வாழ்க்கை நுட்பங்கள்

சிறைப் பறவை' யாகிய இராமசாமி நாயக்கர் வரலாற்றை விரித்துக்கூற வேண்டுவதில்லை. அவர் தம் வரலாற்றில் அறியக்கிடக்கும் நுட்பங்கள் பல . சிறப்பாகக் குறிக்கத்தக்கன இடையறாச் சேவை, சமத்துவ நோக்கம், சுதந்திர உணர்ச்சி , நட்புரிமை , தாட்சண்யமின்மை, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாமை, அஞ்சாமை, ஊக்கம், சோர்வின்மை, சலிப்பின்மை, எடுத்த வினையை முடிக்கும் திறன், கரவு சூழ்ச்சியின்மை முதலியன. இவை அவர்தம் வாழ்வாக அரும்பி மலர்ந்து , காய்த்துக் கனிந்து நிற்கின்றன. இந் நீர்மைகள் திரு. நாயக்கரை அடிக்கடி சிறைபுகச் செய்கின்றன போலும் . .

சிங்க ஏறு சிறைக்கூடத்தில்!

முதுமைப் பருவத்திலும் திரு. நாயக்கர் தலை சாய்த்துப் படுக்கையில் கிடந்து காலங்கழித்தாரில்லை. அவர் தமிழ் நாட்டின் நானாபக்கமும் சுழன்று சுழன்று இரவு பகல் ஓயாது கர்ச்சனை செய்துவந்தார். ஓய்வு என்பதை அறியாது வீர

கர்ச்சனை புரிந்துவந்த கிழச்சிங்கம் இப்பொழுது ஓய்வு பெற்றிருக்கிறது. சிறையில் தலை நிமிர்ந்து கிடக்கிறது. திரு. நாயக்கர் சிறையில் வதிவதால் அவர்தம் செல்வாக்குக் குறையுமென்று மந்திரிசபை நினைக்குமாயின் அவர் நினைவு நாளடைவில் கனவாகவே முடியும். திரு. நாயக்கர்க்குச் செல்வாக்கு ஓங்கியே நிற்கிறது.

நண்பரே ! நாயக்கரே! தள்ளாத வயதில் சிறை புகுந்து இருக்கிறீர்! உம் வயது — உடல் நிலை — முதலிய வற்றை நினைந்து முதலமைச்சர் நும்மை விடுதலை செய் வாரென்று எதிர்பார்க்கிறோம்"

எங்கிருந்தெல்லாமோ எழுந்த பேரெதிர்ப்பால் பெரியார்க்கு விதிக்கப்பட்ட கருங்காவல் பின்னர் வெறும் காவலாலாயிற்று. 'சி' வகுப்பு 'பி' வகுப்பாயிற்று. இன்னும் பின்னே ஏ ' வகுப்பும் ஆயிற்று.

எங்கும் பெரியாரின் மூலமந்திரம்!

பெரியாரைச் சிறையில் வைத்தால் தமிழர் கிளர்ச்சி அடங்கிவிடும் என்று அரசாங்கத்தார் நினைத்தனர். அவர் நினைப்புப் பாழ்த்தது. பெரியாரின் வீர உரைகள் ஒவ்வொரு தமிழர் காதுகளிலும் ஒலித்துக் கொண்டே இருந்தன். அவர்கள் நெஞ்சத்தில் வீரக்கனலை எழுப்பிக் கொண்டே இருந்தன. பெரியார் தெளித்த விதைகள் எங்கும் செழித்து வளர்ந்தன ; ஒன்றேனும் பழுதுபடவில்லை . எங்கும் — பெரியாரின் மூலமந்திரம் வீறிட்டெழுந்தது. தமிழ்நாடு தமிழருக்கே என்பது அவர் தந்த மந்திரம்.

தமிழ்நாடு தமிழருக்கே !

இம் மந்திரத்தின் வல்லோசை வானைப் பிளந்தது. நாமிருக்கும் நாடு நமதென்பதறிந்தோம் — இது நமக்கே யுரிமையாம் என்பதுணர்ந்தோம்' என்னும் கவியின் கருத்துக் குதித்தெழுந்தது. தமிழ்நாடு தமிழருக்கே! தமிழ்நாடு தமிழருக்கே !! தமிழ்நாடு தமிழருக்கே !!! என்று தமிழ் மக்கள் வீர கர்ச்சனை செய்தனர்.

பெரியார் பிறந்தநாள் விழா

பெரியார் சிறைப்பட்ட சில நாள்களுக்குப் பின்னர், 1938 டிசம்பர் 18—ல் அவருடைய அறுபதாம் ஆண்டு விழா நாடெங்கும் நடைபெற்றது. பெரியார் பெயரால் அன்ன தானங்கள் ; பட ஊர்வலங்கள் ; பொதுக் கூட்டங்கள். தமிழ்

நாடெங்கும் மூலை முடுக்குகளிலும் பெரியார் விழா கொண்டாடப்பட்டது. அவர் புகழ் பேசப்பட்டது. அவர் தியாகத்தை மக்கள் உணர்ந்தனர். அவர்தம் உயர்ந்த கொள்கைகளை அறிந்தனர். இதன்மூலம் பெரியார் தொடங்கிய இயக்கத்திற்கும் பேராதரவு பெருகிற்று. இந்தி எதிர்ப்பு இயக்கம் உரம் பெற்றது. எங்கும் இந்தி ஒழிக ! தமிழ் வாழ்க ! பெரியார் வாழ்க ! அடக்குமுறை ஒழிக ! தமிழ்நாடு தமிழருக்கே !" என்ற ஒலிகள் தமிழர் உள்ளத்தினின்றும் எழுந்தன. ஓங்கி முழங்கி பெரியாரின் எதிரிகளின் நெஞ்சத்திற் பாய்ந்தன. சுருக்கெனத் தைத்தன. செய்வதறியாது திகைத்தனர் அன்னார். ஆனால் ஆரவாரித்தனர் தமிழர் "( தமிழர் தலைவர் ' பக்கம் 181—182.)

"நவசக்தி" நல்லுரை

'திரு நாயக்கர் சிறையில் அடைக்கப்பட்டால், கிளர்ச்சி அடங்கிவிடும் என்று அரசாங்கம் கருதி இருக்கலாம். திரு. நாயக்கர் சிறைக்கனுப்பப்பட்டார். கிளர்ச்சி எப்படி இருக்கிறது? இப்போது முதலமைச்சர் என் செய்தல் வேண்டும்? பிடிவாதம், கௌரவம் முதலியவற்றை விடுத்துத் திரு. நாயக்கரையும் மற்றையோரையும் விடுதலை செய்ய உளங் கொள்வாராக. திரு. நாயக்கரது அறுபதாம் ஆண்டு விழா வரும் ஞாயிறன்று வருகிறது. அன்று அவர் சிறையிலிருத்தல் காங்கிரஸ் அரசாங்கத்திற்கே இழுக்கு ஆகும். அவர்தம் அறுபதாம் ஆண்டு விழாவின் போது சிறையில் கிடக்குமாறு திரு. ஆச்சாரியார் பார்த்துக் கொண்டிருத்தல் அழகன்று.

திரு நாயக்கர் கர்மவீரர். சீர்திருத்தங்காரர், தேச பக்தர். அவர்தம் உழைப்பால் தமிழ்நாடு பலவழியிலும் ஊக்கமும் ஆக்கமும் பெற்றதை மறுப்பாரில்லை. திரு. ஆச்சாரியார் தம் பழைய நண்பதை விடுதலை செய்து அவர் தம் அறுபதாம் ஆண்டு விழாவில் கலந்து கொள்வாரென எதிர்பார்க்கிறோம்.

என்று நவசக்தியில் 16—12—38ல் திரு வி.கலியாண சுந்தரனார் தீட்டியிருந்தார். ஆனால் நவசக்தியின் நல்லுரையை ஆச்சாரியர் கேட்கவில்லை. எனவே தமிழரும் தம் போர்க் கோலத்தை மாற்றவில்லை

வேலூரில் கூட்டம்

1938 டிசம்பர் 26,27 இரண்டு நாளும் வடார்க்காடு வேலூரில் தமிழ் தமிழ் என்னும் ஒரே முழக்கம், யார் வாயிலும் அதே பேச்சு. அனைவர் நெஞ்சிலும் அதே எண்ணம். தமிழரின் ஏக தலைவராய் பெருங்குலத்துக்கொரு மணியாய் விளங்கிய பெரியார் உள்ளே தள்ளப்பட்டபின் தமிழர் மானத்தை, ரோஷத்தை பூர்வப் பெருமையைக் காப்பது யார் கடமை? அதோ போர் முழங்குது. வெற்றிப் பறை கொட்டுது. தமிழா கட்டடா வரித்து. குலுக்கடா புஜத்தை. முஷ்டியை இறுக்கிப் பிடித்து முன்கையைப் பார். இரத்தங் கொதிக்கும். நரம்பு புடைக்கும்.. (நகர தூதன் 11—12—38) என்னுஞ் சங்கநாதம் எங்கும் எழுந்த்து. வந்தனர் தமிழர் . கூடினர் ஒன்றாய். இட்டனர் இடிமுழக்கம். கிளப்பினர் வல்லோசை. பொடிப் பொடியாயிற்று ஆரியம்.

பெரியாரே எங்கள் தலைவர்

"பெரியாரைச் சிறைபிடித்து விட்டீர்கள். விட்டாலென்ன? அதனால் எங்கள் வீரம் குறைந்து போகுமோ! எங்கள் குருதியோட்டம் தடைப்படுமோ ! எங்கள் மூச்சு கோழை மூச்சு ஆகுமோ! நாங்கள் உரைத்த சூள் வீண் போகுமோ? என் கருதினீர் நீர்? எம் சிந்தனைச் சிற்பியைச் சிறைபிடித்தீர் . ஆனால் எங்கள் உள்ளத்தில் அவர் தீட்டிவிட்ட சிந்தனைச் சித்திரத்தை நீர் சிறைபிடித்தல் ஒல்லுமோ?" என்று தமிழரெல்லாம் கேட்டனர், ஆரிய வட்டாரத்தை நோக்கி. அங்கந்த வேலூரில் கூடிய அத்தனைப் பெரிய கூட்டமும் ஒரு குரலில் கூறிற்று "பெரியாரே எங்கள் தலைவர் " என்று.

முதல் நாள் சென்னை மாநிலப் பெண்கள் மாநாடு. அடுத்த நாள் நான்காவது தமிழர் மாநாடு . இரண்டு நாளும் ஊர்வலம் ; இரண்டு நாளும் தலைவர்கள் வீர உரை.

பெண்கள் மாநாட்டிற்குத் தலைவர் பண்டிதை நாராயணி அம்மையார். திறப்பாளர் தோழியர். வ.பா.தாமரைக்கண்ணி அம்மையார். கொடியேற்றுபவர் டாக்டர் தருமாம்பாள். வரவேற்பாளர் : தோழியர் பச்சம்மையார். நாகம்மை படத்திறப்பாளர் : தோழியர் பார்வதி அம்மையார்.

தமிழர் மாநாட்டிற்குத் தலைவர் சர் பன்னீர்செல்வம். திறப்பாளர் பேராசிரியர் பாரதியார். கொடி ஏற்றுபவர் ரூமாரராசா சர் முத்தையா, வரவேற்பாளர்

தமிழ்ப்பேராசி ரியர் காமக்கூர் சுந்தரனார், பெரியார் படத் திறப்பாளர் : முன்னாள் அமைச்சர் எஸ். முத்தையா.

நீதிக்கட்சியின் நிகரற்ற மாநாடு

இதன்பின் 29—30—31—ஆம் நாள்களில் சென்னையில் நீதிக்கட்சியின் 14 ஆவது மாநாடு கூடிற்று. இதன் தலைவராகப் பெரியார் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். ஆனால் சிறைக்குள் இருக்கிறார். அரசியல் மரியாதையைக் குறிக்கொண்டு கூட அவரை" அரசாங்கத்தார் விடுதலை செய்யவில்லை. இக்காரணத்தால் மாநாட்டின் புகழ் மேலோங்கிற்று. மாகாணம் எங்கும் உள்ள தமிழ் மக்கள் பிரதிநிதிகள் அனைவரும் கூடியிருந்தனர். நீதிக் கட்சியின் வரலாற்றில் இதுவே தலை சிறந்த மாநாடு!* (இது அந்த மாநாடு நடந்தவரைதான் உண்மை .! ஆனால் 1944—ல் சேலத்துப் பாசறையில் கூடிய 16 ஆவது மாநாடும் 1945—ல் திருச்சியில் கூடிய 17ஆவது மாநாடும் சென்னை மாநாட்டைவிடப் பலமடங்கு சிறந்த மாநாடு கேள்', தமிழருடைய எதிர்காலத்தையே சித்திரிக்கும், சிறப்புடைய மாநாடுகள்.) தமிழர் உரிமைப்போர் பற்றிய கிளர்ச்சி , பெரியார் , சிறைக் கோட்ட வாழ்வைப் பற்றிய நினைவு; ஆச்சாரியார் அடக்குமுறையில் வெறுப்பு இந்தியை எவ்வாற்றானும் ஒழித்தே தீர்வதென்னும் உறுதி ;) இவைகள் ஒவ்வொரு தமிழர் நெஞ்சத்திலும் பொங்கிக் கொண்டிருந்தன. மாநாட்டுத் தலைவர் பெரியார் — சிறைக்குள் இருந்தார். ஆயினும் தமிழர்கள் ஒவ்வொருவரும் பெரியார் போன்ற உறுதி கொண்டிருந்தனர் ; உணர்ச்சி பெற்றிருந்தனர். பெரியாரின் உருவச் சிலையைத் தேரில் வைத்து சிறையில் உறைவது போல் ஒப்பனை செய்யப்பட்டது. இது, ஊர்வலமாக மாநாட்டுப் பந்தலுக்குக் கொண்டுவரப்பட்டது. மாநாட்டுப் பந்தலில் பெரியார் உருவம் நாற்காலியில் வைக்கப்பட்டது. முறைப்படி தலைவரை முன் மொழிந்து வழிமொழிந்து நடக்க வேண்டிய சடங்குகள் நடந்தன. சர் பன்னீர்செல்வம் அவர்கள் பெரியாரால் சிறை செல்லுமுன்னமே எழுதப்பட்டிருந்த மாநாட்டு விரிவுரையைப் படித்தார்

தமிழர் உறுதி மொழி

பின்னர் மாநாட்டில் கூடியிருந்த மக்களனைவரும் எழுந்து நின்று "பெரியாரே எங்கள் மாபெரும் தலைவர் " என்று கடலோசை பின்னடைய ஒரே குரலில்

உரத்துக் கூறினர். பின்னர், கீழ்வரும் சொற்றொடர்களை முறையே தமிழிலும் தெலுங்கிலும் எல்லோரும் உறுதிமொழியாகக் கூறினார் :

எங்கள் மாபெருந் தலைவரே! உங்கள் உடல் சிறைப் படுத்தப்பட்டிருந்தாலும், உங்கள் வீரத் திரு உருவத்தின் முன் நாங்கள் அனைவரும் எழுந்து நின்று ஒன்று பட்டிருக்கிறோம். உங்கள் தலைமையில் நாங்கள் அனைவரும் தங்கள் சொல்வழி நின்று, கட்சிவளர , மக்கள் வாழ, நோக்கம் நிறைவேற , ஓயாது உழைத்து வெற்றிபெறுவோம் என உறுதி கூறுகிறோம்"

இவ்வுறுதி மொழி இன்றும் எல்லாத் தமிழர் உள்ளத்திலும் உரமாகப் பாய்ந்து ஊடுருவி நிற்கின்றது.

சிந்தனைச் சிற்பி சிறையில் !

சென்னை அய்லந்து மைதானத்தில் செந்தமிழர் வீர முழக்கம் எழுப்பிக் கொண்டிருந்த அதே நேரத்தில், அந்த மைதானத்துக்கருகில் உள்ள சிறைக் கோட்டத்தில் பெரியார், தமிழ் உலகத்தின் எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனைச் சித்திரங்களைத் தீட்டிக் கொண்டிருந்தார் — சிறைச்சாலை வழியாக ஊர்வலம் சென்றபோது எங்கள் தமிழ் வாழ்க தலைவர் ஈ. வெ. ரா. வாழ்க" என்று அந்தத் தெருவெல்லாம். தமிழ் முழக்கம் எழுந்தபோது — ஆயிரமாயிரம் தமிழர்கள் சிறை வீட்டுக்கு வெளியே செய்த பேரொலிகளை உள்ளிருந்து தலைவர் — பெரியார் கேட்டபோது, தமிழர் உணர்ச்சிப் பெருக்கைக் கண்டு அவர் எவ்வளவு மகிழ்ந்திருப்பார் தாம் வெளியே இருக்க முடியவில்லையே என்று. எவ்வளவு வருந்தியிருப்பார். அந்த வருத்தமும் மகிழ்ச்சியும், மாறி மாறி அவர் உள்ளத்தில் தோன்றுமே என்றெண்ணிய போது வெளியே இருந்த தமிழர். நெஞ்சு எவ்வளவு துடிதுடித்திருக்கும்! அவர்கள் உள்ளத்தில் என்னென்ன எண்ணங்கள் அலைமோதி இருக்குமோ யார் அறிவர்?

தலைவர் உடல் நலிவு

ஜனவரி இறுதியில் சிறையில் பெரியாருக்கு வயிற்று நோய் கண்டது. சிறை மருத்துவர் மருந்து தந்தார். நோய் தீரவில்லை . பிப்ரவரி , 4—ல் சென்னை பொது மருத்துவமனைக்குப் (General Hospital) பெரியார் மாற்றப் பட்டார். ஒரு வேளையே உணவு கொள்கிறார் — 10 பவுண்டு எடையில் குறைந்துவிட்டார் — மிக மெலிந்து போய்விட்டார். எக்ஸ்ரேயும் எடுக்கப்பட்டது.

வயிற்றுக் கோளாறு அதிகம் — முகம் சுண்டி விட்டது — உடல் நிறம் கருத்துவிட்டது — ஆரஞ்சுப்பழச் சாறும் சரியாகச் செரிப்பதில்லை — நோயால் துடிதுடித்து மருத்துவ மனையில் வாடி வதங்கும் அந்நிமையிலும் தமிழர் குலத்தின் தனித் தலைவனுக்குப் போலீஸ் காவல் — என்றெல்லாம் கேள்வியுற்றனர் தமிழர் . பொறுக்கவில்லை தமிழர் மனம் அது கேட்டு .

வீரத் தலைவரை விடுதலை செய்க , இன்றேல் மறியல்

எங்கெங்கும் பொதுக் கூட்டங்கூட்டி, தங்கள் உள்ளக் கொதிப்பைத் தெரிவித்தனர்; ஏராளமான ஊர்வலங்களில் வீரத் தலைவரை விடுதலை செய்க என்று முழங்கினர். கோவை, சேலம், திருப்பத்தூர், திருவண்ணாமலை நகர சபைகளில் 'பெரியாரைச் சிறை வைத்தது பெருந் தவறு, உடனே விடுவிக்க" என்னுந் தீர்மானம். சென்னை சட்ட சபை கூடும் போதெல்லாம், என்ன நிலையில் இருக்கின்றார் எம் தலைவர், ஏன் விடுவிக்கவில்லை இன்னும் ? தமிழர் நெஞ்சு ஒப்பாது இக் கொடுஞ்செயலை . எம் மன்னவனை விடுவித்திடுவீர்!" என்னுஞ் சர் பன்னீர் செல்வனின் வீர உரை. "எங்கே பெரியார்" இன்னுமா சிறையில், தகுமா இது?" என்று தமிழர் பத்திரிகையில் நாள்தோறும் குமுறல் . எம் வேந்தை எம்மிடம் தருவீர் என்று அமைச்சர் அவைக்குப் பறக்கும் தந்திகள் பல நூறு. பெரியார் சிறை வாசம் இன்றைக்குப் பத்தாம் நாள், இன்றைக்கு இருபதாம் நாள், இன்றைக்கு முப்பதாம் நாள் இன்னும் எத்தனை நாள்? என்று தமிழர் நாளெண்ணிக் கொண்டிருந்தனர். பெரியார் 1938 டிசம்பர் 6—ல் சிறைபுகுந்தார். ஜனவரி 5—ல், பிப்ரவரி 6—ல், மார்ச் 6—ல் ஏப்ரல் 6—ல் மே 6—ல் ஒவ்வொரு முறையும் அவர் சிறைபுகுந்த நாள் நாடெங்கும் கொண்டாடப்பட்டது. அந்த அய்ந்து நாளும் சென்னையில் கடற்கரைக் கூட்டங்கள். "பெரியாரை ஒரு கிழமைக்குள் விடுதலை செய்க. இல்லையேல் நான் முதலமைச்சர் இல்லம் முன் மறியல் செய்வேன்" என்று தோழியர் ஆர். நாராயணி அம்மையார் பிப்ரவரி 17—ல் சென்னை எழும்பூர் ஏரியில் கூடிய பெருங்கூட்டத்தில் இறுதி எச்சரிக்கை விடுத்தார். ஒரு கிழமை ஆனதும், பனகல் பூங்காவிலிருந்து பெருத்த ஊர்வலம் ஒன்று புறப்பட்டது. அது ஆச்சாரியார் இல்லம் முன் வந்ததும் தோழியர் நாராயணி அம்மையார் பெரியாரை விடுதலை செய்க!" என முழங்கினார். அதற்கும் கூட அச்சாரியார்

ஆட்சி ஆறு மாதம் தண்டனை தந்தது. பின்னே இன்னும் பலர் இவ்வண்ணம் சிறை சென்றனர்.

சேலத்திலும் போர்க்களம்

15—2—39: இன்று சேலம் நகராண்மைக்கழக உயர் நிலைப் பள்ளியில் இந்தி வீழ்க என முழக்கி, முழக்கிய குற்றத்திற்காக ஒரு வார தண்டனை பெற்றார் தோழர் பழனிசாமி அவர்கள். பின்னர் சில நாள்கள் வரை நாள்தோறும் சேலத்தில் தமிழர் பலர் மறியல் செய்து கைதான வண்ணம் இருந்தனர். பிப்ரவரி 27—ல் சேலம் சுயமரியாதைச் சங்கத்துச் செயலாளர் தோழர் வரதராசலு மறியல் செய்யத் தூண்டிய குற்றத் திற்காகச் சிறைப்பட்டார்.

பெல்லாரிக்குப் பெரியார்

16—2—39: வெப்பத்தின் உறைவிடமான பெல்லாரிச் சிறைக்குப் பெரியார் இன்று மாற்றப்பட்டார். இது மிக இரகசியமாக நடைபெற்றது. இன்று காலைவரை சிறை மாற்றம் உண்டென்று பெரியாருக்கே தெரியாதாம். இரு சார்ஜன்டுகள், இரு சப் இன்ஸ்பெக்டர்கள், இரு போலீஸ் காரர்கள் இவர்கள் புடைசூழ ஜோலார்பேட்டை பாசஞ்சர் மூலம் பெரியாரைச் சிறை மாற்றினாராம்.. எப்படியோ அவருக்கு இடப்பட்ட இரகசியத் திரையைக் கிழித்தெறிந்து விட்டு, அரக்கோணம் இரயிலடியில் இயக்கத்தோழர்கள் அவரைக் கண்டுவிட்டனர். வெப்பத்தால் வாடுகையில் தென்றல் வீசினாற்போல் நெஞ்சம் குளிர்ந்துவிட்டனர். பழமும் சிற்றுண்டியும் அவரை அருந்தச் செய்துவிட்டனர். அன்று தான் நல்ல உணவுண்டதாயும் இயக்கத் தோழர்கள் அனைவருக்கும் நன்றி என்றும் பெரியார் தெரிவித்தாராம். போர்த் தலைவரைக் கண்டு களிக்க சேனாவீரர்கள் திரள் திரளாய் வந்து குழுமினர். இது கண்டு அஞ்சிய போலீசார் பெரியாரை உடனே ரேணிகுண்டா பாசஞ்சரில் ரேணிகுண்டாவுக்கு அழைத்துச் சென்று பம்பாய் மெயிலில் பெல்லாரிக்குக் கொண்டுபோய் விட்டனராம்.

27—2—39: இன்று சிறந்த ஆங்கில எழுத்தாளரும் விடுதலை, ஜஸ்டிஸ்' இதழ்களின் முன்னாள் ஆசிரியரும் ஆகிய தோழர் டி.ஏ.வி. நாதன் பி.ஏ., பி.எல்., இந்து தியாலாஜிகல் பள்ளி முன் மறியல் செய்து சிறை புகுந்தார். ஆறு திங்கள் வெறுங்காவல் அவருக்கு , இதே தினத்தில் தான் —

சிறையிலிருந்த பெரியாரின் கார்' (ரூபாய் 4000 பெறுமானமுள்ளது) அரசியலாரால் பறிமுதல் செய்யப்பட்டது. தக்க காரணம் தரப்படவில்லை .

12—3—39 : இன்று மதுரை மாவட்டத் தமிழர் மாநாடு 'பெரியாரை விடுவிக்க" என்று முழங்கிற்று. கான்பகதூர் கலிபுல்லா மாநாட்டுத் தலைவர். பெரியார் படத்தைப் பாண்டியனார் திறந்துவைத்தார்.

சென்னை சர்வாதிகாரிகள்

13—3—39 : இன்று இந்தி எதிர்ப்பு எட்டாவது சர்வாதிகாரி தோழர் சம்பந்தம் கைதானார். அறுமாத வெறுங்காவல் அவர் அடைந்த தண்டனை. முதல் சர்வாதிகாரி நாயகம் 3—6—38—ல் கைதானார். அதன்பின் தோழர்கள் ஈழத்தடிகள் பி.ஏ., கே. எம். பாலசுப்பிரமணியம் பி.ஏ., பி.எல்., ஜி.என் ராஜு, குடந்தை எஸ். கே. சாமி, எம். எஸ். மொய்தீன், புவனகிரி நமசிவாயம் ஆகியோர் முறையே 2,3,4,5,6,7 ஆவது சர்வாதிகாரிகளாக நியமிக்கப்பட்டு ஒருவர்பின் ஒருவராகக் கைதாயினர். இன்று 8 ஆவது சர்வாதிகாரி கைதானார். 9 ஆவது சர்வாதிகாரி காஞ்சி பரவஸ்து ஆச்சாரி யார் 27—3—39—லும் , 10 ஆவது சர்வாதிகாரி பெரியகுளம் தோழர் அரங்கசாமி 4—4—39—லும் 11 ஆவது சர்வாதிகாரி தோழியர் கந்தம் ரோசம்மையார் 17—7—39—லும் கைதாயினர். 12 ஆவது சர்வாதிகாரி — தோழியர் டி. என். மாரியம்மாள் 13 ஆவது சர்வாதிகாரி — நெல்லை வலவர் இராமநாதர்

14—3—39: இன்று சிறை அமைச்சர் டாக்டர் சுப்பராயன், தமது பழைய அரசியல் குருவாகிய பெரியார். இராமசாமியைப் பெல்லாரிச் சிறையில் கண்டு நலம் விசாரித்தார்.

15—3—39: இன்று பெரியார் சிறை புகுந்த நூறாம் நாள். இந்நாள் பல இடங்களிலும் கொண்டாடப்பட்டது.

சர் செல்வம் — பெரியார் சந்திப்பு

24—3—39:சர் பன்னீர்செல்வமும் தோழர் — விசுவநாதனும் இன்று பெல்லாரி சென்று சிறையில் வதியும் பெரியாரைக் கண்டு, அவர் இருக்கும் நிலை கண்டு துடி துடிக்கும் நெஞ்சத்துடன் வெளிவந்தனர். பெரியாருக்கு அளிக்க அவர்கள் எடுத்துச் சென்ற திராட்சைப் பழங்களும் கூட அவரிடம் தர மறுக்கப்பட்டதாம்.

சிறைத் தண்டனை பெற்றவர்களை மேலும் தண்டிக்கும் சிறை பெல்லாரி என்று அவர்களிடம் பெரியார் குறிப்பிட்டார்

கடற்கரையில் கலங்கா நெஞ்சங்கள்

26—3—39: திருவல்லிக்கேணிக் கடலோரத்தில் இன்று பிரம்மாண்டமான கூட்டம் ; இலட்சத்து அய்ம்பதினாயிரவர் கூட்டம் ; வற்றாத வெள்ளக்காடு போல் திரண்ட பெருங்கூட்டம் ; எத்துணைப் பெரிய கூட்டம் என்று எதிரிகளை எண்ணி எண்ணி ஏங்க வைத்த கூட்டம் ; மாலை 3 மணிக்குத் துவங்கி நள்ளிரவு 2மணிக்கு முடிந்த கூட்டம். இன்பத் திராவிடம் இதுவரை — கண்டறியாத தனிச் சிறப்புடைய கூட்டம். அண்ணல் காந்தியாரின் சட்டமறுப்பு இயக்க காலத்தில் கூட இத்தகைய கூட்டம் கூடியதில்லையே என்று இரண்டொரு ஆரிய ஏடுகள் தம்மையும் மறந்து இன்று எழுதிவிட்டன. ஒரு நாள் ஒரு பொழுதாகிலும் உண்மை சொல்லவேண்டு மல்லவா?

எத்துணைப் பெரிய கூட்டம்

ஏராளமானவர்கள் அன்று உணவு மூட்டையுடன் வந்துவிட்டனர். இரவு 9 மணி அளவில், பலர் பேச்சைக் கேட்டுக் கொண்டே உணவையும் உண்டு கொண்டிருந்தனர். இரண்டும் ஒரே காலத்தில் நடந்தன. உணவு கொள்வதற்காகப் பேச்சைவிட்டுப் போக அவர்கள் உள்ளம் ஒப்பவில்லை .

எவ்வளவு அழகிய காட்சி !!

வந்திருந்த இஸ்லாமிய நண்பர்கள் ஆண்டவனை வழிபடும் நேரம் இடை இடையே வந்தபோது, மேற்குப் பக்கம் நோக்கி அவனை வழிபட்டுக் கொண்டே கிழக்குத் திக்கு நோக்கிப் பேச்சினையும் செவிமடுத்தனர். கடலோசையும் தமிழோசையும் போட்டி இடுமளவுக்குக் கடலுக்கு மிக அருகே பேச்சு மேடை. மெரினா நெடுஞ்சாலையில் போக்குவரத்துத் தடைப்படுமளவுக்கு அவ்வளவு நெடுந் தூரம் தமிழர் கூட்டம். ஆறடி உயரத்தில் மேடை ! சுற்றிலும் மின்விளக்குகள்! நாலாபக்கமும் ஒலிபெருக்கிகள் . அழகிய காட்சி அது!

சொன்மாரி பொழிந்தது!

முன்னாள் அமைச்சர் எஸ். முத்தையா கூட்டத் தலைவர். சிறை சென்று மீண்ட தமிழர் தளபதி அண்ணாதுரை அன்று தம் சிறை வாழ்க்கைச் சேதிகளை எடுத்தெடுத்துச் சொன்னார். பெரியாரைக் கண்டு வந்த சர்

பன்னீர்செல்வமும் திருச்சி விசுவநாதனும் பெல்லாரிக் கொடுமையினை — செந்தமிழர் கடமையினை எடுத்துக் கூறினர். தோழர்கள் ஈழத்தடிகள், சண்முகாநந்தடிகள் , காஞ்சி தங்கவேலர், டி.வி. முருகேசம் , என். வி. நடராசன், இரண்யாட்சகன், ஷர்புதீன், பாசுதேவ் மற்றும் பலர் பெரியாரைப் பாராட்டிப் பேசினர்.

தமிழர் தொகை 1001

12—4—39: இந்தி எதிர்ப்புப் போரில் சென்னை முதலமைச்சர் இல்லத்தின் முன்னும் இந்து தியாலாஜிகல் பள்ளி முன்னும் சேலம் முனிசிபல் உயர்பள்ளி முன்னும் மறியல் செய்தது, மறியல் செய்யத் தூண்டியது, சொற்பொழிவாற்றித் தமிழ்ப் பெருமக்களைத் தட்டி எழுப்பியது, பத்திரிகைகளில் வீர உணர்ச்சியூட்டும் கட்டுரைகள் தீட்டியது, அத்தகைய பத்திரிகைகளை வெளியிட்டது, அவற்றை அச்சிட்டது, இந்தி எதிர்ப்புப் போரைத் தலைமை பூண்டு நடத்தியது முதலிய பல காரணங்களுக்காக இன்றுவரை சிறைப்பட்ட தமிழர் தொகை 1001. இதில் ஆண்கள் 902. பெண்கள் 54. குழந்தைகள் 20. சேலத்தில் மட்டும் கைதானோர் தொகை 16. சென்னையில் கைதானோர் தொகை 985.

மூவர் சுற்றுப் பயணம்

1—5—39: ஏப்ரல் திங்கள் முழுதும் தமிழர் தளபதி அண்ணாதுரை "விடுதலை" ஆசிரியர் பொன்னம்பலனார், கரூர் ஈழத் தடிகள் ஆகிய மூவரும் தமிழ்நாட்டுச் சுற்றுப் பயணம் செய்தனர். இந்திக் கொடுமை பற்றியும் தமிழர் கடமைபற்றியும் ஆங்காங்கு சொற்பொழிவாற்றி மக்கட்கெல்லாம் உணர்வூட்டி, இன்று ஈரோடு திரும்பினர். சேலம், செங்கற்பட்டு, கோவை, தஞ்சை, வடார்க்காடு. தென்னார்க்காடு முதலிய பல மாவட்டங்களிலும் அவர்கள் சுற்றுப்பயணம் செய்தனர்.

சேர வாரீர் செந்தமிழர்களே !

எங்கும் தமிழர் இயக்கத்திற்குப் பேராதரவு பெருகிவரக் கண்டனர். ஈரோடு திரும்பியதும் சுற்றுப் பயணஞ் செய்த காலை தங்கள் சிந்தனையிற் படிந்த சித்திரங்களை யெல்லாம் நிரல் நிரலாக எடுத்துக்காட்டி அறிஞர் அண்ணா

துரை அவர்கள் "விடுதலை" இதழில் தீட்டிய சேரவாரீர் செந்தமிழர்களே, என்னும் சிறப்புக்கட்டுரை இங்கே குறிப்பிடத்தக்கது.

2—5—39; பிப்ரவரி 16 தொடங்கி இன்றுவரை பெல்லாரிச் சிறையில் கிடந்து வாடிய தலைவர் ஈ. வெ. ரா. இன்று சென்னைச் சிறைக்கு மாற்றப்பட்டார். — 12—5—39: பெரியார் இன்று கோவைச் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார் ..

# 9. பலி பீடத்தில் இரு தமிழர்

(மொழிப் போரில், இரு தமிழர் சிறைக் கோட்டத்தில் உயிர் நீத்த வரலாறும் இடுகாட்டில் அவர் தமைப் புதைக்குங் காலை தளபதி அண்ணா அவர்கள் பேசிய உருக்கமான இரங்கலுரையும் இங்குத் தரப்படுகின்றன .)

இந்திக்கு இருவர் பலி

சிறைச்சாலை அன்பழைப்புத் தந்தவுடன் ஓடோடிச் சென்று, சிறைக் கதவைத் தட்டி உட்புகுந்த தமிழ்க் காளைகளில் இருவர் சிறையிலேயே உயிர் நீத்தனர். கொடு நினைப்புடைய ஆரியத்தின் பலிபீடத்திற்கு, அந்தோ , அவர் இருவரும் இரையாயினர். ஆம், நடராசன் — தாளமுத்து என்னும் போர்வீரர் இருவர் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பார்ப்பனீயப் பலிபீடத்தில் ஏற்றப்பட்டு விட்டனர். செந்தமிழன் உயர்வினுக்குச் செத்த அத் தீரர்களை — நெஞ்சு உறுதியும் நேர்மைத் திறமும் படைத்த அந்த இளங் காளைகளை, மரணப் படுக்கையிலும் தங்கள் சூள் உரையை மறக்க மறுத்த அந்த மாவீரர்களைத் தமிழ் நாடு தான் உள்ளளவும் மறவாது. கடைசித் தமிழன் ஒருவன் இருக்கு மட்டும் — அவன் உடலில் ஒரு சொட்டு இரத்தமேனும் நடமாடு மட்டும் அவர்கள் பெயர் மறையாது. தமிழர் அகராதியில் இனி நடராசன் — தாளமுத்து" என்றால் வீரர் என்று பொருள் வீரர் என்றால் நடராசன் — தாளமுத்து என்று பொருள் .

நடராசன் முதலில் பிணமானார். அடுத்த பலி தாளமுத்து. அவர் ஆதித்திராவிட மரபு. இவர் நாடார் சமுதாயம். இந்த இரு சமுகங்களும் தமிழுக்கு இரு உயிர்களை அர்ப்பணித்துவிட்டன. இச் சமுதாயங்கள் வாழ்க!

வீரர் நடராசன் 1938 டிசம்பர் 5—ல் சிறைப்பட்டார். முகத்தில் சில பருக்கள் தோன்றின ; வீக்கமும் நோக்காடும் தோன்றின ; சிறைச்சாலை மருந்தகத்தில் அய்ந்து நாள்கள் இருந்த பின்னர் டிசம்பர் 30—ல் சென்னைப் பொது மருத்துவமனைக்கு மாற்றப்பட்டார். ஜனவரி 15—ல் இறந்தார்.

நடராசன் மாண்டான்

மரணப் படுக்கையில் அம் மாவீரன் கிடந்தகாலையும் ஆச்சாரியார் ஆட்சிக்கு அவ்வீரனை விடுதலை செய்யும் எண்ணம் தோன்றவே இல்லை. தன்

பெற்றோருடன் — தமிழருடன் இறுதிக் காலத்தில் ஒரு சில மணி நேரமேனும் ஒன்றாயிருந்து அமைதியுடன் அவன் இறக்கட்டும் என்ற நினைப்பும் அவர்கட்கு எழவில்லை. மன்னன் உயிர் போகும் அந் நிலையிலும், மரணத்துடன் போராடிக்கொண்டு "இப்பவோ பின்னையோ இன்னுஞ் சற்று நேரத்திலோ ' என்றிருந்த அந்த வேளையிலும் இரவும் பகலும் போலீஸ் காவல் நடராசனைச் சுற்றி ! சிறையில் நோய் கண்டதும் மன்னிப்புக் கேட்டு விடுதலை ஆகும்படி கூறினராம் சில அதிகாரிகள். சில — கங்காணிகள் பணத்தாசை ஊட்டி இன்னும் என்னென்னவோ பண்ணுவதாகப் பிரமாணம் செய்தார்களாம். மன்னன் ஏறிட்டுப்பார்த்தானா? அவர்களின் ஆசை மொழிகளுக்கு இணங்கினானா? இல்லை. மன்னிப்புக் கேட்டு மானம் இழந்து உயிர் வாழ்தலினும் சிறையிலே உயிர் விடுதலையே மேலாகக் கூறினானாம் அந்த வைர நெஞ்சன்." ஆம், மரணம் அவரைப் பயமுறுத்தவில்லை . வியாதி உளைச்சல் அன்னாரை இம்சிக்கமுடியவில்லை. பணத்தாசை அவ் வீரரைப் பணியவைக்கவில்லை — நடராசனுக்கிருந்த தமிழாசை ஒன்றே அவற்றை எல்லாம் துச்சமாக நினைக்கச் செய்தது." (* நகரதூதன் 22—1—39 தலையங்கம்)

தோழர் நடராசன் அவர் குடிக்கு ஒரே பிள்ளை . நம் மகன் மீண்டு வருவான், திருமணம் செய்வோம்" என்று எண்ணியிருந்தார் அவர் தகப்பனார் . நடராசனும் மீண்டு வந்தார், ஆனால் பிணமாக வந்தார் . மணக்கோலத்தில் காண இருந்த நடராசனைப் பிணக்கோலத்தில் தான் தந்தை காண முடிந்தது. —

இடுகாட்டில் தமிழர்

15—1—39 இரவு நடராசன் மாண்டார் . மறுநாள் காலை பெருத்ததோர் ஊர்வலம் நடராசன் வீட்டிலிருந்து இடுகாட்டிற்குப் புறப்பட்டது. பிணத்துடன் வந்த பத்தாயிரம் தமிழரும் கண்ணீர் உகுத்தனர். எல்லார் கையிலும் கருப்புக்கொடி. அனைவர் நெஞ்சிலும் அடங்காத துயரம். துடிதுடித்த நெஞ்சுடன், இறந்த நடராசன் உடலைச் சுடு காட்டில் வைத்து, அருகே கூட்டம் ஒன்று கூட்டினர் தமிழர். தோழர் ஆல்பர்ட் ஜேசுதாசன் தலைமையில் தளபதி அண்ணாதுரை, தோழர் பொன்னம்பலனார், வேலூர் அண்ணல் தங்கோ, டாக்டர் தருமாம்பாள் மற்றும் பலர் இறந்த நடராசனின் நெஞ்சத் திண்மையைப் பாராட்டினர்.

18—1—39 அன்று சென்னை சட்டசபையில் இறந்த நடராசனைப்பற்றி விவாதம். தோழர் கத்தே ரங்கைய நாயுடு அந்தக் கைதி இறந்ததன் காரணம் என்ன என்று கேட்டதற்கு அமைச்சர் ஆச்சாரியார்; "நடராசன் என்பவர் படிப்பு வாசனை அறியாத ஒரு அரிஜன். தன் தாய் மொழியிலும் கூட நடராசனுக்கு எழுதத் தெரியாது" என்று பதிலளித்தார். உடனே படிப்பு வாசனையற்ற காரணத்தால் தான் நடராசனுக்கு மரணம் நேர்ந்தது என்று அமைச்சர் கருதுகிறாரா என்று அப்துல் அமீத்கான் சுடச் சுடக் கேட்டார். படிப்பில்லாததால் தான் அந்தக் கைதி மறியல் செய்ய நேர்ந்தது. சிறையில் அவர் இறந்து போனார்' என்று முதலமைச்சர் மறுமொழி புகன்றார். இந்த விசித்திரமான விடையைக் கேட்டதும் சட்டசபையில் உள்ள பல ஆரிய உறுப்பினர்கள் உரத்த குரலில் எக்காளமிட்டுச் சிரிக்கத் தொடங்கினர்.

சட்டசபையில் சிரிக்கத் தொடங்கினர். ஒரு தமிழ் வீரன் — அதிலும் திருமணமாக வேண்டிய இளங்காளை. அதிலும் ஆரியர்களால் அடக்கியொடுக்கப்பட்ட ஆதித்திராவிட மரபைச் சேர்ந்த செம்மல் சிறையில் மாண்டான். எங்கள் மாவீரன் சிறையிலோ மாண்டான் என்று தமிழரெல்லாம் இரத்தக் கண்ணீர் வடித்தனர் ஆனால் ஆரிய உறுப்பினர்கள் கைகொட்டிச் சிரித்தனர். முதலமைச்சரே , அவன் படிக்கத் தெரியாதவன் — ஆகவே இறந்தான் என்று விபரீத வாதம் புரிந்தார். ஆனால் வேடிக்கை என்ன வென்றால், 'நடராசன் நன்றாக எழுதப் படிக்கத் தெரிந்தவன்; பல கடிதங்கள் அவனால் எழுதப்பட்டிருக்கின்றன ; அடிக்கடி பல புத்தகங்களைப் படிப்பது அவன் வழக்கம்" என்று நடராசனின் தந்தையார் அன்றைக்கே அறிக்கை விடுத்தார் . இச் சட்டசபை நிகழ்ச்சி தமிழர் நெஞ்சத்தில் சுருக்கெனத் தைத்தது.

.

மற்றுமோர் பலி — வெந்த புண்ணில் வேல்

வீரன் நடராசனைப் பறிகொடுத்ததால் தமிழர் நெஞ்சத்தில் ஏற்பட்ட பச்சைப்புண் கொஞ்சமும் ஆறவில்லை. அதற்குள்ளாக ஆரியம் மற்றுமோர் தமிழ் உயிரைப் பலிகொண்டு விட்டது. 'திராவிடத்துத் திருவிளக்கொன்று அணைந்தது; எம் உள்ளத்தில் களிப்பேற்றவந்த இளங்காளை ஒடி மறைந்தது; அய்யகோ என் செய்வோம்?", என்று துக்கம் தோய்ந்த நெஞ்சுடன் தமிழர்

உலவிய வேளையில் நாடார்குல திலகம் தாளமுத்து சிறைக்கூடத்தில் ஆரியத்திற்குப் பலியான சேதியைத் தம் காதால் கேட்டனர்.

அவ்வீரன் உடலதனைத் தம் கண்ணால் கண்டனர். வெந்த புண்ணில் வேல் பாய்ந்த சேதி இது என்று நெஞ்சங் குமுறினர். தமிழ் வாழத் தன் வாழ்வை அர்ப்பணித்தான் பெயர் வாழ்க என்று கூவினர்.

ஜனவரி 15—ல் நடராசனைப் பறிகொடுத்து மார்ச் 12—ல் தாளமுத்தையும் பறிகொடுப்பதென்றால் யார் பொறுப்பார் அத் துயரம் ? தமிழ் நாடே ! நடராசனைப் பெற்றெடுத்த நன்னாடே ! தாளமுத்தை எமக்கீந்த திருநாடே! நடராசன்களும் தாளமுத்துக்களும் தோன்ற முதற் காரணமாயிருக்கும் தலைவர் பெரியாரையும் எமக்களித்த பொன்னாடே! நீ வாழ்க

தாளமுத்து இடுகாடு நோக்கி!

1939 மார்ச் 12 : இன்று மாலை தாளமுத்துவின் உடல் வாழ்க்கையின் இறுதிப் பயணத்தைத் தொடங்கிற்று. தாள முத்துவின் வயதான பெற்றோரும் அவருடைய இளம் மனைவியும் புரண்டு புரண்டு அழுத காட்சி கண்டு ஊர்வலத்துடன் சென்ற தமிழர் அத்தனைப்பேர் கண்களிலும் நீர் முத்து முத்தாய்த் தெறித்தது. அவர்கள் கன்னமெல்லாம், கண்ணீர் பருகின. அவர்கள் உள்ளமெல்லாம் வெதும்பின ஒவ்வொருவரும் ஒரு சோக சித்திரமாயினர். ஊர்வலம் இந்து தியாலாஜிகல் பள்ளியண்டை வந்ததும், தம்மை மறந்து பேராவேசம் கொண்டு, பத்தாயிரம் தமிழரும், தமிழ் வாழ்க இந்தி வீழ்க' என்று விண்ணதிர முழங்கினர். தலைவர்கள் எவ்வளவோ கேட்டுக்கொண்டும் நீண்ட நேரம் வரை, ஊர்வலம், அந்த இடத்தில் வீர முழக்கம் செய்வதைவிட்டு அசைந்து செல்ல ஒப்பவே இல்லை, அந்த ஓரிடம் தவிர ஊர்வலம் எவ்வொலியும் கூறாது சும்மாதான் சென்றது. தள்ளரிய துக்கத்தால் நெஞ்சடைத்துப் போன , பின்னே சொல்லெங்கே தோன்றும்?

நடராசன் அருகே தாளமுத்து

மயானத்தை விரிவலம் வந்தடைந்ததும் தோழர் சி.பாசுதேவ் தலைமையில் அங்கு இரங்கற் கூட்டம் நடைபெற்றது. இந்தி எதிர்ப்பு எட்டாவது சர்வாதிகாரி எஸ். சம்பந்தமும் தளபதி அண்ணாதுரையும் பேச்சாளர்கள். தம் நெஞ்சக் குமுறலைத் தளபதி அவர்கள் எடுத்துக் காட்டிய போது ஒவ்வொருவரும்

தத்தமது நெஞ்சமே பேசுகிறது என்று எண்ணினர். அத்தனைப் பேருக்கும் ஒத்த துக்க மல்லவா அது!

பேச்சு முடிந்ததும் தாளமுத்துவின் உடல் நடராசன் உடல் புதைக்கப்பட்ட இடத்தருகே புதைக்கப்பட்டது. பின் எங்கே புதைக்கப்படும்?

அன்று தளபதி பேசினார்

முன்பு தோழர் நடராசன் அடக்கமான காலத்து மீண்டும் இத்தகைய நிகழ்ச்சி தமிழர்கட்கு ஏற்படாதென் நினைத்தேன். ஆனால் நாடார் திலகம் தாளமுத்து இறந்தது காண மனம் கலங்குகிறது. வழிநெடுக ஆயிரமாயிரம் தமிழர்கள் கண்ணீர் விட்டுக் கதறி அழுதனர். என்னைப் பொறுத்தவரை தோழர்கள் நடராசன் , தாளமுத்து மரணத்தை என்னுடைய அண்ணன் தம்பி மரணம் என்றே கருதுகின்றேன். முன்பு நான் சாக்கோட்டை சுயமரியாதை மாநாட்டில் பேசும்போது நாடார் சகோதரர்களைத் தமிழர் அறப்போருக்கு வருமாறு வருந்தி அழைத்தேன். ஆனால் அக்காலத்திலும், நீங்கள் அனுப்பவேண்டும், ஆனால், அவர்களைத் திருப்பிக்கொடுப்பதாக உறுதிகூற முடியாதெனத் தெரிவித்துத்தான் அழைத்தேன். அதே போல அங்கிருந்து நாடார் தோழர்கள் வந்தனர். அந்த வீரமரபைச் சேர்ந்த தாளமுத்தும் வந்தார், இறந்தார். முன்பு இறந்த நடராசன் மணமாகாதவர். ஆனால் தாளமுத்து மணமானவர். குடும்பத்தை ஒழுங்காக நடத்த இருந்த சமயத்தில் தாளமுத்து இறந்துவிட்டார்.

நடராசனை — தாளமுத்தை நாம் இழந்தோம்; கண்ணீர் விட்டோம்; கலங்கினோம்; நெஞ்சு துடித்தோம்; நிலை தடுமாறினோம்; எதைச் செய்வது, எங்குப் போவது என்பதறியாது ஏங்கித் தவித்தோம். ஆனால் இதே சமயத்தில் ஆச்சாரியார் மார்தட்டி கருப்புக் கண்ணாடியைத் துடைத்தவண்ணம் கலகலவெனப் பேசுவார். ஏன் பேச மாட்டார்? தமிழன் ஆச்சாரியார் காலின் கீழ் இருக்கிறான். அவர் நினைத்தால் பல தாளமுத்துக்களும் நடராசன்களும் மயானம் வர முடியும். ஏன், ஆச்சாரியார் நினைத்தால் நீங்களும் நானும் இங்கு (மயானம்) வரவேண்டியது தான். இது மிகவும் வெட்ககரமான நிலை. ஆனால் இந்த நிலையில் தான் நாம் இருக்கிறோம்.

இவர்கள் மாண்டார்கள். நாம் கண்ணீர் விட்டோம். இனி இந்தி படிக்கும் மாணவர்கள் இவ்விருவர் உடலைத் தாண்டிக் கொண்டு தான் படிக்கச் செல்லவேண்டும்.

இரண்டு மணிகளை இழந்தோம். தமிழர் ஆட்சி ஏற்படும்போது இவ்விரு வீரர்களின் தியாகத்தை அடிப்படையாகக் கொண்டே அது எழுப்பப்படும். வருங்காலத்தில், விடுதலை பெற்ற தமிழகத்தில் தலைவர் பெரியாரை நடுவில் வைத்து இறந்த இரு மணிகளையும் பக்கத்தில் வைத்து உருவச்சிலை எழுப்பவேண்டும். ஏன் பெரியார் சற்று தளர்ச்சியடைந்த காலத்திலெல்லாம் இந்த இரண்டு சமூகங்கள் தான் அதாவது நாடார் — ஆதித்திராவிடர் சமூகங்கள் தான் அவருக்கு உதவி செய்து வந்திருக்கின்றன.

அடுத்தவாரம் குடந்தை செல்லப் போகின்றேன். எனது நாடார் தோழர்கட்கு அப்போது நான் என்ன பதில் கூறுவது என்றே தெரியவில்லை!

# 10. போர்த்தலைவர் வீர உலா !

(பெரியார் அவர்கள் திடீரென்று சிறையினின்று விடுதலையான வரலாறும், உள்ளத்தைக் குளிர்விக்கும் அச் சேதி கேட்டுத் தமிழ்நாடு துள்ளிக் குதித்து ஆனந்தத் தாண்டவம் ஆடியதும், தமிழ் நாட்டார் உணர்ச்சிப் பெருக்கைக் காண இந்தி எதிர்ப்புப் போர்த் தலைவர் ஈ. வெ. ரா. நாடு முழுதும் வீர உலாப்போந்ததும், ஆங்காங்கு தமிழர்கள் திரள் திரளாய்க் கூடித் தம் தலைவரைக் கண்டு களித்ததும், பிறவும் இப்பகுதியில் தரப் படுகின்றன.)

வந்துவிட்டார் நம் தலைவர்

நடராசனை இழந்தோம், தாளமுத்துவை இழந்தோம், தம் அருமைத் தலைவர் பெரியாரையேனும் உயிருடன் காணமுடியுமோ என்று தமிழர் 1939 ஜனவரி — மேமாதங்களில் ஏங்கித் தவித்தனர். பட்டதைப் பட்டாங்கு உரைக்கும் நெஞ்சத் திண்மை வாய்ந்த அந்த வைர நெஞ்சனை என் றினிக் காண்போம் என்று நெஞ்சம் துணுக்குற்றனர். நகைச்சுவை ததும்பத் ததும்பப் பேசிடும் அந்த மாவீரனின் பொன் மொழிகளைச் செவிமடுக்க இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகுமோ என்று கண் கலங்கினர். ஒரு கணமும் ஓயாது நாடு முழுதும் சுழன்று சுழன்று அவர் இட்டு வந்த இடி முழக் கத்தைக் கேட்கும் பேறு இனி நமக்கு இல்லை, இல்லை என்றே பல தமிழர் முடிவு செய்து கோண்டனர். அவருக்கு உடல் நலம் இல்லை என்ற சேதி வந்தபோது, சிறையில் சிங்க ஏறு நோவாய்ப் பட்டது என்று அறிந்தபோது, தமிழர் செய்வதறியாது திகைத்தனர். இன்ன பிற எண்ணி யெண்ணித் தமிழர் துடிதுடிக்கையில், அடடே , என்ன வியப்பு , பெரியாரே இந்தா வந்துவிட்டார். ஆம்! சிறை மீண்டு வந்துவிட்டார். பூட்டிய இருப்புக் கூட்டின் கதவு திறந்தது, வெளியே வந்து விட்டார். தமிழர் இடையே வாழ — தமிழருக்கு வாழ்வளிக்க வந்துவிட்டார். கோவைச் சிறையில் இருந்துவந்த பெரியார், திடீரென்று சற்றேனும் தமிழர் எதிர்பாரா நேரத்தில் 22—5—39 ஆம் நாள் காலை 11— மணிக்கு நிபந்தனை எதுவுமின்றி விடுதலை செய்யப் பட்டார். இன்னும் எத்தனைக் காலமாகுமோ அவரைக் காண் — என்றெண்ணியிருந்த தமிழர் திடுமென அவரைக் காண நேர்ந்துவிட்டால் சொல்ல வேண்டுமா அவர் நெஞ்சக் களிப்பை !

"பெரியார் 167 நாள்களுக்குப்பின் விடுதலையானார். கட்டாய இந்தியை எடுக்காமலே சர்க்கார் திடீரென்று அவரை இவ்விதம் விடுதலை செய்த காரணம் இன்னதென இதுவரையில் எவராலும் அறிய முடியவில்லை . ஆனால், அவர் சிறைக்குப் போகுமுன் 190 பவுண்டு நிறை இருந்தார். என்பதும் விடுதலையான அன்று 166 பவுண்டு மட்டுமே இருந்தார் என்பதும் உண்மை ." (தமிழர் தலைவர் பக்கம் 190.)

தமிழர் பெருங்களிப்புக் கொண்டனர்

தமிழ் நாடு தலைவர் பெரியாரின் விடுதலைச் சேதி கேட்டுத் துள்ளிக் குதித்து ஆனந்தத் தாண்டவமாடும் என் பதில் சந்தேகம் ஏது ! தமிழரின் தலைவர் சிறையில் வாடி யிருக்கிறார் என்பது கேட்டுக் கேட்டுத் தமிழர் இல்ல மெல்லாம். இது நாள் மட்டும் சோக சித்திரமாகவே இருந்து வந்தன பெரியார் சிறைப்பட்டார் என்ற சேதி கேட்ட தமிழருக்கு எத்துணைக் கொதிப்பு — எவ்வளவு ஆவேசம் பொங்கிற்று ! எங்கெங்கும் கண்டனங்கள் எழும்பின. பெரியார் பெல்லாரிக்கு — வெப்பத்தின் உறைவிடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டது கேட்ட , தமிழர் எவ்வளவு சீற்றம் கொண்டனர். கோவைக்கு அவர் மாற்றப்பட்டார் என்ற சேதி கேட்டதும் தமிழரின் மனம் எவ்வளவு குளிர்ந்தது. ஆம், அவர் துக்கம் தம் துக்கமெனவும், அவர் கஷ்டம் தம் கஷ்டம் எனவும், அவர் களிப்பே தங்களிப்பு எனவும் தமிழர்கள் கொள்கின்றனர். இப்படியன்றோ இருத்தல் வேண்டும் ஒரு தலைவரின் நிலை!

கோவை நகரில் பெரியார் விடுதலைச் சேதி பரவிற்று. திரண்டனர் தமிழர் தம் தலைவரைக்காண. எங்கும் களிப்பு! எங்கும் கொண்டாட்டம்! வந்துவிட்டார் பெரியார். நமது தலைவர் வந்துவிட்டார்! வாழ்க ! பெரியார் வாழ்க!! என்ற ஒலி கோவை வானைப் பிளந்தது." (குடி அரசு 1939 மே இதழ்)

கூடிவிட்டார் சிறைவாயிலில் !

பகல் 12 மணிக்கு விடுதலையான வெற்றி வீரரைத் தோழர் எஸ். வி. லிங்கம் தலைமையில் தமிழர் கூட்டங் வரவேற்று ஊர்வலமாய் அழைத்துச் சென்றது. அன்றிரவு அங்கு ஊர்வலம் — எக்காளம் — பெருங்களிப்பு — கொண்டாட்டம். "அதற்குப் பிறகு கோவையை விட்டு ஈரோட்டுக்கு இரண்டாவது மெயிலில்

வந்தார் பெரியார். திருப்பூர்வாசிகள் திரன் திரளாகக் கூடிப் பெரியாரை வாழ்த்தினர்.

ஆயிரக்கணக்கில் ஆர்வமுள்ள தமிழர்!

ஈரோட்டிலோ என்றால் என்றுங் காணாக் காட்சி புகைவண்டி நிலையத்தில் பூரிப்புடன் புன்னகை பூத்த முகத்துடன் ஆயிரக்கணக்கில் ஆர்வமுள்ள தமிழர்கள் கூடி நின்றனர். அவர்கள் முகமெல்லாம் மகிழ்வு ததும்பி வீசிற்று! அவர்கள் வாயெல்லாம் வாழ்க வாழ்க' என்று ஒலித்தபடி இருந்தன.

ஈரோட்டில் போர்த் தலைவர்!

இரவு 10—30 மணிக்கு வந்த வண்டியில் பெரியார் வந்தார். தமிழரெல்லாம் திரண்டு திரண்டு அவருக்கு மலர் மாலைகளைச் சூட்டினர். என்றிக் காண்போம் என்று எண்ணினோமே! வந்துவிட்டரா தலைவரே, வெற்றி வேந்தரே, நீர் வாழ்க" என வாழ்த்தினர்"* (குடி அரசு 1939 மே இதழ்) அங்கிருந்து ஊர்வலம் புறப்பட்டது. அது பெரியார் மாளிகையை அடைந்ததும் அறிஞர் அண்ணாதுரை பெரியார் விடுதலை பற்றிச் சிறிய ஆனால் — அரிய பேச்சொன்று நிகழ்த்தினார். பெரியார் எல்லார்க்கும் நன்றி கூறினார். கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாய்க் கலைந்தது.

28—5—39: இன்று முழுதும் விடுதலையான வெற்றி வீரரைப் பாராட்டி ஏராளமான வாழ்த்துத் தந்திகள் வந்து குவிந்தவண்ணம் இருந்தன. தலைவர் களும் தொண்டர்களும் தோழர்களும் தாய்மார்களும் மன்றங் களும் கழகங்களும் வாரியங்களும் பிறவுமெல்லாம் மேலும் மேலும் வாழ்த்துத் தந்திகளை அனுப்பிக் கொண்டே இருந்தனர். தலைவரைக் காண திருச்சி விசுவநாதன், தோழர் பாண்டியனார் மற்றும் பலர் ஈரோடு வந்துவிட்டனர். இன்று மாலை ஈரோட்டில் மாபெருங் கூட்டம். தோழர் ஷேக்தாவுது எம்.எல்.ஏ., தலைவர் . தளபதி அண்ணாதுரை, திருச்சி விசுவநாதன், தோழர் பாண்டியன், குமாரராஜா , சேலம் நெட்டோ , சண்முகாநந்தர் மற்றும் பலர் பெரியார் விடுதலை தமிழருக்கு விடுதலை என்றெடுத்துக்காட்டினர். பின்னர் பெரியார் வீர உரை ஆற்றினார். அவ்வுரையை நினைத்தாலும் போதும் தமிழனுக்கு வீர உணர்ச்சி வந்துதான் தீரும். இதோ பாருங்கள் அந்த அழகிய உரையை :

வெளியே வந்தேன்

நான் சிறையிலிருந்து உடல் நலமின்றி வெளிவந்தேன் என்றாலும் இன்று உடல் நலத்துடன் இருப்பதாகவே உணர்கிறேன். ஏனெனில் இன்று இவ்வளவு பெரிய கூட்டத்தையும் எனது அருமைத் தோழர்களையும் பார்க்கும் போது எனக்கு உண்டாகும் ஊக்கத்திற்கும் உற்சாகத்திற்கும் அளவே இல்லை. நான் உடல் நலமின்றி மெலிந்து மிகப் பலவீனமாக இருந்து வெளியில் வந்திருந்தாலும் உங்கள் உற்சாகத்தினால் அந்தப் பலவீனமெல்லாம் இப்போது தெரியவில்லை .

வேலை முடியவில்லையே

நான் விடுதலை அடைந்ததைக் குறித்து நீங்கள் மகிழ்ச்சி அடைகிறீர்கள். ஆனால் நான் மகிழ்ச்சி அடைவதற்கில்லை. ஏன், நான் எதைக் கொண்டு மகிழ்ச்சி அடைவது? நான் எதற்காகச் சிறை புகுந்தேனோ அது . வெற்றியடைந்துவிட்டதா? இல்லையே? அது வெற்றியடையாது நான் விடுதலை அடைந்து பயன் என்ன? மீண்டும் சிறை செல்லவே விடுதலை இப்போது வந்ததோ என்றும் எண்ணுகிறேன். நான் இங்கு வந்து எதைப் பார்க்கிறேன்? என்னுடன் சிறை சென்ற தமிழர்களைப் பார்க்க முடியவில்லையே .

கட்டாய இந்தி ஒழியும் வரை களிப்பேது?

நமது நாட்டிற்குக் கேடு விளைவிக்கும் கட்டாய இந்தி ஒழியும் வரை நமக்குக் களிப்பு எப்படி உண்டாகும்? அது ஒழியும் வரை நாம் பாடுபடவேண்டும். நான் சிறையிலேயே இறந்திருக்க வேண்டும் என்று கருதுகிறேன். அப்படி நான் இறந்திருப்பேனேயானால் நமது இயக்கம் மிகவும் ஓங்கி உச்ச நிலை அடைய வழி ஏற்பட்டிருக்கும்". ,

சென்னையில் சிறையஞ்சாச் சிங்கம்

24— 5—39: பெரியார் இன்று சென்னை வந்தார். அந்த மலர்ந்த முகத்தையும் ஒளிவீசும் கண்களையும் பார்க்க சென்னை சென்ட்ரலிலும் பின்னர் பெத்துநாய்க்கன்பேட்டையில் நடைபெற்ற மாபெருங் கூட்டத்திலும் ஆயிரமாயிரம் தமிழர்கள் கடலெனத் திரண்டனர்; சிறையஞ்சாச் சிங்கத்தைக் கண்டனர். பெருங் களிப்புக் கொண்டனர். சர் கே. வி. ரெட்டி நாயுடு, சர் பன்னீர் செல்வம், திரு. வி. கலியாணசுந்தரனார், சே.தெ.நாயகம், இராவ்சாகிப்

சிவராஜ், திவான் பகதூர் எம். சி. ராஜா மற்றும் பலர் பெரியாரைக் கண்டு பேசினர்.

"மெயில் பேட்டி

மெயில்" நிருபர் பெரியார் அவர்களைப் பேட்டி கண்டபோது என் உடலைத் தேற்றிக் கொள்வதற்காகவே நான் வெளிவந்திருக்கிறேன். மீண்டும் சிறை செல்லக்கூடும். நீண்ட நாள் தமிழரிடையே இருக்க நான் வரவில்லை ." என்று பெரியார் குறிப்பிட்டார். இந்தி எதிர்ப்பு இயக்கத்தைக் குறித்து மெயில் நிருபர் கேட்டதற்கு அவர், கட்டாய இந்தி நீக்கப்படும் வரையிலும் தாய்மொழியிடத்தில் மக்களுக்கிருக்கும் ஆர்வம் குறையாதவரையிலும் இந்த இயக்கம் இருந்தே தீரும் என்று விடை அளித்தார். மேற்கொண்டு நூறு பள்ளிக்கூடங்களில் இந்தியைப் புகுத்த அரசியலார் எண்ணுகிறார்களே என்று நிருபர் தெரிவித்ததும் , அப்படியானால் இந்தி எதிர்ப்பு இயக்கமும் மேலும் நூறு மடங்கு வலுப்படும். இந்த இயக்கத்தைக் குறித்து யாதொரு தப்பான எண்ணமும் இருக்கக்கூடாது. இந்த இயக்கம் தேசிய எதிர்ப்புக் கிளர்ச்சி அல்ல. வகுப்புத் துவேஷத்தின் மீதோ சமூகத் துவேஷத்தின் மீதோ ஏற்பட்டதுமல்ல.

பெரியாரின் விளக்கவுரை

"தாய்மொழி, கலை, நாகரிகம், பண்பு ஆகியவைகளிடத்தில் ஒருவனுக்குள்ள அடக்கமுடியாத ஆசையை வெளிப்படுத்தும் செய்கையே இந்த இயக்கமாகும்." என்று பெரியார் தெரிவித்தார். பள்ளி திறந்தவுடன் கட்டாய இந்தி போகாவிடில் கிளர்ச்சி முன்னைவிட மிக வேகமாக நடைபெறும் என்றும் அச்சமயம் தமக்கு மீண்டும் சிறைச்சாலை அழைப்புத்தாள் கிடைக்கக் கூடுமென்றும் பெரியார் அழுத்தந் திருத்தமாக அறிவித்தார்.

அன்றிரவே பெரியார் ஈரோடு திரும்பி விட்டார் . அங்கிருந்து 1—6—39—ல் கொடைக்கானல் சென்றார், ஓய்வு பெற எண்ணி. பத்து நாள் கூட இல்லை, அதற்குள் அந்த ஓய்வுக்கு ஓய்வு கொடுத்துவிட்டு, பட்டிவீரன்பட்டிக்கு வந்தார் பெரியார். 12—6—39—ல் அங்கு வரவேற்புப் பெருங் கூட்டம் .

சர் செல்வம் சொற்பொழிவு

இதற்கிடையே 28—5—39—ல் சென்னைக் கடற்கரையில் பல்லாயிரவர் திரண்டு கூடிய மாபெருங் கூட்டமொன்று சர் பன்னீர் செல்வம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் சி. பாசுதேவ் பி. ஏ. பி. எல். "செங்குந்தமித்திரன்" அந்நாள் ஆசிரியர் காஞ்சி மணிமொழியார், பாவலர் பால சுந்தரம், என்வி. நடராசன் டி.வி. முருகேசன் மற்றும் பலர்பேரினர். பெரியார் வாழ்த்துத் தீர்மானம் நிறைவேறியது. சர் செல்வம் அன்று நிகழ்த்திய சொற்பொழிவு தமிழர் உள்ளத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுவதாயிருக்கிறது. பெரியார் விடுதலை ஆனதும் தமிழர் என்னென்ன எண்ணினர் என்பதை அந்த உரை நன்கெடுத்துக் காட்டுகிறது, அந்த உரையின் சில பகுதிகள் :

"கட்டாய இந்திநுழைவால் தமிழர்தம் மொழி, கலை, நாகரிகம் முதலியவற்றிற்கு வரும் ஆபத்தை எடுத்துக் காட்டியதைத் தவிர வேறொரு பாவமும் செய்தறியாத நமது ஒப்பற்ற தலைவர் அவர்களைக் கடந்த 5 மாதங்களாகச் சிறையிலடைத்து வைத்திருந்தது ஆச்சாரியார் ஆட்சி.

இன்னும் 15 மாதங்கள் செல்லுமே நமது தலைவர் பெரியார் வெளிவர என்று நாம் எண்ணிக் கலங்கியிருந்த வேளையில் திடீரென அவர் விடுதலை செய்யப்பட்டார் என்பதை உணர்ந்த நமது மகிழ்ச்சி பெரிது; மிகப்பெரிது.

ஆச்சாரியார் — அன்றும் இன்றும்

பெரியார் இந்த இயக்கத்தைத் துவக்கியகாலை முதல் அமைச்சர் கனம் இராசகோபாலாச்சாரியார் , ஒரு இராமசாமி நாயக்கரும் ஒரு சோமசுந்தர பாரதியும் தானே கிளர்ச்சி செய்கிறார்கள் என்று வெகு அலட்சியமாகக் கூறினார். பின்னால் அதே கனம் ஆச்சாரியார், புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் வந்துகொண்டே இருக்கின்றனரே, என் செய்வேன் என்று சொல்லலானார்.

பெரியாரை முன்னமே ஏன் விடுவிக்கவில்லை?

பெரியாரை வெளியில் விட்டால் கிளர்ச்சி ஓங்கி , தங்களுக்கு ஆபத்து வந்துவிடும் என்று அஞ்சித்தானே 5 மாதங்களுக்கு முன் நடைபெற்ற ஜஸ்டிஸ் கட்சி மாநாட்டிற்குத் தலைமைதாங்க பெரியாரை இச்சர்க்கார் விடுதலை செய்யவில்லை. இப்பொழுது நமது பெரியார் நம்மிடையே வந்துவிட்டார். இதற்காக நாம் சர்க்காருக்கு நன்றி செலுத்த வேண்டுமா? மன

மாற்றத்தினாலோ அல்லது ஒரு குடி அரசு நாட்டில் எதிர்க்கட்சித் தலைவருக்குக் காட்ட வேண்டிய மரியாதை இன்ன தென்பதை உணர்ந்தோ சர்க்கார் இவ்வாறு செய்திருந்தால் நாம் நன்றி செலுத்த வேண்டியது தான். அப்படியானால், மாநாடு கூடுவதற்கு முன் , சட்டசபைகளில் எதிர்க்கட்சியினர் கேட்டுக் கொண்டதன் படியாவது அல்லது பெரியார் உடல் நோய் கண்டு சென்னை மருத்துவமனையில் இருந்தபோதாவது, தமிழர் வேண்டுகோளுக்கிணங்கிப் பெரியாரை அந்த அரசியலார் விடுதலை செய்திருக்க வேண்டும்.

பெல்லாரிச் சிறைக்கு அவரை ஏன் கொண்டு போனீர்?

அந்தப்படியும் இந்த சர்க்கார் செய்யவில்லை. பெரியாரை விடுதலை செய்யாதது மட்டுமல்ல, அவரது நண்பர்களும், அன்பர்களும் அவரைக் கண்டு பேசுவதற்குக்கூடத் தடை செய்து வந்தனர். கொடிய வெப்பம் பொருந்திய பெல்லாரிச் சிறைக்கு நம் பெரியாரைக்கொண்டு போனார்கள். இதைக் குறித்துக் கேள்வி கேட்டபோது அது கைதியின் நன்மைக்கே' என்று கனம் ஆச்சாரியார் பதிலளித்தார்.

பெரியாரை விடுவித்தது பயத்தாலா?

அவர் விடுதலை செய்யப்பட்டதன் காரணத்தைச் சர்க்கார் வெளியிடவில்லை. ஒரு வேளை பெரியார் சிறையில் இறந்து விட்டால் எங்கு தங்கள் மீது பழி வந்து விடுமோ எனப் பயந்து தான் நோய் முற்றிய இந்நிலையில் பெரியாரை இப்போது விடுதலை செய்திருக்கின்றனர் ... போனது போகட்டும். மெய்யாகவே சர்க்கார் நல்ல எண்ணத்துடன் அவரை விடுதலை செய்திருந்தால் இன்னும் இரண்டு காரியங்களை அவர்கள் செய்திருக்க வேண்டும்.

இல்லையானால் இந்தியை ஏன் ஒழிக்கவில்லை? –

1. இந்தி எதிர்ப்புக் காரணமாகத் தண்டிக்கப்பட்ட எல்லோரையும் விடுதலை செய்திருக்கவேண்டும்.

2. கட்டாய இந்தித் திட்டத்தையும் அடியோடு எடுத்து விட்டிருக்க வேண்டும். கட்டாய இந்தி இருக்கும் வரையிலும் சிறையில் ஒரு உயிராவது இருக்கும் வரையிலும் நமக்கு ஓய்வு என்பது கிடையாது. எப்படியாவது நாம் இந்தக் கட்டாய இந்தியைத் தொலைத்துத்தான் தீர வேண்டும்.

இன்று நம்மிடையே பெரியார் இருப்பதால் நாம் மகிழ்ச்சி அடைகிறோம்; பெரு மகிழ்ச்சி அடைகிறோம். ஆனால் நூற்றுக்கணக்கான தொண்டர்களும், தாய்மார் களும், குழந்தைகளும் இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் சேர்ந்த குற்றத்திற்காகச் சிறையில் வாடி வருகையில் நாம் மகிழ்ச்சி அடைவது எப்படி?

பெரியார் பேச்சு , நமக்குக் கட்டளை!.

பெரியார் சொன்ன ஒன்றைத் தவிர மற்றெல்லாவற்றையும் நிறைவேற்றித் தீரவேண்டியது தமிழர் ஒவ்வொருவருடைய நீங்காக் கடமையாகும். உடலைத் தேற்றிக் கொண்டு மீண்டும் சிறை செல்லத்தான் வெளிவந்திருக்கிறேன் என்று பெரியார் சொன்னது போல் அவர் மீண்டும் சிறை செல்ல நாம் விடக் கூடாது. அப்படி ஒருக்கால் பெரியார் சிறை செல்லும் நிலைமை வந்தால் தமிழர் இரண்டரைக் கோடிப் பேரும் அவருக்கு முன் சிறை செல்லுவோம் என்று அவருக்கு நாம் சொல்லவேண்டும். பெரியார் நம்மிடையே இருந்தால் தான் நாம் முன்னேற முடியும். சிறை செல்லாது ஒரு தமிழன் இருக்கும் வரை பெரியாரை மீண்டும் சிறைவாசம் அனுபவிக்க நாம் இடங் கொடுக்க மாட்டோம். வெளியே நாம் இருக்க அவர் உள்ளே சிறையிலேயா? இனி அது முடியவே முடியாது. தமிழர்கள் உண்மையில் சுதந்திரமாக வாழ வேண்டுமானால் ஆரிய ஆட்சியிலிருந்து நாம் விடுதலை அடைய வேண்டும். அதற்கு நம்மைக் கொண்டு செலுத்துதற்குப், பெரியார் ஏற்றவர் ; பெரியாரே ஏற்றவர்."

விடுதலை பெற்றனர் வெற்றி வீரர்கள்!

7—6—39: இன்று சென்னை , வேலூர், திருச்சி , இராஜ மகேந்திரம், கோவை முதலிய பல சிறைகளில் இந்தி எதிர்ப்பு மறியல் காரணமாகத் தண்டனை பெற்று இருந்து வந்த 8 ஆவது சர்வாதிகாரி எஸ். சம்மந்தம், 9 ஆவது சர்வாதிகாரி காஞ்சி பரவஸ்து, 10 ஆவது சர்வாதிகாரி பெரிய குளம் அரங்கசாமி, டி. ஏ. வி. நாதன் உள்ளிட்ட இந்திப் போர் வீரர்கள் அனைவரும் நிபந்தனை எதுவுமின்றித் திடீரென விடுதலை செய்யப்பட்டனர். இந்த நற்சேதி கேட்டுத் தமிழரெல்லாம் வெற்றி ஒளி வீசுகிறது என்று உள்ளம் களித்துக் கூவினர்.

போர்த் தலைவர் வீர உலா

"சென்ற அய்ந்து திங்களாய்ச் சிறைச்சாலையுட் கிடத்தோமே ! செந்தமிழர் உணர்ச்சிப் பெருக்கை நேரில் அறிய இயலாது உள்ளிருந்து வாடினோமே இதோ விடுதலை வந்துவிட்டது! செல்வோம் நாடு முழுதும் இனி செய்வோம் சுற்றுப்பயணம் தொடங்குவோம் நமது சங்க நாதந்தை" என்று முடிவு செய்து கொண்டவராய், வெற்றி வீரர் ஈ. வெ. ரா. அவர்கள், நாடு முழுதும் சுற்றுப்பயணம் செய்யத் தொடங்கினார். வட்டாரந்தோறும் சென்றார் . வீர முழக்கம் புரிந்தார். அவர் சென்ற இடமெங்கும் திருவிழா ! அவர் புகுந்த நகரெங்கும் தோரணம்! அவர் பேசிய ஊர்முழுதும் எக்காளம்! அதுவரை 1001 தமிழர் சிறை சென்றதை முன்னிட்டு 1001 ரூபா பணமுடிப்புகள் பல வட்டாரங்களில் அவருக்கு அளிக்கப்பட்டன.

முதற்பரிசு சென்னைக்கு !

சிறை மீண்டதும் அவர் செய்த அந்தச் சுற்றுப்பயணம் போர்க்களம் சென்று வெற்றிகண்டு மீண்டு வந்து தம் நாட்டைப் பவனி வரும் போர்த் தலைவர் வீர உலாப் போலவே இருந்தது. அது காலை அவர் ஆற்றிய உரைகளும் வீரத்தின் விளக்கங்களாகவே இருந்தன. அவருடைய நீண்ட சுற்றுப் பயணத்தில் முதலில் அவர் வருகையைப் பெறும் பேறு சென்னைக்கே கிடைத்தது .

திராண்டனர் தமிழர் தலைவரைக் காண

18—6—39—ல் பெரியார் அவர்கள் சென்னைக்கு வருகிறார் என்பதறிந்து, அந்த நாள் என்று வரும் என்று சென்னைத் தமிழரெல்லாம் பல நாளாகவே நெஞ்சத்தில் ஆவல் தெறிக் கக் காத்திருந்தனர். அந்த நாளும் வந்தது . " அன்று சென்னை நகரிலேயே திருநாள் கொண்டாட்டந்தான்! தோரணங் கட்டுபவரும், கொடி ஏற்றுபவரும், கோலமிடு பவரும், ஆடை திருத்தி அணிவருப்பவரும், எங்கே பெரியார், எப்போது வருவார்' என்று கேட்டபடி சென்னை சென்ட்ரலுக்கு மலர் மாலைகளைக் தூக்கிக்கொண்டு மகிழ்ச்சியுடன் போகிறவர்களுமாகத்தான் தமிழர்கள் அனைவரும் காணப்பட்டனர் ( குடி அரசு 25—6—39 தலையங்கம் )

தளபதியுடன் போர்த் தலைவர்

சிந்தாதரிப்பேட்டை, பெத்து நாயக்கள் பேட்டை, இராயபுரம், மூலக்கொத்தளம், பெரம்பூர், புரசைப்பாக்கம், முத்தியாலுப்பேட்டை, தங்கசாலை , ஒற்றைவாடை முதலிய பல பகுதிகளிலிருந்து எண்ணற்ற ஊர்வலங்கள் திரண்டு திரண்டு சென்றன சென்ட்ரல் நோக்கி, கூட்டம் சென்ட்ரல் வண்டி நிலையம் முழுதும் திரம்பி வழிந்து தெருவெல்லாம் ஓடிற்று. சரியாகப் பிற்பகல் 4 மணிக்கு வந்த வண்டியில் தளபதி அண்ணாவுடன் வந்திறங்கினார் — திராவிடர்தம் போர்த்தலைவர் பெரியார்.

மலர்மாலைக்குள் பெரியார் மூழ்கிவிட்டார்

உடனே கட்டடம் அதிரப் பெரு முழக்கம் கிளம்பிற்று 'பெரியார் வாழ்க' என்று. வீறு பெற்றெழுந்த அந்த வீரக் கூட்டம் — வெஞ்சமர்க்குச் சளைக்காத செந்தமிழர் கூட்டம் வீர ஒலிகள் கிளத்தி, பெருத்த ஆரவாரம் புரிந்தது. மலர் மாலைகளைக் கூட்டம் கூட்டமாய்ச்சூட்டிற்று பெரியாருக்கு . புன்முறுவல் பூத்த முகத்துடனே அவர் பூமாலைக்குள் புகுந்துவிட்டார். செட்டி நாட்டிளவரசர் சர் முத்தையா செட்டியார், திருச்சி விசுவநாதன், பட்டுக்கோட்டை அழகிரிசாமி முதலியோர் பெரியாரை அன்புடன் வரவேற்றனர். பெரியார் வண்டியை விட்டு இறங்கியதும் அந்த மக்கட்கடலிடையே வழிவகுத்துக் கொடுத்தனர் தொண்டர் குழுவினர்.

மக்கட் கடல் நடுவில் சிங்க ஏறு

அச் சிங்க ஏறும் அனைவரையும் வாழ்த்திய வண்ணம் வண்டி நிலையத்தை விட்டு வெளிவந்து சாலை முழுதும் திரண்டிருந்த பெருங்கூட்டத்தில் கலந்து கொண்டார். — புறப்பட்டது ஊர்வலம் . 10,000 பேர் கொண்ட அந்த ஊர்வலம் கோச்சுவண்டியில் அமர்ந்துவந்த தலைவரைக் கண்டு களித்தவண்ணம் — வீர முழக்கம் எழுப்பியவண்ணம் சென்றது கடலோரம் நோக்கி .

தமிழர் நெஞ்சக் களிப்பு

"வானமும், தமிழர் உணர்ச்சிப் பெருக்கைக் கண்டு நெஞ்சம் பொறாத சில பேர்வழிகளின் முகமுமே அன்று கருத்துக் காணப் பட்டது. சிறு தூறலும் பெய்தது. பரிமளப் பனிநீர் எனக்கருதி, சென்னைத் தமிழரெலாம் பெரியாரின் பவனியில் கலந்துகொண்டனர். கவிகள் பாடினர். போரும் எம் பெரியாரை' என்று பூரித்துக் கூறினர். வரவேற்புகளும் வாழ்த்துக்களும் ஒன்றையொன்று

துரத்திக்கொண்டு ஓடோடி வந்தன . ஒவ்வொன்றையும் வாங்கி வாங்கிக் குவித்தார் பெரியார் ."* (குடிஅரசு 25—6—39 இதழில் தளபதி சி. என். ஏ . தீட்டிய தலையங்கம்)

கடற்கரைப் பெருங்கூட்டம்

ஊர்வலம் திருவல்லிக்கேணிக் கடற்கரையை வந்தடைந்ததும் நூறாயிரவர் திரண்டு குழுமிய பெரியதோர் கூட்டம் அங்கு . கடல் அலை ஒலிக்குச் சக்தி அதிகமா , அன்றி தமிழரின் முரசொலிக்குச் சக்தி அதிகமா என்ற போட்டி நடந்தது அன்று !"

அந்த அழகிய காட்சி

கடற்கரையில் எங்கு நோக்கினும் தமிழர்கள் ! தமிழ்ப் பெண்கள் ! தமிழ் வாலிபர்கள் ! தமிழ் வயோதிகர்கள்! ஏராளமான வெளியூர்த் தோழாகளும் அக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். ஆச்சாரி சர்க்காரின் அழைப்பை ஏற்றுக் கொண்டு சிறை சென்று மீண்ட தாய்மார்கள் ஒரு புறமும் தொண்டர்கள் மற்றொரு புறமும் அமர்ந்திருக்க , உயரமாக எழுப்பப்பட்ட மேடைமீது மின்சார விளக்கொளியுடன் இயக்கச் சின்னம் மின்ன, வெண்ணிறத்தாடி கடற்காற்றில் ஆடி அசைய , பிரகாசிக்கும் கண்கள் அங்குமிங்கும் பாய்ந்து பாய்ந்து நோக்க, பெரியார் மேடைமீது அமர்ந்திருந்த அந்த அழகிய காட்சியைத் தமிழர் என்றும் மறவார். அன்று கண்ட தமிழர் உற்சாகப் பெருக்கைப் பெரியாரும் என்றும் மறவார்.

அக் காட்சியைச் சரிதமும் மறவாது. தமிழ்நாட்டில் ஈரோட்டு வாடை வீசுகிறது, கிளர்ச்சிக் கடல் குமுறுகிறது என்பதை அந்தக் காட்சி விளக்கிக் காட்டிவிட்டது.'* (குடிஅரசு 25—6—39 இதழில் தளபதி சி. என். ஏ . தீட்டிய தலையங்கம்)

ரூ. 1001

முதலில் சர்வாதிகாரி நாயகம் முன்மொழிய, தளபதி அண்ணாதுரை பின் மொழிய , செட்டி நாட்டு இளவரசர் முத்தையா கூட்டத்திற்குத் தலைமை பூண்டார். பின் சென்னை நகரின் பல பகுதிகளில் உள்ள பல்வேறு சுயமரியாதை மன்றங்கள், தமிழர் கழகங்கள், நல உரிமைச் சங்கங்கள், மாணவர் அமைப்புகள், தொழிலாளர் நிலையங் கள், முஸ்லீம் லீக் கிளைகள்

முதலியவற்றின் சார்பாக, ஏராளமான வாழ்த்திதழ்கள் ஒன்றன் பின் ஒன்றாக வாசித்தளிக்கப்பட்டன. இது முடிந்ததும் சென்னைத் தமிழர் சார்பில் சி. என். ஏ. அவர்கள் ரூபா —1001 கொண்ட பணமுடிப்பைத் தலைவர் பெரியாருக்கு அளித்தார். பிற்பாடு , முஸ்லிம்கள் சார்பில் தாருல் இஸ்லாம்" ஆசிரியர் ப. தாவுத்ஷா பி.ஏ., ஆதித்திராவிடர் சார்பில் இராவ்சாகிப் என். சிவராஜ் பி. ஏ., பி. எல். எம். எல். ஏ... சுயமரியாதைக்காரர் சார்பில் பட்டுக்கோட்டை கே. வி. அழகிரிசாமி, "விடுதலை ' நாளிதழின் சார்பில் அதன் ஆசிரியர் அ. பொன்னம்பலனார், தொழிலாளர் சார்பில் சி. பாசுதேவ் பி. ஏ., பி.எல்., திருச்சி மாவட்டத்தின் சார்பில் கி.ஆ.பெ. விசுவநாதன் , துறவியர் சார்பில் சண்முகாநந்தா , வேலூர் வட்டாரத்துச் சார்பில் அண்ணல் தங்கோ , முன்னாள் அமைச்சர் எஸ். முத்தையா மற்றும் பலர் பெரியாரின் பெருந்தொண்டு தமிழரைத் தமிழராக்கிற்று என்பதை கணக்கெடுத்துப் பேசினர். இறுதியில் பெரியார் அரிய உரையாற்றினார். இந்த ஆண்டு 1001 தமிழர் சிறை சென்றதால் ரூபாய் 1001 நான் பெற்றேன். அடுத்த ஆண்டும் என் அருமை நண்பர் ஆச்சாரியார் அவர்களின் கருணை இருந்தால் ரூபாய் 10001 பெறுவேன். ஏன் எனில் ஆச்சாரியார் மட்டும் அடுத்த ஆண்டும், கட்டாய இந்தியை எடுக்காவிட்டால் 10001 தமிழர் சிறைசெல்ல மாட்டார்களா என்று பெரியார் அன்று சொன்னபோது, செல்வோம் செல்வோம் என்று தமிழரெல்லாம் அங்கு ஆர்ப்பரித்தனர்.

18—6—39 : இந்தி இன்றும் போகவில்லை . ஆகவே கோடை விடுமுறை தீர்ந்து இந்து தியாலாஜிகல் பள்ளி இன்று திறந்ததும் இந்திப் போரும் தொடங்கிற்று. மீண்டும் தமிழர் திரள் திரளாய்ச் சிறை செல்லத் தொடங்கினர்.

3—8—39: இன்று ஈரோடு 'விடுதலை' நிலையம் போலீசாரால் சோதனையிடப்பட்டது. ஏராளமான கடிதக் கட்டுகளும், கணக்குப் புத்தகங்களும், மணியார்டர் சீட்டுக்களும், நன்கொடைப் பட்டியலும் பிறவும் கைபற்றிச் செல்லப்பட்டன.

20—8—39 : இன்று காலை தோழர் அ. பொன்னம்பலனார் , தளபதி சி. என். அண்ணாதுரை ஆகியோருடன் பெரியார் அவர்கள் திருச்சிக்கு வந்தார். பெரியாரின் வருகையை எதிர்பார்த்தபடியிருந்த தோழர்களும் கான் சாகிப் காஜாமியான் ராவுத்தர், தோழாக ந.பா., தோழர்கள் தெ.பொ. வேதா சலம்,

கி.ஆ.பெ. விசுவநாதன் ஆகியோரும் பெரியாரை வரவேற்று, மாலை அணிவித்துப் பெருமகிழ்ச்சியுடன் திருச்சிக்கு அழைத்து வந்தனர். வாழ்த்தொலியுடன் பெரியாரும் நகருக்குள் பிரவேசித்தார்.

திருச்சிப் பாசறையில் பெரியார் !

திருச்சி நகரம் முழுவதும் அன்றொரு விழா நாள். எங்கு நோக்கிறும் தோரணங்கள் பச்சைப் பசேலென மின்னின் . கொடிகள் கம்பீரமாகப் பறந்தன. நீதிக் கட்சியின் சிங்காரச் சிகப்புக் கொடியும் தமிழரின் மூவேந்தர் கொடியும் அலங்கார வளைவுகளும் முகமன் மொழி பொறிக்கப்பட்ட அட்டைக்கும் திருச்சியை அழகுபடுத்தின. தெருவெல்லாம் மக்கள் கும்பல் கும்பலாக நின்று கொண்டி இருந்தனர் பெரியாரைக் காண .

பெரியார் பீமநகர், தென்னூர் முதலிய பல பாகங்களுக்குக் காரில் அழைத்துச் செல்லப்பட்டார். அதோ பெரியார், தங்கத் தாத்தா போகிறார் , எங்கள் தலைவர் வந்து விட்டார் , வாழ்க பெரியார் என்ற ஒலி வளைத்துக் கொண்டது மோட்டாரை.

ஊர்வலச் சிறப்பு

பகல் விருந்து நடந்த பிறகு, மாலை, திருச்சி பாலக்கரையிலிருந்து பிரமாண்டமான ஊர்வலப் புறப்பட்டது. அலங்காரம் செய்யப்பட்ட அழகிய மோட்டாரில் பெரியார் அமர்ந்தார். ஊர்வலம் அதிர்வெடியுடனும் அதனை அடக்கிய வாழ்த்தொலியுடனும் ஆரம்பமாயிற்று. தொடக்கத்திலேயே பத்தாயிரம் பேருக்கு மேல் கூடிவிட்டனர். ஊர்வலம் செல்லச் செல்ல, தமிழர்கள் கடலெனத் திரண்டெழுந்து அண்டம் அதிர அன்புமுழக்கம் செய்தனர். கடை வீதியின் ஓரங்களிலும் மாடிகளிலும் நூற்றுக்கணக்கானவர்கள் பெரியாரைக் காணவேண்டிக் கூடி நின்றனர். ஊர்வலத்தின் திரள் பிரமிக்கத்தக்கதாக இருந்தது. குறைந்தது 40,000 மக்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். இளைஞர்களின் உற்சாகத்திற்கு எல்லையில்லை.

உள்ளம் உருக்கும் காட்சி

எவரும் வாழ்த்துக் கூறினார். எங்கும் மாலைகள்; யார் கண்களும் பெரியார் பக்கம் திருச்சி கடைவீதி மிக அலங்காரமாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது.

ஆங்காங்கு அன்பர்கள் ஊர்வலத்தை நிறுத்தி, பெரியாரின் கார் நிரம்பி வழியுமளவு மலர்மாலைகளை அணிவித்தனர். மாடிகளிலிருந்து மலர் மாரியும் பூமாரியும் பொழியப்பட்டன. பல்வேறு சங்கத்தார் பெரியாரிடம் தமக்குள்ள ஆர்வத்தை உணர்த்த ஆங்காங்கு வளைவுகளை அமைத்து வாழ்த்தொலி கூறினார். வெளிநாடு சென்று வென்று தந்தாடு திரும்பிய கொற்றவரும் காணத் கரிய களிப்பைப் பெரியார் அன்று கண்டார். தமிழர் திரண்டெழுந்து அணிவகுத்து நின்று, ஆரவாரம் செய்து, "பெரியார் வாழ்க, நீதிக்கட்சித் தலைவரே வாழ்க, சுயமரியாதைச்சுடரே வாழ்க, தமிழரின் தலைவா வருக , சிறைக் கஞ்சாச் சிங்கமே வருக என வாழ்த்துவது கண்டு பெரியாரின் மனம் உள்ளபடியே உருகிவிட்டது.

களிப்புக்கடலில் குளித்தனர் தமிழர்

ஊர்வலம் கடைவீதி வழியாகச் சென்று திருச்சி நகரின் முக்கிய வீதிகளைத் தாண்டி உறையூர் அடைந்தது. உறையூர் உற்சாகத்தின் உறைவிடமாகக் காட்சி தந்தது. களிப்புக் கடலில் குளித்தனர் தமிழர். வழியில் ஓரிடத்தில் அழகமைந்த வளைவு ஒன்றில் தாமரை மொக்குப் போன்ற உருவொன்று தோரணத்தில் கட்டி விடப்பட்டிருந்தது. பெரியாரின் மோட்டார் அந்த வளைவை அடைந்ததும், அந்தத் தாமரை தன் இதழ்களை விரித்து மலர்ந்து பெரியார் மீது இதழ்களைத் தூவிற்று. உள்ளிருந்து ஓர் உருவம் கையில் மலர்மாலையுடன் இறங்கி மாலையைப் பெரியாருக்கு அணிவித்துவிட்டு மீண்டும் மொக்குக்குள் சென்று மறைந்துவிட்டது. பெரியாரின் காரும், அந்த வரவேற்பை பெற்றுக்கொண்ட பின்பு, அசைந்து ஆடிக் கொண்டு , தென்னூரைக் கடந்து புத்தூர் புகுந்து, அங்குள்ள மைதானத்தை அடைந்தது. மாலை 5. மணிக்குத் துவக்கப்பட்ட ஊர்வலம் முடிவடைய 8 மணி ஆகிவிட்டது.

புத்தூர் மைதானத்தில் பெருங்கூட்டம்

புத்தூர் மைதானம் அன்று மக்கட்கடலாக விளங்கிற்று. எங்கு நோக்கினும் தமிழர்கள். அவர்களின் சிங்காரக் களிப்பை எடுத்துக்காட்ட விளக்குகள். பெரியார் அமரத் தனிப்பட்ட ஒரு மேடை; அவர் மொழியைப் பரப்ப ஒலி பெருக்கி ; அவரது கட்சியின் சின்னமாம் தராசு மின்சார விளக்குகளால் சித்திரிக்கப்பட்டுச் சிறப்புடன் விளங்கிற்று. ஒத்த உரிமை நலம் — பளிச்சென ஒளி வீசிற்று. பெரியார் மைதானத்தை வந்தடைந்ததும் அதிர்வேட்டுகள்

கிளம்பின. அந்த வேட்டுகளினின்றும் நீதிக்கட்சி , முஸ்லிம் லீக், தமிழர் கொடிகள் கிளம்பின ; வானத்திலே பறந்தன. (விடுதலை 27—8—39)

இந்த அழகிய காட்சிக்கிடையே கூட்டம் தொடங்கிற்று. தோழர் காஜாமியான் ராவுத்தர் கூட்டத் தலைவர். பெரியாருக்கு 1001 ரூபாய் பணமுடிப்பு அளிக்கப்பட்டது .பின்னர்ச் சொற் பொழிவுகள் பல நிகழ்ந்தன.

மாவட்டந்தோறும் பணமுடிப்பு, பெருங்கூட்டம், வரவேற்பு

1939 ஜூன், ஜூலை , ஆகஸ்டு , செப்., அக்., நவ. டிசம்பர் ஆறு திங்களும் பெரியார் தமிழ்நாட்டைப் பவனிவந்தார். ஜூலை 30—ல் வடார்க்காடு மாவட்ட ஜஸ்டிஸ் மாநாடு வடசேரி என்னும் சிற்றூரில், தென்னஞ்சோலைகளினிடையே தென்றல் புகுந்து இன்பம் விளைவிக்கும் இனிய சூழலுக்கிடையே அமைக்கப்பட்ட அழகிய பந்தலில் தோழர் சௌந்தரபாண்டியன் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அங்கு வடார்க்காடு மாவட்டச் சார்பாகப் பெரியாருக்கு 1001 ரூபாய் பணமுடிப்பு அளிக்கப்பட்டது. சென்னை — திருச்சி — டார்க்காடு மட்டுமன்றி, கோவை மாவட்டத்தின் சார்பில் ஈரோட்டிலும், இராமநாதபுரம் மாவட்டத்தின் சார்பில் விருதுநகரிலும், சேலம் மாவட்டத்தின் சார்பில் சேலம் நகரிலும் தனித்தனி 1001 ரூபாய் பண முடிப்புகள் தரப்பட்டன. சிங்கப்பூர் தோழர்கள் தமிழ்முரசு ஆசிரியர் தோழர் சாரங்கபாணி மூலம் ரூபாய் 1001 அனுப்பி வைத்தனர். கோவைப் பிரமுகர்கள் அய்வர் தம் சொந்தப் பொறுப்பில் ரூபாய் 505 அனுப்பித் தந்தனர். செங்கற்பட்டுத் தோழர்கள் ரூபாய் 501—ம் , திருவண்ணாமலை வட்டாரத்தினர் ரூ.800—ம், கும்பகோணம் தோழர்கள் ரூபாய் 300—ம், திண்டுக்கல் தமிழர்கள் 250—ம், காஞ்சீபாக் தினர் 250—ம், தூத்துக்குடியினர் 250—ம் காணிக்கை தந்துனர் 16—7—39—ல் கூடிய இராமநாதபுரம் மாவட்டத் தமிழர் மாநாடு ரூபாய் 250 கொடுத்தது. இவை தவிர சிவகங்கை திண்டிவனம், உடுமலைப்பேட்டை, திருப்பூர், சூலூர் பொள்ளாச்சி மற்றும் பல இடங்கள் ரூபாய் 101 கொண்ட பணமுடிப்புகளைப் பெரியாருக்கு அளித்தன. சிங்கப்பூர் தவிர்த்த பிற இடங்களுக்கெல்லாம் பெரியார் நேரில் சென்று, ஆங்காங்கு அளிக்கப்பட்ட சிறப்பான வரவேற்புகளை அன்புடன் ஏற்று, பொதுக்கூட்டங்களில் வீர உரை ஆற்றி, தமிழரை எல்லாம் கண்டு பேசி டிசம்பர் இறுதியில் ஈரோடு திரும்பினார்

# 11. வெற்றி முரசு கொட்டடா !

[ஆச்சாரியார் ஆட்சி கவிழ்ந்ததும், புது ஆட்சியினருக்குச் சிந்திக்கச் சற்றுநேரம் தருவதற்காக இந்திப்போர் மறியலை மட்டும் சில நாளைக்கு நிறுத்தி வைக்குமாறு போர்த்தலைவர் ஆணை பிறப்பித்ததும், அவ்வாறு நிறுத்தி வைக்கப்பட்ட காலத்தில் இந்திப்போர் வீரர்கள் அனைவரும் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டதும், இனி எந்தப் பள்ளிகளிலும் புதிதாக இந்தியைப் புகுத்துவதில்லை என்று அரசியலார் அறிக்கை வெளியிட்டதும், இவை எல்லாம் சரி, ஆனால் இந்திக் கட்டாயத்தை ஏன் ஒழிக்க வில்லை" என்று காஞ்சீபுரத்தில் தமிழர் பாசறைக் கூட்டம் அமைத்ததும், இதுதான் இறுதி எச்சரிக்கை ; இந்தியை ஒழித்துக் கட்டப்போகிறீர்களா இல்லை, நான் போர் தொடுக்கட்டுமா?" என்று பெரியார் சென்னையில் போர் முழக்கம் புரிந்ததும், உடனே இந்திக் கட்டாயம் தொலைந்ததும், தொலையவே தமிழன் வெற்றி முரசு கொட்டியதும், இவற்றின் தொடர்பான பிற நிகழ்ச்சிகளும் இங்கு விளக்கப் படுகின்றன.)

தலைவர் தாக்கீது

சில அரசியல் காரணங்களை முன்னிட்டு ஆச்சாரியார் ஆட்சி 27—10—39—ல் கவிழ்ந்துவிட்டது. அதன்பின் சென்னை கவர்னரே தம் சொந்த மேற்பார்வையில் ஆட்சியை நடத்தினார். இந்தியைப் பார்ப்பனீய ஆட்சி தமிழர் மீது கட்டாய பாடமாகப் புகுத்தியதை எதிர்த்துத் தமிழர் செய்து வரும் தீவீர கிளர்ச்சியை , அந்த ஆட்சி அழிந்து வேறு ஆட்சி ஏற்பட்டிருப்பது முதலிய சில காரணங்களை மூன்னிட்டு நிறுத்தி வைத்துப் பார்க்க வேண்டும் என்று தலைவர்கள் பலர் வேண்டிக் கொண்டதற்கிணங்க தீவிர கிளர்ச்சியை மட்டும் கொஞ்ச நாளைக்கு நிறுத்தி வைக்க வேண்டுமாய்த் தலைவர் பெரியார் அவர்கள் 31—10—39—ல் தமிழருக்குத் தாக்கீது விடுத்தார். அதன்படி அன்று முதல் மறியல் போர் நிறுத்திவைக்கப்பட்டது. அன்று வரை சிறைபுகுந்திருந்த தமிழர் தொகை 1271. இதில் ஆண்கள் 1166; பெண்கள் 73; குழந்தைகள் 32. சென்னையில் சிறை புகுந்தோர் 1255. சேலத்தில் சிறைபுகுந்தோர் 16. இந்திப் போராட்டத்திற்காக அதன் பின்னர் சிறை வாசம் நேரவில்லை .

செல்வம் அறிக்கை

11—11—39 : இந்தி எதிர்ப்பு நீண்ட நாளையதென்றும், 1930—ல் கூடிய நன்னிலம் சுயமரியாதை மாநாட்டிலும் அதற்கும் முன்னமே 1926—ல் குடி அரசிலும் இந்தி கண்டிக் கப்பட்டிருக்கிறது என்றும், இந்தி எதிர்ப்பின் நோக்கம் திராவிடர் கலை — மொழி — நாகரிகம் — பண்பு — பழக்கவழக்கம் கொள்கை — கோட்பாடு ஆகியவற்றை ஆரியப் படையெடுப் பினின்றும் காப்பாற்றுவதே என்றும், அய்ரோப்பியப் பெரும் போரில் ஆங்கிலேயர் ஈடுபட்டிருப்பதால் அவர்கட்குத் தொல்லை தரக்கூடாது என்பதற்காகவே இந்தி எதிர்ப்புத் தீவிரக் கிளர்ச்சி நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது என்றும், இப்பெருந்தன்மைக்கேற்ப அரசியலாரும் இப்போது இந்தி எதிர்ப்புக் காரணமாகச் சிறையில் உள்ளோர் அனைவரையும் விடுதலை செய்து கட்டாய இந்தியை ஒழித்துக் கட்ட வேண்டும் என்றும் நன்கு விளக்கி சர் பன்னீர்செல்வம் அவர்கள் இன்று ஓர் அறிக்கை விடுத்தார்.

தொண்டர் விடுதலை

18—11—39 : இன்று இதுவரை இந்தியை எதிர்த்ததற்காகச் சிறையில் கிடந்துழன்ற தோழர்கள் அனைவரும் விடுதலை ஆயினர். இவர்களை விடுவித்ததற்குத் தமிழர் சார்பில் நன்றி — ஆனால் அவர்கள் எந்தக் காரணத்திற்காகச் சிறைப்பட்டனரோ அந்த இலட்சியம் நிறைவேறவில்லை — இந்தித் திட்டத்தைத் தகர்த்தெறிந்து இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை நிறுத்திவிட வசதி தருக — கட்டாய இந்தி போகாதவரை தமிழ் மக்களுக்குச் சாந்தியோ சமாதானமோ திருப்தியோ ஏற்படாது" என்னுங் கருத்துடைய கூட்டு அறிக்கை ஒன்று ஒன்று தலைவர் பெரியார், சர் செல்வம், குமாரராஜா மூவர் கை ஒப்பத்துடன் வெளியிடப்பட்டது.

17—11—39: இன்று கட்டாய இந்தி தொலைக என்னும் தலைப்பில் சென்னை ஆங்கில நாளேடு மெயில் " ஒரு தலையங்கம் தீட்டியிருந்தது.

மேற்கொண்டு இந்தி இல்லை

27—11—39: ஆண்டாண்டு தோறும் இந்தி வைக்கப்படும் பள்ளிகளை அதிகப்படுத்துவது என்னுந் திட்டப்படி 1938—39 ஆம் ஆண்டில் 125 பள்ளிகளில் இந்தியைப் புகுத்திய ஆச்சாரியாரின் ஆட்சி, 1939—40 ஆம் ஆண்டு மற்றுமோர் 100 பள்ளிகளில் இந்தி வைக்க உத்திரவு

பிறப்பித்திருந்தது. அந்த உத்திரவு புதிய ஆட்சியினரால் இன்று மாற்றப்பட்டது. இனி இந்தி வைப்பதில்லை என்ற உறுதியும் தரப்பட்டது.

3—12—39: இன்று நாடு முழுதும் இந்தி எதிர்ப்பு நாள் கொண்டாடப்பட்டது.

10—12—39: இன்று தமிழ்நாடு தமிழருக்கே நாள்.

18—12—39: இன்று பெரியாருடைய 61ஆவது பிறந்த நாள் விழா . காஞ்சியில் மீண்டும் பாசறைக் கூட்டம்

31—12—39: இந்தி எதிர்ப்புத் தொண்டர்கள் விடுதலை செய்யப்பட்டு, மேலால் இந்தி புகுத்துவதில்லை என்ற உறுதியும் தரப்பட்டதே தவிர இப்போது இந்தி வைக்கப்பட்ட பள்ளிகளிலிருந்து அதை ஒழிக்கப் புதிய ஆட்சியும் ஆவன செய்யவில்லை. இதுகண்ட தமிழர் மீண்டும் போர் முரசு கொட்டினர். காஞ்சியில் கூடினர். இன்று நடை பெற்ற பாசறைக் கூட்டத்திற்குச் சர் பன்னீர்செல்வம் தலைமை ஏற்றார். சர் செல்வம் இந்தி எதிர்ப்பு இயக்க வரலாற்றை முதலிலிருந்து விளக்கிக் கூறி, எதிர்கால வேலைத்திட்டம் இவ்வண்ணம் இருக்க வேண்டும் என்றும் வழிவகுத்துக் கொடுத்தார். தலைவர் பெரியார் அவர்கள் "இந்தி ஒழிய வேண்டும் இல்லையேல் தமிழர் சிறையில் மடிய வேண்டும்' என்று முழங்கினார். அதன்பின் தளபதி அண்ணாதுரை, முதல் சர்வாதிகாரி நாயகம், பதினோ ராவது சர்வாதிகாரி ரோசம்மாள், குகை ஜெகதீசன், சேலம் சித்தையன், சென்னை மலர்முகத்தம்மையார், தேவசுந்தரம், அருணகிரி அடிகள், இராவ்சாகிப் செந்தில் குமார நாடார் உள்ளிட்ட பலர் இந்திப்போர் வெல்க என வீர ஒலி செய்தனர். கூட்டத்தினர் இறுதியில் கீழ்க்காணும் முடிவுகளைச் செய்தனர்.

பாசறை முடிவுகள்

(1) இந்திப்போரில் ஈடுபட்டுச் சிறை சென்ற வீரர்கட்கும் வீராங்கனைகட்கும் இப்பாசறைக் கூட்டம் நன்றி செலுத்துகிறது.

(2) அவர்களில் பெரும்பாலோர் மீண்டும் கிளர்ச்சி தொடங்கினால் முன்போல் தொண்டாற்றத் தயார் என்று தாமே முன்வந்து தெரிவித்திருக்கும் தமிழ்ப்பற்றிற்கும் வீரத்திற்கும் இக் கூட்டம் தன் மகிழ்ச்சியை அறிவிக்கிறது.

(3) பெரியார் இட்ட கட்டளைக்கு இணங்கி மறியலைத் தற் போதைக்கு நிறுத்தி வைத்த தமிழர் கட்டுப்பாட்டுணர்ச்சி கண்டு இக் கூட்டம் பெரு

மகிழ்ச்சியடைகிறது.

(4) இந்தி எதிர்ப்புக் கைதிகளை விடுவித்ததற்கும் மேற்கொண்டு நூறு பள்ளிகளில் புகுத்தப்பட இருந்த இந்தியை நிறுத்தியதற்கும் கவர்னர் ஆட்சிக்குப் பாராட்டுதலையும், கட்டாய இந்தியை இன்னும் எடுக்காததற்காகத் தன் அதிருப்தி நிறைந்த வருத்தத்தையும் இக்கூட்டம் தெரிவிக்கிறது.

(5) கட்டாய இந்தித் திட்டம் தொலையாதவரை திராவிட நாட்டில் தமிழ் மக்களுக்கு நிலையான அமைதியும், மன நிறைவும் ஏற்பட முடியாதென்பதை அரசியலாருக்கு அறிவித்துக் கொள்வதோடு கட்டாய இந்தித் திட்டத்தை அரசியலார் அடியோடு அழித்துவிடும்படி செய்வதற்கான வேலைத்திட்டங்களையும் நடைமுறைகளையும் வகுத்து நடத்த அடியிற்கண்டவர்கள் அடங்கிய இந்தி எதிர்ப்பு வாரியத்தை (Committee) இக் கூட்டம் அமைக்கிறது : 1. தலைவர் பெரியார், 2. சர் பன்னீர் செல்வம், 3. குமாரராஜா சர் முத்தையா, 4. ஊ . பு . அ . சௌந்தர பாண்டியன் , 5. பேராசிரியர் பாரதியார், 6. நெடும்பலம் சாமியப்பா எம். எல்.சி., 7. செ.தெ.நாயகம், 8. திரு வொற்றியூர் சண்முகம், 9. எம். தாமோதரம் பி.ஏ., பி.எல். 10. சி. பாசுதேவ் பி. ஏ., பி.எல்., 11. டி. ஏ. வி. நாதன் பி. ஏ., பி.எல்., 12. சாமி சண்முகாநந்தம், 13. சாமி அருணகிரிநாதர், 14. வி. பி. எஸ். மணியர், 15 கந்தம் ரோசம்மாள், 16. சி. என். அண்ணாதுரை எம். ஏ. (செயலாளர்).

பம்பாய்க்குப் பெரியார்

5—1—40 : நீண்ட நாள்களாகப் பம்பாய்த் தோழர்கள் வற்புறுத்தி வந்ததற்கிணங்க இன்று பெரியார் பம்பாய்க்கும் புறப்பட்டார். தளபதி அண்ணாதுரை , டி. ஏ. வி. நாதன், டி. பி. எஸ். பொன்னப்பா , கே. எம். பாலசுப்பிரமணியம், சி. பஞ்சாட்சரம், சண்டே அப்சர்வர் — பி. பாலசுப்பிரமணியம் ஆகியோருடன் அவர் அங்குச் சென்று வந்தார். சென்னை சென்ட்ரலில் கான்பகதூர் கலி புல்லா, குமாரராஜா உள்ளிட்ட பெருங்கூட்டம் அவரை வாழ்த்தி வழியனுப்பியது. வழி நெடுகப் பல வண்டி நிலையங்களிலும் பெரியாருக்கு மக்கள் வாழ்த்துக் கூறினர்.

6—1—40 : இன்று தமிழர் தலைவர் பம்பாய்க்கடுத்த தாதர் புகைவண்டி நிலையத்திற்கு வந்து சேர்ந்ததும் தாதர் வட்டாரத்துத் தமிழர்கள் அவருக்கு அளித்த வரவேற்பு, கண்கொள்ளாக் காட்சி ! தமிழ் வாழ்க ! இந்தி வீழ்க ! என்னும் ஒலி அத்தமிழர் கூட்டத்தினின்றும் திரண்டெழுந்த பொழுது, ஏது! தமிழ் நாட்டின் ஒரு பகுதியைப் பிரித்தெடுத்துப் பம்பாயுடன் ஒட்டி விட்டார்களோ என்னும் அய்யப்பாடு எல்லாருக்கும் எழுந்தது.

தாதர் வட்டாரத்துத் தமிழர் அனைவரும் அன்று அங்குத்தான் குழுமி இருந்தனர். உணர்ச்சியும் எழுச்சியும் அவர்கள் பால் பொங்கித் ததும்பிற்று. ஒவ்வொரு தமிழர் முகத்திலும் களிப்புக் கூத்தாடிற்று. அன்று அவர்களுக்குத் திருநாள். ஒவ்வொருவர் சட்டைப்பையிலும் பெரியார் படம். ஒவ்வொருவர் உள்ளத்திலும் தமிழ் அன்பு. தாராவியில் தமிழன்பு

பெரியார் தங்கும் இடத்தை அடைந்ததும் அந்தப் பகுதியின் தமிழரெல்லாம் வந்து வந்து அவரிடம் சேதி பேசிக் கொண்டு இருந்தனர். அவரும் அந்த வெண்தாடியை அசைத்தவண்ணம் நகைச்சுவையை அறிவுச் சுவையுடன் கலந்து கலந்து வீசிக்கொண்டு இருந்தார். முற்பகல் முழுதும் இது. பிற்பகல், டைம்ஸ் ஆப் இந்தியா, ஜாமேஜம்ஷட் முதலிய பல பத்திரிகைகளின் நிருபர்களுடன் நீண்ட நேரம் உரையாடிக்கொண்டு இருந்தார். தம்மைப் பற்றி, தமிழர் இயக்கத்தைப் பற்றி, இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைப் பற்றி , தென்னாட்டில் மூண்டெழுந்து அறிவுச் சுடரை யாண்டும் பரப்பிவந்த தன்மான இயக்கத்தைப்பற்றி, இன்னபிறவற்றைப் பற்றி அவர்கள் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் பெரியார் தக்கவிடை தந்து கொண்டு இருந்தார். மாலையில் தாராவியில் பெரியாருக்கு வரவேற்பு ஊர்வலம்! இரண்டு வெண் புரவிகள் பூட்டிய அழகிய 'கோச்சில் தலைவர் ஈ. வெ. ரா. வை அமர வைத்து, பெருங்களிப்புடன் மக்கள் ஊர்வலமாய்ச் சென்றனர். மகேம் புகை வண்டி நிலையத்திலிருந்து தாராவி நிலையம் வரையில் ஊர்வலம் சென்றது. இரவு ஏழு மணிக்குக் கூடிய பொதுக்கூட்டத்தில் தமிழ்க் கொடி ஏற்றினார் பெரியார். அன்றிரவு பெரியார் — அம்பேத்கார் சந்திப்பு.

7—1—40 : இன்று காலை அசோசியேடட் பிரஸ் நிருபர், மகாகனம் எம். ஆர். ஜெய்கர், மராத்திய தலைவர் ஜாதேவ் முதலியோருடன் பெரியார் பேசினார். மாலை 4 மணிக்குத் தலைவர் ஈ. வெ. ரா. வுக்கு அம்பேத்கார் விருந்து.

பம்பாய் சென்டினல், 'ஜாமேஜம்ஷெட் , டைம்ஸ் அப் இந்தியா, நஸரத், சந்ஜ்வர்த்மான் முதலிய இதழாசிரியர்கள், பல பத்திரிகை நிருபர்கள், சட்டசபை உறுப்பினர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், அரசியல் தலைவர்கள், வழக்கறிஞர்கள், நகரசபை உறுப்பினர்கள் முதலியோர் விருந்துக்கு வந்திருந்தனர். யாவரும் பெரியாருடன் அளவளாவினர்.

மாலை 6 மணிக்குத் தாராவி தாலே கில்லாவில் டாக்டர் அம்பேத்கார் தலைமையில் பெருங்கூட்டம். பல கழகங்களின் சார்பில் பெரியாருக்கு வாழ்த்துரை மடல்கள். பம்பாய்த் தமிழர் சார்பில் பெரியாருக்குப் பணமுடிப்பு. பெரியாரின் 3 மணி நேரச் சொற்பொழிவு. இரவு 9 மணிக்கு அவ்வூர் ஆதித்திராவிட இளைஞர் மன்றத்தின் ஆண்டுவிழா . தலைவர் பெரியார், தளபதி அண்ணாதுரை இவர்கள் பேச்சு.

8—1—40 : இன்று அம்பேத்கார் — பெரியார் — ஜின்னா கூட்டு உரையாடல். இந்தியாவில் உள்ள ஆரிய ஆதிக்கத்தை அடியோடு ஒழித்துக்கட்ட ஒரு கூட்டு முன்னணி அமைப்பதென மூவரும் முடிவு செய்தனர்.

9—1—40 : மகாகனம் ஜெய்கரிடம் இன்று பெரியார் மூன்று மணி நேரம் உரையாடிக்கொண்டு இருந்தார். பேச்சு பெரிதும் சுயமரியாதை இயக்கத்தைப் பற்றித்தான்.

10—1—40, தோழர்களிடம். பிரியா விடை பெற்றுப் பெரியார் இன்று சென்னைக்குப் புறப்பட்டார் .

என்று போர் ! என் தாமதம் ?

பம்பாயிலிருந்து திரும்பியதும், பெரியார், பொறுத்தது போதும் — போர் தொடுப்போம் இனி " என்று எழுச்சிப் பாசுரம் இசைத்தார். அதிதீவிரக் கிளர்ச்சியைத் தொடங்குவேன், இனிச் சிறிதும் ஓயமாட்டேன் என்று புரட்சி மொழி பேசினார் போர் தொடங்குமுன் என் நாடு முழுதும் மிக வேகமாக ஒரு சுற்றுச் சுற்றி என் நாட்டின் நாடி பார்த்திடுவேன் என்று மிக விரைந்து நாடு முழுதும் சுற்றுப் பயணஞ் செய்தார். திருச்சி, மதுரை வடார்க்காடு , நெல்வேலி மாவட்டங்களுக்குச் சென்றார். துடிதுடிக்கும் உணர்ச்சியுடன் என்று போர் , ஏன் தாமதம் என்று கேட்கும் இனங்காளைகளைக் கண்டார். போர் உண்டு பொறுத்திடுவீர்' என்று உரை பகர்ந்தார். எம். எஸ். எம் புகை வண்டிப்பாதை

வழியாக ஒன்றும், எஸ். அய், ஆர். வழியாக ஒன்றும் ஆக இரண்டு தமிழர் பெரும் படைகள் திருச்சி, கோவை, ஈரோடு, மதுரை முதலிய ஏதேனும் இரண்டு முக்கிய நகரங்களினின்றும் சென்னைவரை செல்லத் திட்டம் தீட்டினார். நாள் அதிகம் ஆயிற்று; இனிப் பொறுத்தல் இல்லை" என்று சொல்லி அவர் சட்டென்று பயணத்தை நிறுத்தி, பிப்ரவரி 16—ல் சென்னைக்கு வந்தார்.

பெரியாரின் இறுதி எச்சரிக்கை

18—2—40—ல் சென்னையில் கூடிய கூட்டத்தில் இந்தி ஒழிக என முழங்கினார். அடுத்த நாள் 19—2—40—ல் சென்னை கோகலே மன்றத்தில், இதுவே இறுதி எச்சரிக்கை. இனிப் பேச்சில்லை செயலே தான். இந்திக் கட்டாயத்தைத் தவிடுபொடியாக்குவதே இனி வேலை. கட்டாய இந்தியைத் தொலைப்பாரா இல்லையா? என் சொல்கின்றார் இந்த ஆட்சியினர் " என்று கேட்டார். தமிழர் உள்ளக் கொதிப்பைச் சற்றேனும் பொருட்படுத்தாததால் சென்னை கவர்னர் பிரிவுபசார விருந்துகளில் கட்சியினர் கலந்துகொள்ளக்கூடாது. என்னுந் தீர்மானமும் 26—2—40—ல் கூட இருந்த ஜஸ்டிஸ் கட்சி செயற்குழுக் கூட்டத்தில் வர இருந்தது.

தொலைந்தது கட்டாய இந்தி

19—2—40— ல் பெரியார் இறுதி எச்சரிக்கை விடுத்தார். 21—2—40—ல் தொலைந்தது கட்டாய இந்தி. இடையில் ஒரே நாள் ! ஆனால் அந்த ஒரே நாளில் பெரியாரின் பேச்சு எவ்வளவு சிறந்த பயனைத் தந்துவிட்டது ! ஆம் கட்டாய இந்தி தொலைந்தது. தமிழ் உலகத்தை மூன்றாண்டுகள் கலக்கி வந்த கட்டாய இந்தி தொலைந்தது. இளங்காளைகளைச் சிறைக்கு அனுப்பிக் கல் உடைக்கச் செய்து, செக்கிழுந்தச் செய்து செத்த வாழ்வு வாழச் செய்த கட்டாய இந்தி தொலைந்தது. 73 தமிழ் வீராங்கனைகளை வெஞ்சிறைக்குத் தள்ளிய கட்டாய இந்தி தொலைந்தது. 32 பச்சைப் பசுங்கிள்ளைகளைச் சிறை பிடித்த அந்த ஆணவம் பிடித்த இந்திக் கட்டாயம் தொலைந்தது; தொலைந்தே போயிற்று.

கட்டாய இந்தி அழிந்து போயிற்று. அறுபது வயதுங் கடந்த அரும்பெரும் தலைவரை மூன்றாண்டு சிறை வாசம் செய்வீர் என்று சொன்னபின்னர் அழிந்து

போயிற்று. ஒரு நடராசனை, ஒரு தாளமுத்துவைத் தன் கொடும் பசிக்கு இரையாக்கிக் கொண்ட பின்னர் அழிந்து போயிற்று. தன்னை அரியணைக்கேற்றிய ஆச்சாரி ஆட்சியினை முன் அழித்துப் பின்னர்தான் அழிந்து போயிற்று

— என்றைக்கு இருபதாம் நூற்றாண்டின் சிந்தனைச் சிற்பியை ஆச்சாரியார் ஆட்சி சிறை பிடித்ததோ , அன்றைக்கே தொடங்கிற்று கட்டாய இந்திக்குப் போங்காலம். 6—12—38—ல் பெரியார் சிறை புகுந்தார். அது கேட்டுத் தமிழ் உலகம் குமுறிற்று. குமுறல் கண்டு அஞ்சிய ஆட்சியினர் 22—5—39—ல் அவரை விடுதலை செய்தனர். 7—6—39—ல் சிறை சென்ற தோழர் எல்லாம் விடுதலை ஆயினர். 21—10—39—ல் ஆச்சாரியார் ஆட்சி அழிந்தது. 15—11—39—ல் இந்திப் போர் வீரர்கள் இரண்டாம் முறையாக வீடுதலை ஆயினர். 27—11—39—ல் இனிமேல் இந்தியில்லை என்னும் உத்திரவு பிறந்தது. 21—2—40— இந்திக் கட்டாயம் முழுதும் தொலைந்தது. உள்ளபடியே பெரியாரைச் சிறைவைத்த அந்தச் செயலே இந்திச் சட்டத்தை வெடி வைத்துத் தகர்த்தெறிந்தது என்று சொல்ல வேண்டும்.

21—2—40—ல் பிறந்த அரசியலார் அறிக்கை இது : "கட்டாய இந்திமுறை பொதுமக்களில் பெரும்பாலோரிடையே எதிர்ப்பையும் அதிருப்தியையும் விளைத்திருக்கின்றது. முதல் மூன்று பாரங்களில் தேர்வு எதுவுமில்லாமல் இந்தியைக் கட்டாய பாடமாக மட்டும் கற்றுக் கொடுப்பதால் மாணவர்களுக்கு அந்த மொழியில் போதிய அறிவோ திறமையோ ஏற்படாதென அரசியலாருக்குத் தோன்றுகிறது. ஆகவே அரசியலார் இந்திக் கட்டாயத்தை உடனே எடுத்து விடுவதென முடிவு செய்துவிட்டனர்".

அரசியலார் இந்திக் கட்டாயத்தைத் தொலைத்தனர் என்றறிந்து, சென்னை மெயிலும் பம்பாய் சோஷியல் ரிபார்மரும், நாகபுரி இதவாதாவும், இது மிக நேர்மையான முடிவு " என்று எழுதின. "தமிழா நீ வென்றாய், உன் வெற்றிக்கு என் வாழ்த்து" என்றது சிங்கப்பூர் — தமிழ் மூரசு. இந்திய சட்டசபையின் தென்னாட்டு உறுப்பினர்களாகிய சர் பாத்ரோ , இராவ்சாகிப் சிவராஜ், ராஜா சர் அண்ணாமலை செட்டியார், சர் தேவதாஸ், சர் . இரா முண்ணிமேனன் இவர்கள் அனைவரும் இந்த உத்திரவைப் பாராட்டுகிறோம் என்று ஒரு கூட்டு அறிக்கை விடுத்தனர். இந்திய சட்ட சபை முஸ்லிம்லீக் கட்சி பெரியாருக்குப்

பாராட்டுதல் அனுப்பிற்று. இஸ்லாமியர் தலைவர் ஜனாப் ஜின்னா "இந்திப் போரில் நீர் வெற்றி பெற்றீர். உமக்கு என் மனம் நிறைந்த வாழ்த்து " என்று பெரியார் அவர்களுக்குப் பாராட்டுத் தந்தி அனுப்பினார். மறைந்த வீரன் நடராசனின் தந்தை தம் மகனை இழந்த கொடுந்துயரம் இந்தி ஒழிந்த மகிழ்ச்சியால் தான் ஆறிற்று என்ற அறிக்கையை விடுத்தார். 26—2—40— ல் கூடிய நிர்வாக சபைக் கூட்டத்தில் ஜஸ்டிஸ் கட்சி தன் பெருமகிழ்ச்சியை எடுத்துச் சொல்லிற்று.

அத்தனைக்கும் மேலாக, இந்திப் போரில் வெற்றிக் கொடி நாட்டிய அந்த வெண்தாடி வேந்தர் பெரியார் , "வெற்றி பெற்ற தமிழ்நாடே , வீர இளஞ் சிங்கங்காள், ஒப்பற்ற தாய்மாரே, உமக்கெல்லாம் எம் வாழ்த்து" என்று அழகிய அறிக்கை ஒன்று விடுத்தார்.

தமிழன் தொடுத்த போர் வெற்றி பெற்றது பெரியாரால் என்றது தமிழ்நாடு. "இல்லை, தமிழ்நாடே , உன்னால் தான் " என்றார் பெரியார். பெரியார் சொன்னவழி தமிழ் நாடு சென்றதால் தான் என்கிறோம் நாம். வாழ்க பெரியார்! அவர் சொல்வழி நின்று வெல்க தமிழ்நாடு!

கட்டாய இந்தி தொலைந்தது குறித்துத் தளபதி அண்ணா அவர்கள் கொழுஞ்சுவைத் தீந்தமிழில் விரத்தைப் பிழிந்தெடுத்துத் தமிழா கேள்' என்று சொல்லி , 22— 2— 40—ல் தமிழ் நாட்டிற்கு அளித்த "விடுதலை" தலையங்கம் இது :

கொட்டுவீர்! கொட்டுவீர் ! வெற்றிமுரசு கொட்டுவீர்! தமிழர்காள் பாகை நிமிர்த்தி வாகை சூடி வாருங்கள் வெற்றி விழாவுக்கு ! வந்தது நமது உழைப்பின் உறுபயன் ! கண் டோம் கடும் போரின் வெற்றியை ! வென்றோம் ஆண . வத்தை ! வீழ்த்தினோம் விபரீத இந்தியை! தொலைந்தது கட்டாய இந்திப் பீடை ! மாண்டது நம்மை மருட்டி வந்த அக் கொடுமை! அந்த ஆச்சாரியாரின் ஆணவம் அழிய , அவரது படையின் பதற்றம் பொசுங்க , அக்கிரகார ஆர்ப் பரிப்பு அடங்க, தமிழர் உள்ளத்தில் தேன்புக , வந்தது நல்லதொரு சேதி — தீர்ந்தது தமிழர் கண்ட தொல்லை. போயிற்று போயிற்று அந்தப் பொல்லாத கட்டாய இந்தி..

கட்டாய இந்திக்குப் பெருவாரியான பொது மக்களின் பலமான எதிர்ப்பு இருந்ததை ஒப்புக் கொண்டு சர்க்கார் கட்டாய இந்தியை ரத்து செய்து விட்டனர். அறிக்கை வெளியிடப்பட்டுவிட்டது. பள்ளிகளுக்கு உத்திரவு பிறக்கிறது. பார்ப்பன இந்திப் பக்தர்கள் மனம் பதைக்கிறது. ஆச்சாரியார் முகத்தில் அசடு வழிகிறது. ஒழிந்தது கட்டாய

என்ன போர் ! எத்துணைக் கஷ்டம் ! எவ்வளவு கிளர்ச்சி ! தமிழ் நாட்டிலே, ஏன், இந்தியா என்னும் நிலப் பரப்பிலேயே என்றும் கண்டும் கேட்டுமிராத இந்த மொழிப் போரை நாம் எவ்வளவு பாடுபட்டு நடத்தினோம். எண்ணினால் கோடி கோடி எண்ணங்கள் நெஞ்சிலிருந்து கிளம்பி நம்மை மறக்கவும் செய்யும்.

ஒரு திங்களா இரண்டு திங்களா நமது போர் ! ஓர் ஆண்டுடனாவது நின்றதா. நடந்ததே ஓராண்டுக்கு மேலாகவும். நடத்தினரே தமிழர். தமிழ்த் தாய்மார்கள் கிளம்பினரே தயக்கமின்றி.

ஆச்சாரியாரின் . மிரட்டல் எவ்வளவு கடுமையாகக் கிளம்பிற்று. அவரது ஆர்ப்பரிப்புக் கூட்டம் எவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்தது. கையில் கிடைத்ததைக் கொண்டு அடிப்பேன் என்றல்லவா ஆச்சாரியார் கிளம்பினார். முப்பதாண்டுகளாகத் தாமே கண்டித்து வந்த கிரிமினல் சீர்திருத்தச் சட்டத்தை எடுத்தார். சிறைக் கதவுகளைத் திறந்தார். சிந்தை கலங்காது தமிழர் சிறைக்கோட்டம் புகுந்தனர். தாய்மார்கள் குழந்தைகள் வயோதிகர் வாலிபர் வகுப்பு வேற்றுமையற்றன்றோ புகுந்தனர். பிடிப்பேன் பெரியாரை என்றார். "புறப்பட்டேன் சிறைக்கு — கதவைத் திறவும்" என்றார் அந்தப் புரட்சி வீரர். பெரியாருக்கு அபராதம் ஆயிரம் என்றார் ஆச்சாரியார் ; அகப் பட்ட மோட்டாரை ஏலத்தில் விட்டார். பெரியாரின் பெரியார் எங்கே , பிடி அவரையும், அடை சிறையில் என்றார் ஆச்சாரியார். அதுவும் நடந்தது. எங்கே வீறு கொண்ட தமிழர்களின் விடுதலைக்கு உழைக்கும் "விடுதலை"யின் ஆசிரியர் முத்துசாமியாரையும் பிடித்தடை என்று உத்திர விட்டார். பத்திரிகைக்கு ஜாமீன் என்றார். போலீஸ் பாதுகாவல் என்றார். இந்தி எதிர்ப்பு நிலையக் கொட்டகை யைப் பிரிப்பேன் என்றார். பிரித்தார். சோதனை, விடுதலை' நிலையத்திலும் நடந்தது. சுரு சொல்லும் பழியும் சுமத்தியும், தூற்றியும், அடக்குமுறை கொண்டு அடக்கியும் ஆச்சாரியார் ஆண்டார்.

அடங்கினாரில்லை தமிழர் ! பொருள் தந்தனர்; பொன் தந்தனர் ; நேரமும் உழைப்பும் நெடுகத் தந்தனர் ; சிறை யும் சிதைவும் ஏற்போம் என்றனர். "இந்திக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கமாம் நீங்கள் எல்லோரும் வாருங்கள் நாட் டினரே " என்று பரணி பாடினர். புறப்பட்டது படை. அணிவகுத்து நின்றனர் ஆண் — பெண் தொண்டர்கள் : ஆயிரத்து முந்நூறு பேருக்கு மேல் சிறை புகுந்தனர்.

அடங்கிற்றா அத்துடன் போர் ! இல்லை! அரைக்க அரைக்க மணக்கும் சந்தனம் போல, தமிழ் நாட்டில் போர் வாடை வீசலாயிற்று. வெட்ட வெட்ட ஊற்றெடுக்கும் தன்மைபோலத் தமிழர் ஆர்வம் பொங்கிற்று.

அந்தோ ! ஆட்சியின் மாட்சிமை தெரியாத ஆச்சாரி யார். தமிழரின் உள்ளத்தை எவ்வளவு புண்படுத்தினார்! அவரது அடக்கு முறைக்கு ஆளாகி, மகனை, மகளை விட் டுப் பிரிந்து சிறை சென்ற தாய்மார்களும் தகப்பன்மார்களும் எவ்வளவு ! தம் காதலரின் கொஞ்சுதலைக் கூட மறந்து எத்தனை இள மங்கைகள் சிறை சென்றனர். சேயைப் பிரிந்தனர் தாய்மார்கள். செல்வக் காதலியரைப் பிரிந்தனர் காளைகள். தொழில் இழந்தவர் பலர் . துயர்மிகு வாழ்வைச் சரி எனக் கொண்டவர் பலர்.

தந்தையர் தனையரைப் போய் வா போருக்கு" என்று அனுப்பினர். தாய்மார்கள் புறப்படு களத்துக்கு எனப் புத்திரனுக்கு உத்திரவிட்டனர்.

என்ன கொடுமை ! என்ன கொடுமை !! அந்த இரும்புக் கம்பிகளுக்குப் பின்னால் இளமையையும் இளமைக்குண் டான் இன்ப உரிமைகளையுங்கூட மறந்து ஏதேதோ எண்ணி வாடிய இளைஞர்கள் எத்தனைப் பேர் ! அந்த வாட்டந்தரும் — வாடைவீசும் குழம்பு எனும் சேறுகண்டு சிந்தை நொந்தவர் எத்தனைப் பேர் ! வானத்தில் இரவில் மிளிரும் விண்மீனை மாதக்கணக்கில் காணாது , நீல நிற வானத்தின் நில வொளியைக் காணாது, நெஞ்சில் உறுதி யுடன் , நடக்கட்டும் போர், நாம் இருப்பதும் இறப்பதும் ஒன்றே " என சிறையில் வாழ்ந்தவர் எவ்வளவு பேர்.

நெல்லுக் குத்திய கைகளும் கல்லுடைத்த கரங்களும் அரக்குக் காய்ச்சிய கரங்களும் அங்கு அடிமைபோல் நின்று அசைத்த தலைகளும் எவ்வளவு.

கொஞ்சமா நாம் பட்ட கஷ்டம் ! அன்பு அகிம்சை இரண்டுமே அணிகலனாகக் கொண்டு அந்தராத்மாவின் ஆதரவைப் பெற்ற மகாத்மாவின் கீழ் நின்ற பாரதமாதாவின் பரிவாரம் தமிழரைத் தவிக்கவிட்டது .

துரோகிகளும் தொடை நடுங்கிகளும் எதிரியின் படையில் இருந்து கொண்டு எல்லாம் என்றும் சதம் என்று எண்ணி இறுமாந்து இருந்தனர்.

தமிழரின் தன்மான உணர்ச்சி , அவர்களைத் துயர்க் கடல் புகுந்தேனும் கட்டாய இந்தியை ஒழித்துத்தீரவேண்டு மென்ற உள்ள உரத்தைக் கொடுத்தது.

25—2—38—ல் பிறந்தாள் கட்டாய இந்தி என்னும் கள்ளி. இவள் இங்கு வேண்டாம் என்ற இதோபதேசம் மாதக் கணக்கில் நடந்தது. கூட்டங்கள் கணக்கிலடங்கா. நிபுணர்கள் கண்டித்தனர் கட்டாய இந்தியை. அசையவில்லை ஆச்சாரியார். கேட்டாரில்லை பெரியோர்கள் கூறிய பொன் மொழிகளை . அவருக்குத்தான் காது கேளாதே ! தமிழரின் தவிப்பைக் காணும் என்றனர். கண்டாரில்லை கருப்புக் கண்ணாடியார். காலமெல்லாம் தமது ஆட்சி நடக்குமென எண்ணிக் காலம் கடத்தினார் .

அறுந்தது தாலியொன்று! அலறினார் அய்யோ என்று ஒரு மங்கை. துடித்தனர் தாளமுத்துவின் தோழர்கள். தாளமுத்துவின் மரணமும் அதற்கு முன்னர் நலிந்த மெலிந்த நரைத்த தந்தையைத் தவிக்கவிட்டு நம் நடராசன் மாண்டாரே, அந்த மரணமும் தமிழ் நாட்டின் சரிதத்தில் என்றென்றும் இரத்தக் குறியுடன் எழுதப் படவேண்டிய சோகச் சோதியாரும்.

நடராசன் மாண்டார்? நடராசாகள் தோன்றினர் நானாபக்கங்களிலும். அறுந்தது ஒரு தாலி ! ஆச்சாரியாரின் ஆணவமும் அன்றே அறுந்தது. ஆனால் அதில் மெல்ல ஒட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தார்; நிலமிசை பின்னர் நெடுமரமென வீழ்ந்தார்.

அவர் கனம்' கரைந்து போன பின்னர் வந்த கவர்னர் ஆட்சியினர் புண்பட்ட தமிழரின் மனதுக்குப் புனுகிட்டார். சிறையிலிருந்தோரை வெளிவிட்டனர். போர் முடியாமுன் னம் பொழுது புலருமா ! கிளர்ச்சி நிற்கவில்லை. இனி, மேற் கொண்டு பள்ளிகளில் இந்தி கட்டாய பாடமாகப் புகுத்துவ தில்லை என்றனர் கவர்னர் ஆட்சியினர். அது பலன் தருமா? இருக்கும் கட்டாய இந்தியை

எடுத்துவிடவேண்டும் — இந்தி ஒழிக என்றனர் தமிழர் . பொறு! பொறு! இரு! இரு! என்றனர் புதிய ஆட்சியினர் .

பொறுத்தோம்! இருந்தோம்! 3—6—38—ல் துவக்கிய தீவிர கிளர்ச்சியான சிறைபுகுதல் சர்க்கார் கேட்டுக் கொண்டபடி நிறுத்திவைக்கப்பட்டது.

சர்க்கார் சாய்வு நாற்காலியில் இருந்தனர். ஆச்சாரியார் கூட்டம், கட்டாய இந்தியையாவது கவர்னர் ஆட்சியினர் ரத்து செய்வதாவது என்று ஏளனம் பேசினர்.

இந்தி எதிர்ப்பு கயா' என்றது ஒரு ஏமாளி .

"நாங்கள் செய்துவிட்டுப்போன வேலையில் கவர்னர் ஆட்சியினர் கை வைத்தால் , கிளம்புவோம் போருக்கு" என்றார் ஆச்சாரியார்.

அயர்ந்தனர் சர்க்கார் . கண்மூடிப் போக்கும் கவலையற்ற தன்மையும் வளர்ந்தன.

எனவே காஞ்சியில் இந்தி எதிர்ப்பு அவசரக் கூட்டம் கூடிற்று 31—12—39—ல் . அங்கு விட்ட இடத்திலிருந்து தொடங்கி நடத்துவோம் என முடிவு செய்யப்பட்டு கமிட்டியொன்று நிறுவப்பட்டது.

விடுதலை 2—1—40—ல் கவர்னர் ஆட்சியினர் தமிழரின் மனப்புண்ணை ஆற்ற முன் வருகிறார்களா , அல்லது மறுமுறை தமிழரைப் போருக்கு அழைக்கிறார்களா" என்று கேட்டிருந்தது.

கவர்னர் ஆட்சியின் போக்கு என்ன என்ற கேள்வி எங்கும் கிளம்பிற்று.

இவ்வளவுக்கும் பிறகு பிறந்தது புதிய உத்திரவு; கட்டாய இந்தி ஒழிந்தது.

மகிழ்கிறோம் இத்தனை நாள் பொறுத்தேனும் இம் மாகாணக் கவர்னர் உண்மையை உணர்ந்தது கண்டு; இதனை உணர்த்த நாம் பட்ட கஷ்டத்தை எண்ணி. இந்த உண்மையை உணர்த்துவிக்க இவ்வளவு பாடுபட வேண்டி இருந்ததே என்று எண்ணிப் பார்த்திடும் போது இன்பம் — ஒருவிதப் புதுவகை இன்பம் — உணரத்தான் முடியுமே தவிர உரைக்க முடியாத இன்பம் நமது உள்ளத்தில் பொங்கிப் பொங்கி வழிகிறது.

தமிழர் முகமெல்லால் மலர்கிறது. தமிழர் தலை நிமிர்ந்து புன்முறுவலுடன் நடமாடுகின்றனர். களிப்பு கண்களின் ஒளி மூலமும் நடையின் அழகு மூலமும்

வாழ்த் தொலி மூலமும் வருகிறது ! பரவுகிறது ! பூரிக்கின்றனர் தமிழர் .

இந்தியாவில் இதுவரை நடத்தப்பட்ட சத்தியாக்கிரகம் என்ற போராட்டத்தில் வெற்றி கண்டது இரு முறைகளில் தான். ஒன்று வைக்கத்தில்! மற்றொன்று இன்று ! இரண்டிலும் பெரியார் ஈ. வெ. ராமசாமியே போர்க்களத்தில் சளையாது நின்றவர்.

அந்த வெண்ணிறத் தாடி , வெற்றிக் காற்று வீச அழகு பெற ஆடி அசைகிறது. "சொல்லு தாத்தா, சொல்லு தாத்தா , சுகம்பெற வழி ஒன்று சொல்லு தாத்தா " என்று தமிழர் கேட்கின்றனரே , இன்று பிறந்த கட்டாய இந்தி ரத்து சம்பவம் அதற்குக் கூறுகிறது பதில், 'நில்லு தம்பீ , நீ நில்லு தம்பீ , நான் சொல்லும் வழி சென்றால் இன்பம் உண்டு தம்பி' என்று.

எதனால் வெற்றி பெற்றோம்? பஜாஜ் பிர்லாவாலா? பத்திரிகைகள் பல இருப்பதாலா? பிரசாரப் படை உண்டா ? இல்லை. உறுதி , உழைப்பு, ஒன்றுபட்ட தன்மை , கட்டுப்பாடு இவைகளாலேயே நாம் பெற்றோம் வெற்றி. இன்று. நாம் வெற்றிப் பெருமையுடன் "ஓடிவந்த இந்திப் பெண்ணே கேள் நீ தேடி வந்த கோழையுள்ள நாடி தல்லவே " என்று கூறுகிறோம்.

வந்த மங்கை பங்கமடைந்து போகிறாள் வெளியே. வெற்றி! வெற்றி !! தமிழர்களே இந்த வெற்றி நம்மை நாம் உணரச் செய்த வெற்றி ; பலம் பொருந்திய சர்க்காருடன் போராடிப் பெற்ற வெற்றி.

இன்னமும் வெற்றி வேண்டுமா ! நிச்சயம் வேண்டும். அப்படியெனில் இன்னமும் போர் உண்டோ ! உண்டு ! தமிழ்நாடு தமிழருக்காகும் வரையில் நாம் போரிட்டுத்தான் தீரவேண்டும். எனவே தமிழரே, நீவிர் இந்த வெற்றி தரும் உற்சாகத்தை உண்டு , உமது பலத்தை உணர்ந்து, நில்லுங்கள் முன்னணியில் . தொடுப்போம் போர் ! காண் போம் வெற்றி |

தமிழா உன் தோள்வலிமை தரணி எல்லாம் அறியாதோ என்பது கீதம் மட்டுமல்ல, அது உண்மையுங்கூட.